## இந்நூலைப்பற்றி

காதல், வீரம், கையாற்றவலம் – முப்பெருஞ் சுவையும் இப்பெருங் காவியத்தில் முகிழ்த்து நிற்கும். காதலும் அவலமும் கரையென நிற்க வீரப் பேராறு விறிட்டுப் பாயும். காவியம் எங்கும் கன்னல் தமிழே மேவிடும். படிக்கத் தொடங்கின் இடையில் நிறுத்தும் எண்ணம் எழாது!






'கவிபரசு'

முடியரசன்

வள்ளுவர் பதிப்பகம்

வடக்கு இராசவீதி

புதுக்கோட்டை

# VEERA KAAVIYAM

SUBBARAYALU - MUDIYARASAN

(Born: 7 - 10 - 1920)

GANDHIPURAM – KARAIKUDI – TAMIL NADU.



VALLUVAR PATHIPPAHAM SERIES – 10

FIRST EDITION OCTOBER, 1970.

Price Rs. 5 - 00

Published by ·

**VALLUVAR PATHIPPAHAM,**

**North Main Street, PUDUKKOTTAI,**

Tiruchirappalli District, Tamil Nadu.

THE SOUTH INDIA PRESS, KARAIKUDI – PHONE : 300

60/2

# பதிப்புரை

கவிஞர் முடியரசன் அவர்களால் எழுதப் பட்ட இவ் வீரகாவியம், வீரவரலாற்றை அடிப்படையாகக் கொண்டு உருவாக்கப் பட்டதாகும். இந்நூல் வீரச்சுவை ததும்பும் 476 எண்சீர் விருத்தங்களால் யாக்கப் பட்டுள்ளது.

தமிழன்னைக்குத் தனித்தனிப் பாமலர் தூவி வழிபடுவதோடன்றிக் காப்பிய மாலை களையும் சூட்டிக் களித்துவரும் இவர், இம் மணங்கமழ் மாலையையும் தொடுத்துத் தந்துள்ளார்.

சொல்லழகும் நடையழகும் மிளிர்ந்து, உவமைப்பொலிவும் உள்ளுறைச் செறிவும் பயின்று, கருத்தாழமும் கவிதை நயமும் மிடைந்து, அழகோவியமாக வெளிவரு கிறது இக் காவியம்.

காப்பியம் அளித்த கவிஞர்க்கும், ஆக்கமும் ஊக்கமும் அளித்துவரும் உங்கட்கும் நன்றிகூறிப் பெருமகிழ்வுடன் இந்நூலை வெளியிடுகிறோம். வணக்கம்.

புதுக்கோட்டை
அக்டோபர், 1970

பு. அ. சுப்பிரமணியன்
பதிப்பக உரிமையாளர்.

## நன்றியுரை

கோபிச்செட்டிப் பாளையத்தைச் சார்ந்த பாரியூர் நஞ்சக் கவுண்டன் பாளையத்து நல்லாக் கவுண்டர் இல்லத்திலிருந்து 7—6—1966-இல் இந்நூலை எழுதி முடித்தேன். அவ்வமயம் அவர்தம் துணைவியாராகிய வணக்கத்திற்குரிய வேலம்மாள் அவர்கள் காட்டிய தாயன்பும் துணைபல புரிந்த மக்களின் பேரன்பும் என்றும் நினைவுகூரத் தக்கன.

இந்நூலை அச்சிட்டு வெளிக்கொணர்ந்த என்தந்தைக்கு நிகராய அண்ணல் சுப்பிரமணியனார் அவர்கட்கு யான் என்றும் உரியேன்.

நூல் அச்சேறுங்கால் அனைத்து வகையானும் துணைபுரிந்த என் இளவல்மார் புலவர் ஆ. பழநி, புலவர் முத்தரசன் இருவர்மாட்டும் நன்றி கலந்த அன்பினேன்.

காரைக்குடி
அக்டோபர், 1970

அன்புள்ள,
முடியரசன்

# கவிஞரைப் பற்றி

பெரியகுளம் என்றஊரில் சுப்பராயலு சீதாலட்சுமி என்பார்க்கு 7—10—1920இல் நன்மகனுகப் பிறந்த இவர் அவ்வூரிலிலேயே தொடக்கக் கல்வியைக் கற்ருர். அப் பருவத்திலேயே கவிதை உணர்வை ஊட்டி ஊட்டி வளர்த்தார் இவர்தம் தாய்மாமனுகிய துரைசாமிஎன்பார். மேலைச்சிவபுரி-கணேசர் செந்தமிழ்க் கல்லூரியில் பயின்று புலவர் பட்டம் பெற்ற இவர் சென்னையில் 1946 இல் முத்தியாலுப் பேட்டை உயர்நிலைப் பள்ளியில் இரண்டாண்டுகள் தமிழாசிரியராகப் பணியாற்றியுள்ளார். இப்பொழுது காரைக்குடி மீ. சு. உயர்பள்ளியில் தலைமைத் தமிழாசிரியராகப் பணிபுரிகின்ருர்.

1949இல் கலைச்செல்வி என்னும் நலத்தகையாரை தமிழ்நெறிக் காவலர் மயிலை சிவமுத்து அவர்கள் தலைமையில் கலப்பு மணம் செய்துகொண்டார். ஆறுகுழந்தைகளுக்குத் தந்தையான இவர் இனிப் பெற்றெடுக்க விரும்புவது தலைசிறந்த நாடகக் காப்பியத்தையே என்கிருர். பாரதிதாசன் பரம்பரையில் முன்னணியில் நிற்கும் இவர்தம் கவிதைகள் 1966இல் தமிழக அரசின் பரிசிலைப்பெற்றதோடு சாகித்ய அகாடமியால் இந்தியிலும் ஆங்கிலத்திலும் மொழி பெயர்க்கப்பட்டுள்ளன.

இனிய இயல்பும், குழந்தை மனமும், உயரியகொள்கையும், பிறழா உறுதியும் கொண்ட இவர்தம் கவிதைச் சிறப்பினைக் கண்டறிந்து, தவத்திரு குன்றக்குடி அடிகளார் பறம்புமலையில் நிகழ்ந்த பாரி விழாவில் கவியரசு எனப் பட்டம் வழங்கிச் சிறப்புச் செய்தார். மரபு பிறழ்ந்த கவிதைகளை அறவே வெறுப்பவர் இவர்.

தமிழே தெய்வமென வணங்கும் இவர், தமக்கு மொழியறிவூட்டிய ஆசிரியர்களையும் தெய்வமென்றே போற்றுகின்ருர்.

# காப்பிய உறுப்பினர்

| | |
|---|---|
| மதலைக்கோ | —மூவகநாட்டு வேந்தன் |
| மாவேழன் | —மூவகத்தின் படைத்தலைவன்; உலக வீரன். |
| வெண்கோடன் | —மூவகத்திற்குட்பட்ட வெண்ணகரத் தலைவன். |
| மானத்தி | —வீரமிக்க வெண்ணகரத்துப்பெண் |
| கோவூரன் | —மாவேழன் துணையால் முடிபெற்றவன். |
| வெண்பூதன் | —மதலைக்கோவின் பகைவன். |
| நம்பியன் | —மதலைக்கோவின் அன்பிற்கும் மதிப்பிற்கும் உரிய அமைச்சன். |
| பெருங்கனகன் | —நாவலநாட்டு வேந்தன். |
| வயத்தரசன் | —நாவலத்துக்குட்பட்ட வயந்த நகரத்தரசன். |
| வேல்விழி | —வயத்தரசன் மகள். |
| முறுவலன் | —மாவேழனுக்கும் வேல்விழிக்கும் பிறந்த மகன்; கோளரி என்னும் சிறப்புப் பெயரினன். |
| மாவலியன், தடவலியன் | —பெருங்கனகன் படைத்தலைவர்; கோளரிக்குத்துணையாக வந்தவர். |
| இளவேலன் | —கோளரிக்கு உறவினன்; மெய்காப்பாளன். |

# தமிழ் வாழ்த்து

மலரனைய திருவடியில் சிலம்ப ணிந்து
மணியொளிரும் மேகலையை இடைக்க ணிந்து
பலர்புகழ்சிந் தாமணியை மார்பிற் பூண்டு
பார்புரக்கும் திருக்குறளே செங்கோ லாகக்
குலவுபுகழ்த் தூதுமுதல் தொண்ணூற் ருறு
குறுநூல்கள் பணிந்துநின தேவல் செய்ய
நலமுயர்நற் ருெகைநூல்கள் ஆயம் ஆக
நன்கமைதொல் காப்பியமாம் கட்டில் ஏறி,

பாவலர்தம் நெஞ்சமெலாம் ஆட்சி செய்யும்
பைந்தமிழே நின்வாயிற் புறத்தே நிற்கும்
காவலன்யான்; ஆண்டறியேன் எனினும் நின்றன்
காவலன்யான்; எனையாளும் அம்மே உன்றன்
கோவிலுறும் வாயிலன்யான்; பெருமை முற்றும்
குறித்துரைக்கும் வாயிலன்யான்; அதனுல் என்றன்
பாவிலுறும் சொல்லிலெலாம் எழுத்தி லெல்லாம்
பாட்டுவெறி யூட்டியருள் அன்னுய் நன்றே.

# காப்பியப் படலங்கள்

காணத்தால் இயல்வளைகள் விளங்கும் செங்கை
  கச்சுக்குள் எடங்காமல் அழுங்தும் கொங்கை
பாணத்தால் வடித்தெடுத்த விழியின் ஓரம்
  பாய்ந்துழல்வோன் இவ்வனைத்தும் கண்டான் வீரன்.

— காட்சிப் படலம் 104.

## இயல் 1

முனைப்பாலும் நினைப்பாலும் பகைமை விஞ்சி
மூவகமும் நாவலமும் முரணி நிற்கும்.

விண்தொட்டு முகில்மணந்த மலைமுகட்டின்
வெண்ணிறத்துப் பனித்திரள்கள் உருகி நீராய்ப்
பண்பட்ட இசையெழுப்பி அருவி யாகிப்
பாறையெலாம் முழவொலிக்கப் பாய்ந்து வீழ்ந்து
மண்தொட்டுச் சென்றுநில மகளைக் கூடும்;
மனமகிழப் பொன்கொழித்து வளங்கள் காட்டும்;
தண்ணிட்டு விரைந்துசெலும் புனலா றென்னும்
தனிப்பெயரைத் தாங்குமது வையங் காக்கும். 1

காக்கின்ற புனலாற்றின் தென்புறத்தே
கடிமதில்சூழ் மூவகமென் றொருபேர் தாங்கும்
தேக்குபுகழ்த் திருநாடு விளங்கித் தோன்றும்;
திசையெட்டும் அந்நாட்டை வணங்கி நிற்கும்;
பூக்கின்ற மலர்தோய்ந்து தென்றல் வீசப்
பொழிநறவந் திரண்டோடும் பொழில்கள் சூழும்;
தேக்குமணி மாளிகைகள் நிவந்து நிற்கும்
தெருவனைத்தும் நீண்டகன்றே எழிலைக் கூட்டும். 2

---

தண்ணிட்டு—குளிர்ந்து நறவம்—தேன். நிவந்து—உயர்ந்து.
கடிமதில்—காவல் பொருந்திய மதில்.

கலகலவென் ருெலித்துமரம் தலைய சைக்கக்
   காற்றுலவுங் கனிச்சோலை சூழும் நாடு;
சலசலவென் ருர்த்தருவி இறங்கும் சாரல்
   சந்தனமும் அகில்தேக்கும் காட்டும் நாடு;
நிலமுழுதும் செந்நெல்லும் செங்க ரும்பும்
   நீள்கமுகு வாழையொடு செழிக்கும் நாடு;
பலவளமும் கெழுமி நலம் ஓங்கும் இந்தப்
   பழநாட்டை ஆண்டிருந்தான் மதலைக் கோமான். 3

வளம்பொலிந்து நிலங்கொழிக்கச் செய்யும் ஆற்றின்
   வடபுலத்தே நாவல்நா டென்று சான்ருேர்
விளம்புகின்ற பேர்படைத்த பெருநா டொன்று
   விளக்கமுறு தொல்புகழாற் சிறப்புற் ருேங்கும்;
களம்புகுந்து திறங்காட்டி வாகை சூடிக்
   களிக்கின்ற தொகைமறவர் சூழும் நாட்டில்
இளம்பருவப் பெருங்கனகன் செங்கோ லோச்சி
   இணையில்லாச் சூழ்ச்சியினுல் மேன்மை பெற்ருன். 4

இனத்தாலும் மனத்தாலும் பண்பாட் டாலும்
   இருவேறு நெறியினவாய் இயங்க லானும்,
தனத்தாலுங் குணத்தாலும் வேறு பட்டுத்
   தனித்தனியே ஆட்சிமுறை நடத்த லானும்,
முனைப்பாலும் நினைப்பாலும் பகைமை விஞ்சி
   முரண்பட்டுப் பலகாலும் சமரே வேண்டும்
வினைப்பாலிற் கொலைப்பாலில் மூழ்கி மூழ்கி
   விளம்பியஅவ் விருநாடும் மகிழ்ந்து நிற்கும். 5

---

கெழுமி—பொருந்தி. சமர்—போர்.

படைத்தலைமை ஏற்றுள்ளோர் தனித்தி றத்தால்
பயிற்சிமிகு போர்த்திறத்தால் வெற்றி தோல்வி
படைத்திடுதல் இருபுறத்தும் மாறி மாறிப்
பகலிரவு சுழல்வதுபோல் இங்கு மங்கும்
அடிக்கடிசென் றலமந்து திரியும் மீளும்;
ஆதலினுல் ஒருநாட்டில் ஏற்றங் காணும்;
கிடைத்ததுவும் மறுநாளில் மாற்றங் காணும்;
கீழ்மேலாய் மேல்கீழாய்ச் சுழலும் நாடே. 6

---

அலமந்து—சுழன்று.

## இயல் 2

முரூவலியன் மாவேழன் என்னும் வீரன்
மூவகத்தின் படைத்தலைமை பூண்டு நின்றான்.

அக்காலை மூவகத்தின் படைநடாத்தும்
ஆணழகன் பலகளிற்றின் வலிமை மிக்கான்;
எக்காலும் போர்க்களமே இருப்பாக் கொண்டான்
ஏறனையான் மாவேழன் எனும்பேர் பூண்டான்;
மிக்காரும் ஒப்பாரும் காணாச் செம்மல்
மேவலரை நடுக்குறுத்தும் இமையா நோக்கன்;
புக்காரும் வெலற்கரியன்; அவன்பேர் கேட்டால்
பூவேந்தர் நடுநடுங்கிப் பதுங்கி நிற்பர். 7

மூவகமே அவன்வணங்கும் அன்னை யாகும்;
முதல்மகனும் மன்னவனே தந்தை யாவன்;
சேவகரே மனம்விழைந்த சுற்ற மாவர்;
சிரிப்பொளிரும் இடைமருவும் செவ்வாய் வாளின்
நாவகமே காதலியின் இதழ்க ளாகும்;
நள்ளார்தம் கூர்வாளால் முகத்தும் மார்பும்
பாவியமேல் விழுப்புண்ணே முத்த மாகும்;
பகைவருடல் நிறைகளமே மெத்தை யாகும். 8

---

மேவலர்—பகைவர். புக்குஆரும்—யாரும் புகுந்து. ஒளிரும்—விளங்குகின்ற. நாஅகம்—விளிம்பு. நள்ளார்—பகைவர். பாவிய—படர்ந்துள்ள.

கூர்வேலும் வாய்வாளும் பகையைத் தாக்கிக்
குவிக்கின்ற உடலங்கள் சிந்தும் செந்நீர்
பார்மேவி ஒன்ருகி ஓடும் ஆற்றின்
பரப்பதுவே அவன்குதித்து நீந்தும் வெள்ளம்;
ஏர்போலும் ஒருகருவி இடித்துத் தாக்கி
எழுகின்ற கூக்குரலே யாழின் பாட்டு;
சேர்காலை இருவாளும் எழுப்பும் ஓசை
செவிக்கினிய முழவோசை அவனுக் காகும். 9

ஆடரங்கம் போர்க்களமே அவனுக் காகும்
ஆர்த்துவரும் மறப்படைகள் பொம்மை யாகும்;
கூடரங்கில் வெட்டுண்ட பகைப்பு லத்தார்
குறையுடலம் எழுந்தெழுந்து குதிக்குங் காட்சி
நாடகங்கள் போலவற்கு மகிழ்ச்சி நல்கும்;
நாளெல்லாம் இஃதொன்றே தொழிலாக் கொண்டு
நாடனைத்தும் பணிவித்தான்; மூவ கத்தின்
நற்பெயரே மிகுவித்தான்; புகழ்கு வித்தான். 10

---

பார்—நிலம்.

## இயல் 3

**மூவகத்தின் வலிமைமிகப் பொலியக் கண்டு
நாவலத்துப் பெருங்கனகன் நாணி நின்றான்.**

மூவகத்தின் பெயரோங்கி வலிவும் ஓங்கி
முன்னிற்கும் பகையின்றித் தலைமை தாங்கிப்
பூவகத்துப் பொலியுமதன் பெருமை கண்டு
புழுங்கிமனம் வெதும்பிஅழுக் காறு கொண்ட
நாவலத்துப் பெருங்கனகன் நாண முற்றான்;
நாடோறும் அந்நினைவால் வாட லுற்றான்;
நோவகத்துப் பெருகிவரப் பகைவர் நாட்டை
நுண்மதியால் வெல்லுதற்கு நினைத்தான் கேட்டை. 11

'தோள்வலிமைப் படைசெலுத்தும் தலைவன் வேழன்
துணையிருக்க மூவகத்து மதலைக் கோவை
ஆள்வலிமை மிக்கிருந்தும் போரில் வெல்லல்
அரிதாகும்; மன்னனுக்குத் துணைநிற் பானைச்
சூழ்மதியாற் பிரித்தொதுக்கல் வேண்டும்; இன்றேல்
தோன்றலவன் உயிர்தானே பிரிதல் வேண்டும்;
நாள்வரு'மென் றுண்ணினைந்து வேந்த னோடு
நட்புரிமை பெருங்கனகன் பூண்டு நின்றான். 12

---

பூ—உலகம். நோவு—வருத்தம். உண்ணினைந்து—உள்நினைந்து,

## இயல் 4

மன்னவன் மொழியால் மனமிகப் புலந்து
பன்னரும் வேழன் படர்ந்தனன் பிரிந்தே.

ஆட்டாளுந் திறமில்லான் மதியு மில்லான்
அரியணையில் அமர்தகவு மில்லா னேனும்
நாட்டாண்மை பெற்றிருந்தான் மதலைக் கோமான்;
நடத்தையெலாம் பெயருக்குப் பொருந்தி நிற்கும்;
காட்டாளி வலிமைக்குக் காட்டாய் நின்று
கருதலரை வெருவுறுத்தும் மாவே ழற்குக்
கூட்டாளி எனவிருப்பான் ஒருகால்; பின்னர்க்
குணமாறிப் பகையாளி போல நிற்பான். 13

கூடுவதும் மாறுவதுந் தொழிலாக் கொண்ட
கொற்றவன்பாற் படைத்தலைவன் சினந்து தன்னூர்க்
கோடுவதும் சான்றோர்கள் சந்து செய்ய
உளமிரங்கி மீளுவதும் வழக்க மாகும்;
ஏடுவிரி மலர்த்தொடையல் மார்பின் மன்னன்
'என்பிழைக்கு வருந்துவல்யான்' என்று ரைக்கும்;
நீடுபுகழ்ப் பெருவீரன் நாட்டின் காதல்
நெடிதோங்கி நின்றமையாற் குறைபொ றுக்கும். 14

---

ஆட்டாளும் திறம்—நிருவகிக்கும் ஆற்றல். ஆளி—யாளி என்னும் விலங்கு. காட்டு—எடுத்துக் காட்டு. கருதலர்—பகைவர். சந்து—சமாதானம். தொடையல்—மாலை.

வருபொருளை ஆய்ந்துணரா மன்னன் ஓர்நாள்
வாய்காவா துரைத்தமையாற் பிணங்கி வேழன்
'ஒருபொழுதும் ஈங்கினிநான் உறைதல் வேண்டேன்;
ஒன்னார்தம் படைநாப்பண் சிக்குங் காலம்
வருபொழுது தன்மடமைக் கிரங்கி வேந்தன்
வாய்விட்டுப் புலம்புவதைக் காண்பேன்' என்று
தரியலர்க்குக் கூற்றுவோன் பரிமா வேறித்
தனிமையொடு கடிநகரின் நீங்கிச் சென்றான். 15

சினந்தெழுந்த படைமுதல்வன் புரவி ஏறிச்
செல்நெறியுந் தேர்கிலனாய் மனத்தின் போக்கில்
வனங்கடந்து வழிகடந்து புனலா றென்னும்
வளநதியுங் கடந்திருபால் இயற்கை காட்டும்
மனங்கவரும் எழிலெல்லாங் கண்டு துய்த்து
வயந்தநகர்ப் புறத்தொருபாற் சார்ந்து, மேக
இனந்தவழும் மலைச்சாரல் நண்ணி, ஆங்கண்
இழிதருமோர் அருவியினைக் கண்டு நின்றான். 16

---

வருபொருள்—எதிர்காலச் செய்தி, ஒன்னார், தரியலர்—பகைவர். நாப்பண்—நடு. பரிமா—குதிரை, கடிநகர்—காவல்நகர். தேர்கிலனாய்—ஆராயாதவனாகி, இழிதரும்—இறங்கும்.

## இயல் 5

**வழிபல கடந்து வருமா வேழன்**
**கழிமிகு களைப்பாற் கண்ணயர்ந் திருந்தான்.**

வழிகடந்த தளர்வகற்றி, வேட்டம் ஆடி,
வருத்துபசி களைந்தொருபால் ஆலின் நீழல்
விழிகுவிந்து துயிலுமுனம் பரிமு கத்து
வீக்குகடி வாளமொடு சேணம் மாற்றிக்
கழிமிகுந்த நடையலுப்புக் களைவான் வேண்டிக்
கட்டவிழ்த்துப் புற்றரையில் மேயச் செய்து,
வழியடர்ந்து கொடிபடர்ந்த கான கத்தில்
வட்கார்தம் எல்லைதனிற் கண்ண யர்ந்தான். 17

மேய்கின்ற அப்பரிமான் அவற்குத் தோழன்;
மெய்வலியும் மனவலியும் மிக்க தாகும்;
பாய்கின்ற வேகத்திற் காற்றை விஞ்சும்;
பாரிலதை நிகர்க்கின்ற பரியொன் றில்லை;
மேய்கின்ற பொழுதத்தும் அவனை நோக்கி
மென்புல்லைச் சுவைத்திருக்கும்; கதிரோன் மேற்கில்
சாய்கின்ற வேளைவரக் கனைத்த வண்ணம்
சரிவிலது திரிந்ததுவே அங்கு மிங்கும். 18

---

வீக்கு—கட்டிய. வட்கார்—பகைவர்.

## இயல் 6

**பாவேழன் ஏறிவந்த பரிமா தன்னை**
**வயந்தநகர்ப் பெருவீரர் கவர்ந்து சென்றார்.**

வயந்தநகர்ப் பெருவீரர் சிலர்தாம் கூடி
　மலைச்சரிவின் நெறியிடையே வருவோர் ஆண்டு
வயங்கெழுமும் ஒருபரிமான் கலனை யின்றி
　வாய்பற்றுங் கடிவாளக் கட்டு மின்றி
நயந்துபசும் புன்மேய்ந்து திரியக் கண்டார்;
　நல்லியல்சேர் இவுளியதன் தோற்றங் கண்டு
மயங்கினராய்க் கவர்ந்துசெலக் கயிறு வீசி
　மடக்கினர்அம் மாமடங்கல் மடங்க வில்லை. 19

திடங்காணும் அம்மறவர் திரண்டு நின்று
　திறமுழுதும் பயன்படுத்தி முயன்றா ரேனும்
அடங்காது தப்பியது வேழன் பாய்மா;
　ஆசைமனம் அடங்காமல் எழுந்து விட்டால்
படும்பாடு படுவரன்றி விட்டார் யாரே?
　பாய்புரவி பற்றுதற்கே முனைந்து நின்றார்;
கடன்காரன் இரக்கமிலார் நடுவில் நின்று
　கலங்குதல்போல் அப்பரிமான் கலங்கக் கண்டார். 20

---

வயம்—வெற்றி. கலனை—சேணம். இவுளி—குதிரை,
மாமடங்கல்—சிங்கம்போன்றகுதிரை.

சுருக்கிட்டு வலித்தார்கள்; கனன்று சீறித்
துள்ளுபரி கனைத்தமையால் வீரர் அஞ்சி
வெருக்கிட்டு விரைந்தார்கள்; பதுங்கி நின்று
வெற்றிகொள வஞ்சனையாற் சூழ்ந்து வந்தார்;
'செருக்குற்ற புரவிதனை அடக்க லின்றித்
திரும்புகிலோம்' எனவுரைத்துக் கயிறு வீசிப்
பெருக்குற்ற தோள்வலியாற் பிணித்தி ழுத்தார்;
பெரும்பொழுது போராடிக் களைத்த தாங்கே. 21

கொய்யுளையாற் பொலிபுரவி முகத்தான் மோதிக்
கொட்புற்றுக் கொட்புற்றுப் புறங்கால் கொண்டு
மெய்யுளைய உதைத்துதைத்துத் துள்ளித் துள்ளி
மேவலர்தம் பிணிப்பகற்ற இயலா தங்குச்
செய்வழியும் அறியாமற் களைத்த லுத்துத்
திகைப்புறுங்கால் அவ்வீரர் இறுகக் கட்டி
மெய்ந்நலிய வயந்தநகர்க் கீர்த்துச் சென்றார்;
மேலவனைப் பிரியாமா பிரிந்த தந்தோ! 22

---

வலித்தார்—இழுத்தார். கொட்புற்று—சுழன்று.

## இயல் 7

மாவேழன் மன்முடைந்து பகைவர் நாடாம்
வயந்தநகர் தனிற்புகுந்தான் பரிமா வின்றி·

களைத்துறங்கும் பெருவீரன் கண்விழித்தான்;
கடுநடைய புரவிதனைக் காணு தங்கு
விளித்ததன்றன் பெயர்கூறிக் கூவி நின்றான்;
விடையொன்றுங் கேட்டிலனால்; உரத்து மீண்டும்
உளைப்பரிமா தனைப்பலகால் அழைத்தா னாக,
ஒருகுறிப்பும் காலடியின் ஒலிப்பும் கேளான்;
தளைப்பறியா மறப்புரவி அடிச்சு வட்டின்
தடம்பற்றி நடந்தப்பால் தேடிச் சென்றான். 23

ஒருமுறைநான் அழைப்பினுமென் குரலைக் கேட்டே
ஓடோடி என்பால்வந் தருகில் நிற்கும்
அரும்புரவி யாங்குளதோ எனவ ருந்தி
அந்நெறியே ஏகுமவன் வழியின் நாப்பண்
மருவுபரி அடிக்குளம்பும் வளைத்து நின்ற
மாந்தர்தம தடிச்சுவடும் துதைந்து தோன்ற,
மருவலர்தாம் கவர்ந்தனரென் றெண்ணி நெஞ்சம்
வருந்தினனாய்ச் சுவடுபடும் நெறியிற் சென்றான். 24

---

தளைப்பு—கட்டு. துதைந்து—நெருங்கி,

'ஏறுபரி ஒன்றிலனாய்ச் சூழ்ந்து செல்லும்
ஏவலருங் காவலரும் இல்லா னாகி,
வீறுபெறும் மாவீரன் தனிமை எய்தி,
வீதிவழி தளர்நடையான் வருகின் றா'னென்
றூறுபடப் பேசுவரே! மாற்றார் என்னை
உருக்குலைந்த தோற்றத்திற் காண நேரின்
வேறுபட எள்ளிநகை செய்வ ரே! நான்
வீணருக்குப் பழிப்பொருளா ஆனேன் அந்தோ! 25

எளியர்சிலர் பொருதிவனை வீழ்த்தி விட்டே
இவன்பரிமா தனைக்கவர்ந்தார் போலும் என்றும்
துளியளவும் பிரியகிலாப் புரவி காக்குந்
துணிவிலன்நம் அரசெதிர்க்க வலனோ என்றும்
இளிவரலுக் கிவனொருவன் என்றுங் கூறி
ஏளனங்கள் புரிகுவரே! எனவ ருந்தி
ஒளிகுறையும் முகமுடையான் பரிமாத் தேடி
ஒன்னலர்தம் நாட்டகத்துப் புகுந்து சென்றான். 26

---

ஒன்னலர்—பகைவர்.

## இயல் 8

வயந்தநகர் புகுந்துவரும் மாவே ழற்கு
வரவுரைத்தே எதிர்கொண்டான் வயந்த நாட்டான்.

தனக்குவமை எவருமிலான் தறுக ணாளன்;
தணப்பரிய வெகுளியினன் தனிய னாகி,
மனக்கவலை மீதூர ஊர்தி யின்றி,
மாவேழன் வயந்தநகர் புகுந்த செய்தி,
தனைத்தொழுது மன்னன்பால் ஒற்றர் கூறத்
தார்வேந்தன் வயத்தரசன் விரைந்தெ ழுந்து
சினக்களிற்றின் வலியுடைய வேழன் றன்னைச்
சென்றெதிர்கொள் மனத்தினனாய் நடந்தான் ஆங்கே 27

படைமறவர் புடைசூழச் சென்ற வேந்தன்,
பாரடங்கப் போர்தொடங்கி வென்ற வீரன்
நடைதளர்ந்து துணையிழந்து வருதல் கண்டு
நல்வரவு பலவுரைப்போன், 'வீரர் வீர!
தொடைபுணர்ந்த மலர்மாலை நினக்குச் சூட்டித்
தொழுகின்றேன், எதிர்பாரா வரவு கண்டு
மடைதிறந்த வெள்ளமென இன்பம் பாய
மனங்களித்தேன்' எனமுகமன் உரைத்து நின்றான் 28

---

தணப்பு அரிய—நீங்காத. முகமன்—புகழ்மொழி.

## இயல் 9

புரவியை வேண்டிப் புகுந்திடும் வேழன்
விரவிய அவன்பால் வெகுண்டுரை கூறினன்.

சினமடங்கல் அனையவன்மா வேழன் கொண்ட
சினமடங்க வில்லை;அவன் உருத்து நோக்கி,
'மனமகிழ்ந்து வரவுரைக்கும் மன்னு! நின்றன்
மதிக்குடைக்கீழ் வாழ்ந்திருப்போர் கள்வர் தாமோ?
புனநிழலில் நானயர்ந்து துயிலும் போழ்து
புகுந்துசிலர் என்புரவி கவர்ந்து வந்தார்;
எனதுயிரின் அனையபரி மீட்டுச் செல்ல
இவண்வந்தேன்; விரைந்ததனைக் கொணர்தல் வேண்டும். 29

விரைந்ததனைக் கொணர்ந்திலையேல் மன்னு நீதான்
வீண்பழிக்கே ஆட்படுவை; என்றன் நெஞ்சில்
நிறைந்தெழுமென் சினத்தீக்கு முன்னர் நிற்கும்
நிலைமையினை எய்திடுவை' எனக்க னன்ருன்;
கரைந்தசின மொழிகேட்ட வயந்தர் வேந்தன்
கசந்துமன முளைந்தாலும் மறைத்து நின்ருன்;
உறைந்தபகை குறைந்திருநாட் டரசும் அப்போழ்
தொருமையுடன் வாழ்வதனுல் பொறுமை கொண்டான். 30

---

மடங்கல்—சிங்கம், உருத்து—சினந்து. புனம்—காடு
இவண்—இங்கே. உளைந்தாலும்—வருந்தினுலும்.

## இயல் 10

வயத்தரசன் விருந்தயரப் பணிந்து வேண்ட
மாவேழன் சினந்தணிந்து மனமிசைந்தான்.

பொறுமையுடன் இவைமொழிவான், 'வீர மொன்றே
பூணுகக் கொண்டொளிர்வோய்! தவிர்க சீற்றம்;
தெறுபுரவி யாண்டுளதே எனினும் நாட்டில்
தேடியதைக் கொணர்விப்பேன்; வருந்தல் வேண்டா;
உறுவலிசேர் நின்பரிமா பிரிந்த செய்தி
உரைத்ததன்பின் தானறிவேன்; பாய்மா தேடத்
திறமுடையார் நாற்புறமும் செலப்ப ணிப்பேன்;
சென்றவர்தாம் கைக்கொண்டே மீள்வர் மேலோய்! 31

கொற்றமுறப் பொருவலியோய்! தேடிச் சென்றோர்
கொய்யுளைய புரவியொடு மீளுங் காறும்
பற்றுடனென் அரண்மனைக்கே எழுந்து போந்து
பாங்குபெற விருந்தினனாய்ச் சின்னாள் வைகிச்
சுற்றமெனக் கருதிஎனைப் பெருமை செய்க!
தோழமையை வளர்த்திடுக! வருக' என்று
கொற்றவனவ் வீரனிடம் கனிந்து நோக்கிக்
குளிர்மொழிகள் பலகூறிப் பணிந்து நின்றான். 32

---

தெறு—பகைவரைஅழிக்கின்ற. கொற்றம்—வெற்றி.
கொய்உளை—கொய்யப்பட்டபிடரிமயிர்,

பற்றலர்தாம் தன்னெதிரில் பணிந்து நிற்பின்
பகைவிடுத்து நகைத்துரிமை பூணல் வீரம்
உற்றவர்தம் கடனாகும்; அதனால் வேழன்
உளங்கனிந்த வயத்தரசன் வேண்டு கோளால்
செற்றமது தவிர்ந்தவனாய் மூரல் பூத்துச்
செழுமனையில் விருந்தயர இசைவு தந்தான்;
கொற்றவன்றன் உள்ளமெலாம் மகிழ்வு பொங்கக்
கோவிலுக்கவ் வேலானை அழைத்துச் சென்றான். 33

பாரகத்தை நடுக்குறுத்தும் மடங்கல் போன்றான்
பகரரிய பெருவீரன் வருகை கேட்ட
ஊரகத்து மாந்தரெலாம் குழுமி யாண்டும்
உவகையொடு வாழ்த்தொலிகள் எழுப்பி நின்றார்;
தாரடுத்த மார்பகத்தான் களிற்றின் மேலான்
தலைநிமிர்ந்த தோற்றத்தான் வலமாச் சுற்றி
காரடுத்த தலைவாயி லுட்பு குந்தான்;
கண் விழித்துக் கண்டவர்கள் வியந்து நின்றார். 34

---

பற்றலர்—பகைவர். மூரல்பூத்து—புன்னகைத்து. குழுமி—கூடி. தார்—மாலை. கார்—மேகம்,

## இயல் 11

வயத்தரசன் கருவிருந்தில்
மாவேழன் மகிழ்ந்திருந்தான்.

வருகைதரும் வீரனுக்குப் பெருவி ருந்து
வைத்திருந்தான் வயவேந்தன்; கற்ருேர் மற்ருேர்
பெருமைமிகு படைத்தலைவர் வணிக மாந்தர்
பெருஞ்செல்வர் இவரனையார் குழுமி வந்தார்;
பருவஎழில் நன்மாதர் நடனங் கண்டும்
பருகுவன உயரியன அருந்தி நின்றும்
இரவதனிற் பெரும்பொழுது களிப்பில் மூழ்கி
இன்பமெனும் கடற்பரப்பில் அவன்தி ளைத்தான். 35

உள்ளிருக்கும் குருதிஎலாம் சொட்டச் சொட்ட
உடலங்கள் கூத்தாடும் போரே கண்டோன்
கள்ளிருக்கும் மலர்க்கூந்தல் மாத ரார்தம்
களிநடனங் கண்டிருந்தான்; கைகள் கொட்டி
நள்ளிரவுப் பொழுதுவரை மகிழ்ந்தி ருந்தான்;
நயந்துரைகள் பலபேசி அவன்பால் நட்புக்
கொள்ளலுக்கு வந்தவரை அன்பால் நோக்கிக்
கொலைவேலான் உரையாடித் துயிலச் சென்ருன். 36

---

குருதி—இரத்தம்' கள்—தேன்.

## இயல் 12

மாவேழன் விருந்தயர்ந்து கட்டிலின்மேல்
மயங்குகையில் எழிலணங்கை ஆங்குக் கண்டான்

பஞ்சணையில் மென்தூவி பரவத் தூவிப்
பனிமலரின் இதழ்பரப்பிச் சித்தி ரத்தால்
விஞ்சுமெழிற் கட்டிலில்வெண் துகில்வி ரித்து
விரையகிலின் புகைநிறைத்துத் தோர ணங்கள்
துஞ்சும்அறை எங்குமெழில் விளங்கப் பண்ணித்
துய்யமணி ஒளிவிளக்குத் தொங்கக் கட்டிச்
செஞ்சுவைய தேறல்வகை அருகில் வைத்துச்
செய்வனசெய் தகன்றுரரங் கேவல் மாதர். 37

வன்மைமிகு திண்டோளன் வயமா வீரன்
வண்ணஎழிற் கட்டில்மிசை அமர்ந்தான்; தென்றல்
மென்மைமிகு துகிலசைத்துச் சாள ரத்துள்
மெல்லெனவந் துடல்வருட, வானத் திங்கள்
புன்மையிருள் பலகணியுட் புகுதா வண்ணம்
பொலிவுறவே தண்கதிர்கள் செலுத்தி நிற்கத்
தன்மையினைக் கண்டுள்ளம் மகிழ்ந்தி ருந்தான்;
தனைமறந்து விழிகுவிய அணையிற் சாய்ந்தான். 38

---

மென்தூவி—மெல்லியஅன்னத்தின் இறகு. துகில்—ஆடை.
விரை—மணம். துஞ்சும்—தொங்கும். தேறல்—மது. வயம்—வெற்றி.
சாளரம்—சன்னல். வருட—தடவ. பலகணி—சன்னல்.

நறவருந்திக் களித்தமையால் மயக்கங் கொண்டு
நனவிழந்து மெய்ம்மறந்து துயிலுங் காலை
மறமுயர்ந்த விரிமார்பன் அருகிருந்த
மதுக்கிண்ணம் விழுந்துருளும் அரவங் கேட்டே
உறவெழுந்து கண்துடைத்து நிமிர்ந்தான்; ஆங்கண்
ஓவியத்துப் பாவையென ஒருத்தி நின்றாள்;
திறமிகுந்த உளம்நடுங்க உடல்வியர்க்கத்
திகைத்திருந்தான் பகைப்புலத்தும் திகைப்பே யில்லான் 39

இவளனைய எழில்மகளை உலகில் யாண்டும்
இதன்முன்னர் அவ்வீரன் கண்ட தில்லை;
குவளைவிழி கொவ்வையிதழ் பவழ மேனி
கொண்டவளை அழகுருவை இன்று கண்டான்;
தவளநிறத் துகிலுடுத்த தையல் நோக்கித்
தலைகுனிந்தாள் கடைக்கணித்தாள் இதழின் ஓரம்
தவழுமெழிற் புன்னகையைக் காட்டி நின்றாள்;
தனையிழந்தான் கனவிதுவோ எனநினைந்தான். 40

---

அரவம்—ஒலி தவளம்—வெண்மை

## இயல் 13

விழிவேலால் தாக்குண்ட வேழன் ஆங்கே
விளப்பரிய காதலெனும் நோயில் வீழ்ந்தான்.

விழிக்கடையால் அவன்விழியைத் தாக்கி, நெஞ்சில்
வேதனையை உருவாக்கி நின்ற பாவை,
விழித்திமையா முனம்மறைந்தாள்; மறைந்தா ளேனும்
வீரன்றன் மனத்தகத்து நிலைத்து நின்றாள்;
வழிக்கதவந் திறந்தகல்வாள் காற்சி லம்பும்
வளையொலியும் இருசெவிவிட் டகல வில்லை;
பழச்சுளையின் செவ்விதழில் தவழ்ந்த மூரல்
பார்வையைவிட் டணுவளவும் மறைய வில்லை. 41

கற்பனையில் அவையெல்லாம் மீண்டும் மீண்டும்
காட்சிதரக் கனிந்துருகிப் புலம்பும் வீரன்,
'பொற்பதுமை இவள்தானோ? வடிவ மென்ன
பூங்கொடியோ? முழுமதியோ இவள்மு கந்தான்?
முற்படுமவ் விளையமகள் என்னை வென்றாள்!
முழுவலியும் இழந்திங்குத் தளர்ந்து விட்டேன்;
பற்பலபோர் வென்றிருந்தும் இவ்வ ணங்கின்
பார்வைக்கு மனமுடைந்து தோற்று விட்டேன்! 42

---

மூரல்—புன்னகை,

புள்ளுறங்கும் நள்ளிரவில் யாரு மிங்குப்
  புகுதரிய தனியறையில், அச்ச மின்றிக்
கள்ளருந்தித் துயில்வேன்முன் வந்து நின்ற
  காரிகையார்? எப்பொருட்டால் இங்கு வந்தாள்?
உள்ளிருந்து புறத்தகல்வாள் என்றன் நெஞ்சை
  உடன்கொண்டு நீங்கினளே! கொவ்வைச் செவ்வாய்
வெள்ளெயிற்றின் ஒளிசிறிதே இதழில் மின்ன
  விரியாமல் விரித்துநகை செய்து சென்ருள்! 43

என்றுபல நினைந்திரங்கி உழலும் வீரன்,
  ஏந்திழையின் கருமேகச் சுருளின் கூந்தல்
ஒன்றுமலர் ஒன்றங்கு நிலத்திற் கண்டான்;
  ஓடோடி உவந்ததனை எடுத்து மோந்து,
வென்றகன்ற எழிலணங்கின் நினைவே விஞ்சி,
  விழிமூடிக் கற்பனையில் மிதந்து சென்ருன்;
துன்றமரின் புறப்பொருளே வாழ்வாக் கொண்டோன்
  துறைசெறிந்த அகப்பொருளின் வாயில் கண்டான் 44

காதலெனும் அகம்புகுவோர் இமைகள் என்னும்
  கதவுகளை மூடாராய் இமையா நாட்டம்
பூதலமேற் பெற்றிடுவர்; இரவில் கட்டிற்
  புழுவாகப் புரண்டிடுவர்; வெய்து யிர்ப்பர்;
சாதலினுங் கொடுந்துயரில் உழல்வர்; ஈது
  தண்கடல்சூழ் ஞாலத்தின் இயற்கை யன்ருே?
வேதனையில் உழல்வீரன் உறக்க மின்றி
  வெய்துயிர்த்துப் புரண்டிருந்தான் பஞ்சின் சேக்கை 45

---

வெள்எயிறு—வெள்ளியபற்கள். ஒன்றும்மலர்—பொருந்தியமலர்.
விஞ்சி—மிகுந்து. துன்றுஅமர்—நெருங்கியபோர். புறப்பொருள்—வீரம்,
துறை பலவகைத்துறைகள்பொருந்திய. அகப்பொருள்—காதல்.
நாட்டம்—விழி. சேக்கை—படுக்கை.

சாதலுக்குத் துணைபோகும் சமரே கண்டோன்
காதலுக்குத் துணையாகும் உயிரைக் கண்டான்;
வீதலுக்குத் துணைபோகும் வேலே கண்டோன்
விழைவுக்குத் துணையாகும் விழியைக் கண்டான்;
வேதனைக்குத் துணைபோகும் களமே கண்டோன்
விண்வெளிக்குத் துணையாகும் நிலவைக் கண்டான்;
காதினிக்கப் போர்முரசின் ஒலியே கேட்டோன்
கடுந்தனிமைப் பெருமூச்சின் ஒலியைக் கேட்டான். 46

குறையிரவும் சிறிதேனும் நகர்த லின்றிக்
குடியிங்குக் கொண்டதென உணர்வு கொண்டான்;
நிறைமதியின் தண்கதிர்கள் பகைவர் வீசும்
நெடுவேல்க ளெனப்பாயத் தளர்ச்சி கொண்டான்;
விரைமலரின் இதழ்களெலாம் உடலு றுத்தி
வெப்புறுத்தித் துயர்ப்படுத்த வெறுப்புங் கொண்டான்;
அறைமதில்கள் சிறைமதில்போல் விளங்கக் கண்டான்;
அரும்பிவரும் காதலெனும் நோயில் வீழ்ந்தான். 47

---

சமர்—போர். வீதல்—இறப்பு.

## இயல் 14

**வேழன்றன் துயர்நீக்க வந்தான் போல
வெங்கதிரோன் இருள்நீக்கி விரைந்து வந்தான்.**

இன்னலுறும் பிணியாளன் துயரந் தீர்க்க
  இனியமொழி வழங்கவரும் நண்பன் போலப்
பன்னரிய பெருங்காதற் பிணிப்புண் டாங்கண்
  பைதலுறும் மாவேழன் நிலைமை காணத்
துன்னுமிருள் செகுத்தெழுந்து கீழை வானில்
  சுடர்க்கதிரோன் முகங்காட்டி விரைந்து வந்தான்;
மன்னவரும் பணியவரும் ஆற்றல் கொண்ட
  மாவீரன் வெய்துயிர்த்துப் புரண்டி ருந்தான். 48

நீலநிறப் பட்டாடை விரிப்பைப் போலும்
  நெடுங்கடலாம் எழிற்பாயல் நீங்கி வெய்யோன்
கோலமுகஞ் சிவந்தெழுந்தான்; வீரன் ருனும்
  கொய்ம்மலர்கள் வதங்கிவிழும் அணையின் நீங்கி,
ஞாலமுற வெறுத்தனன்போல் நிலத்தை நோக்கி
  நடுசிலைபோல் நெடும்பொழுது தனித்தி ருந்தான்;
வேலவன்பின் நிலமளப்பான் போலெ ழுந்து
  வியனறையில் நடைபயின்ருன் அங்கு மிங்கும். 49

---

பைதல்—துன்பம். செகுத்து—அழித்து. பாயல்—படுக்கை. வியனறை—பேரறை.

## இயல் 15

**மாவேழன் உற்றபெருஞ் சோர்வு கண்டு**
**வயத்தரசன் நற்றுணையாய்த் தேற்றி நின்றான்.**

நெடும்புலத்தைச் சூழ்ந்திருந்த கங்குற் போது
நீங்கினுமவ் வெவ்வேலான் நெஞ்சந் தன்னைத்
தொடும்பருவ உணர்ச்சியது விலக வில்லை;
துயர்ப்படுத்தி இரவெல்லாம் கதிர்கள் வீசிச்
சுடும்நிலவு வானத்தின் அகன்ற போதும்
துயிலறையில் மயிலனையாள் வந்து தோன்றிக்
கொடுந்துயருள் அவன்மூழ்கக் காட்டிச் சென்ற
கோலமுகம் மனத்தினின்றும் அகல வில்லை. 50

போராடிப் போராடிப் புறமே கண்டோன்
புதியதொரு போர்க்களத்தை அகத்தே கண்டு,
போராடிக் களைத்துவிட்டான்; ஆற்ற லெல்லாம்
போய்மடியத் தனித்திருந்தான்; பின்னர்க் காலை
நீராடிக் கடன்முடித்துத் திருவோ லக்கம்
நிகழரங்கம் சென்றிருந்தான்; அரச னோடும்
சீராடிப் பயிலவரும் செல்வ ரோடும்
சிரிப்போடு சொல்லாடி மகிழ வில்லை. 51

---

கங்குல்—இரவு, திருவோலக்கம்—அரசவை.

முகஞ்சுருங்கி ஒளியின்றிப் பார்வை தன்னில்
முனைப்பின்றி யிருப்போனை வேந்தன் நோக்கி,
அகங்கனிந்து 'விருந்தயர்ந்த வேளை தன்னில்
அன்ப! நினை வருத்துகுறை நிகழ்ந்த தோ'என்
றிகலுடையான் றனைவினவ, 'இல்லை யில்லை
எள்ளளவு குறையொன்றும் நிகழ வில்லை,
புகலரிய நிறைகண்டேன்' என நகைத்துப்
புகன்றாலும் அந்நகைப்பில் உயிரே யில்லை. 52

உள்ளத்தைக் கவலைக்குத் தந்து விட்ட
உண்மையினைக் கண்சொல்ல உணர்ந்த மன்னன்,
'துள்ளிச்செல் வேகத்தில் இணையே யில்லாத்
துணைப்பரியை இழந்ததுயர் கொல்லோ என்று
மெள்ளத்தன் வாய்திறந்து மொழிய' 'ஆம்!ஆம்!
மேவுமொரு பொருளிழந்த இழப்பே போல
உள்ளத்தில் ஒருணர்வு கவ்வி நின்றே
உறுத்துவதால் இந்நிலையை உற்றேன்' என்றான். 53

'நிமிர்தோளாய் என்னாட்டில் இழப்பே யில்லை,
நின்துணையை நான்தருவேன் கவலை கொள்ளேல்,
தமராக நினைக்கொண்டேன், நின்கலக்கம்
தவிர்ப்பதுவே எனதுகடன், புரவி தன்னை
எமர்தேடி ஈங்குய்ப்பர்', என்றான் மன்னன்;
'என்துணையை எனக்களித்துத் துயர்களைந்தால்
குமுறுமென துளமமைதி கொள்ளும்' என்று
கூர்வேலிற் கூர்மதியான் கூறிச் சென்றான். 54

---

இகல்—வலிமை. தமர்—உறவினர். எமர்—எம்மவர்.

## இயல் 16

காதலெனும் கூர்வாளுக் கிலக்காய் நின்று
கண் துயிலா திரவெல்லாம் கிடந்தான் வேழன்

பாடுபடும் உலகுக்கு மாலை சூட்டிப்
பகலோன்றன் பணிமுடித்து மேலை வாயிற்
கூடுமுனம் இரவென்னும் அரசி வந்து,
கோலநெடு வானரங்கில் நிலவு மங்கை
ஆடுநடங் கண்டிருந்தாள்; வீரன் ருனும்
ஆரணங்கின் மாலையணிந் திமைகள் ஒன்ருய்க்
கூடுவதை மறந்திருக்கத் தனிமை என்னும்
கூர்வாளுக் கிலக்காகிக் கலங்கி நின்ருன். 55

கலங்கியுளம் தடுமாறும் வீரன் றன்னைக்
களங்கமுறும் வெண்மதியம் இரக்க மின்றி
இலங்கொளியால் வெப்புறுத்த, வெம்மை தாங்கா
தேங்குமவன் தளர்பொழுதை உற்று நோக்கிப்
புலங்கிளறும் நலங்கெழுமும் தென்றற் காற்றுப்
புகுந்துநனி மெய்வருடிப் புண்ப டுத்த,
வலங்கொண்ட திண்டோளான் வதங்கி யங்கு
வழியின்றித் தவிக்கின்ருன் அணையின் மீது. 56

---

மாலைசூட்டி—மாலைப் பொழுதைச் சூட்டி. மாலைஅணிந்து—மயக்கத்தைப் பெற்று. வெப்பு—சூடு. புலம்கிளறும்—புலன்களைக்கிளறிவிடும்.

வளங்கெழுமும் நாவலநாட் டாட்சி பெற்ற
வாள்வேந்தன் பேரரசன் இவன்பேர் கேட்டால்
உளங்கலங்கி நடுநடுங்கி வியர்த்து வீரம்
ஒடுங்கிநிற்பன்; ஆயினுமந் நாட்டுத் தென்றல்
இளங்காற்றுக் கிவன்தோற்றுச் சாய்ந்து விட்டான்;
ஈதென்ன விந்தையடா! மெலிய ரேனும்
களங்கண்ட வீரரையும் வெல்வர் போலும்
காரிகையார் கடைவிழியில் சிக்கி விட்டால். 57

தண்மதியும் பகையாகி, மலர்கள் நீவித்
தாவிவரும் மென்காலும் பகையே யாகி
வண்மலரின் இதழ்பகையாய்ப் பஞ்சின் சேக்கை
மலரணையும் பகையாகித் தன்னி ரண்டு
கண்ணிமையும் பகையாகிப் பொருந்தா தங்குக்
கலங்கிஎழிற் கட்டின்மிசைப் புரள்வோன் நெஞ்சம்
புண்படுவ தாரறிவார்? ஆற்று தற்குப்
போயொருசொல் மொழிவாரார் தனிக்கி டந்தான். 58

---

மென்கால்—தென்றல்

## இயல் 17

**காதல்தரும் ஓவியத்தின் எழிலைக் கண்டு**
**கலங்கிமனம் வெதும்பியவன் புலம்பி நின்றான்.**

வலைப்பட்ட அரியேறு போன்று காதல்
வயப்பட்டுச் செயலற்றுத் துயிலு மின்றி
அலைப்புண்டோன் நெஞ்சத்தில் தோன்றும் எண்ணம்
ஆயிரமாய் ஆயிரமாய்ச் சுழலும் வேளை
கலைப்பொலிவு நிறைந்தொளிரும் உருவக் கன்னி
கட்டழகி ஒருத்தியவண் தோன்றக் கண்டான்;
உலைக்குருகின் வெய்துயிர்ப்போன், முன்னாள் கண்ட
உருவமது முறுவலித்து நிற்கக் கண்டான். 59

உருவினுக்கும் முறுவலுக்கும் கடைக்கண் காட்டும்
ஒளியினுக்கும் மனமுடைந்தோன் வியந்து சென்று
மருவுதற்குக் கையிரண்டும் நீட்டி நின்றான்;
மயக்கத்தின் விளைவினுக்கு நாணி நின்றான்;
பெருமகற்குத் தோல்விதரும் உருவம் உண்மைப்
பெண்ணன்று; வினைவல்லான் கைவண் ணத்தால்
வருமுருவம் எனவுணர்ந்து தளரும் வீரன்
வாட்டமெலாம் திரண்டுருண்ட வடிவ மானான் 60

---

உலைக்குருகு—கொல்லுலைத்துருத்தி. முறுவலித்து—புன்னகைசெய்து.
வினைவல்லான்—ஓவியம்வல்லான்.

நெருநலிர விடைவந்து தன்னுள் ளத்தில்
நிலைத்துவிட்ட பெண்ணணங்கென் றெண்ணிச் சென்று
மறுகுமவன் ஏமாற்றம் உற்ற னேனும்
மங்கையவள் எழிலெல்லாம் வடித்துக் காட்டும்
திருவுருவப் படமதனில் வைத்த கண்ணைத்
திருப்பாமல் இமைக்காமல் விழித்து நோக்கி
இருவிழியும் கனியிதழும் நிலவை வென்ற
எழில்முகமும் சுருள்குழலும் வியந்து நின்றான். 61

பனிவிழிகள் நாணத்தின் குழைவு காட்டிப்
பருகுமெனைப் பாடுறுத்தித் துயரில் வாட்டும்;
கனியிதழ்கள் பவளத்தின் செம்மை காட்டிக்
காணுகின்ற என்னுளத்தில் வெம்மை கூட்டும்;
நனிபொழியும் எழில்முகத்தை, முறுவல் பூக்கும்
நளினத்தை, விழிக்கடையைச் சாயல் தன்னை
வனையுமவன் பரிசில்பெற வரைந்தா னல்லன்;
வாட்டிஎனைத் துயர்ப்படுத்த வனைந்தான்' என்றான். 62

நெருநல்—நேற்று. நளினம்—இங்கிதம். வனையுமவன்—ஓவியன்

## இயல் 18

**இவ்வுருவத் தெழிலாள்யார் என்றான் வேழன்**
**இளவரசி காணென்றாள் வந்த தோழி.**

ஓவியத்தில் உயிர்வைத்த உரவோன் தன்முன்
  ஒருதெரிவை வந்தங்கு வணங்கி நின்றாள்;
'காவியத்தின் தலைவினனத் தோற்றம் நல்கிக்
  கண்கவரிவ் வோவத்தாள் யாவள்' என்றான்;
'நீவியக்க நிற்குமிவள் எங்கள் மன்னன்
  நேயமகள், நானவட்குத் தோழி, இந்தக்
கோவிலுக்குள் கோதையிவள் அழகுத் தெய்வம்,
  குலமகளாம் இவளனையார் யாண்டும் இல்லை!' 63

என்றமொழி செவிப்படலும் நெஞ்சின் மீறி
  எக்களித்து வருங்களிப்பால் அவளை நோக்கி,
'இன்றுனது கன்னல்மொழி கேட்டு நெஞ்சம்
  எல்லையின்றிப் பூரிக்கக் காணு கின்றேன்;
நின்றனுடை இளவரசி எழிலுக் கெங்கும்
  நிகரிலையோ? ஆரணங்கோ? அடவோ விந்தை!
மன்றலினுங் கொண்டிலளோ? பருவம் யாதோ?
  மாதவட்குப் பெயர்யாதோ? மொழிவாய் தோழி.' 64

---

கன்னல்—கரும்பு. மன்றல்—திருமணம்,

வெவ்வலியன் இவ்வண்ணங் கனிந்தி ரங்கி
வினவுதலும், தான்விழைந்து வந்த எண்ணம்
செவ்வையுடன் எளிதில்நிறை வேறும் என்று
சிந்தித்து விடைபகர்வாள், ‘மூரல் ஊறுங்
கொவ்வையிதழ் காணுங்கால், பெண்மை விஞ்சு
கோதையர்க்கும் வாயூறும்; விழிகள் கண்டால்
நவ்வியினம் வணங்கிவரும்; தோள்கள் காணின்
நங்கையரும் மயங்கிடுவர் தமைமறந்தே! 65

நாடாளும் பலமன்னர் மணப்பான் வேண்டி
நான்நீஎன் றடுத்தடுத்தெம் நாட்டில் வந்து
கூடாரம் அடித்ததுதான் மிச்சம் அந்தோ!
கூடாகி ஓடாகித் தம்மூர் மீண்டார்;
கூடாது திருமணமே எனமறுத்துக்
கோலமயில் இளவரசி கூறி விட்டாள்;
சூடாத மலர்பூத்த பருவ மங்கை
சூடுபெயர் வேல்விழியாம் ஐய!’ என்றாள். 66

நவ்வி—மான்

## இயல் 19

**வெறுப்பெதற்குத் திருமணத்தில் என்றான் வேழன்**
**வீரனுக்குக் காதலியாம் என்றாள் தோழி.**

'திருமணமே கூடாதென் றேன்வெ றுத்தாள்?
  சீரிளமைப் பேரெழிலைப் பாழ்ப டுத்தத்
திருமகள் தான் ஏன் நினைத்தாள்? தேனும் பாலும்
  தெருமண்ணில் சிந்திவிட நினைவா ருண்டோ?
நறுமணமார் ஒருமலரைக் கசக்கி வீசும்
  நல்லவரைக் கண்டதில்லை; பேதை என்னும்
ஒருபெயரை நிலைநாட்டப் பேதுற் றாள்கொல்?
  உலகியலுக் கொவ்வாத செயல்மேற் கொண்டாள்.' 67

திகைத்தவனிவ் வணமுரைக்கத் 'தேனும் பாலும்
  தெய்வவழி பாட்டுக்கே வைத்தாள் ஐய!
முகைத்துவிரி மலர்தன்னைக் கசக்க வில்லை
  முனம்விழைந்த பூசைக்கே பேணிக் காத்தாள்;
நகைத்தவளைப் பேதைஎன நவிலல் நன்றோ?
  நலமிகுந்த பெண்மைக்கோர் சான்றாய் நின்றே
அகப்பொருளின் உயர்பண்பைப் போற்றிக் காக்க
  ஐம்புலனுக் காளாகா திருந்தாள்' என்றாள். 68

---

முகைத்து—மொட்டாகி,

'உன்மொழியின் உட்பொருளை உணரும் ஆற்றல்
உடையனலேன், தெள்ளிதின் நீ விளங்கக் கூறின்
என்மனமும் தெளிந்திடரின் நீங்கும்' என்றான்;
ஏங்குமவன் உள்ளத்தைப் புரிந்த தோழி,
'மின்னொளிரும் நெடுவேலோய்! எங்கள் செல்வி
மிக்காரும் ஒப்பாரும் இல்லா னுக்குத்
தன்மனத்தைத் தந்தமையால் அவனை யன்றித்
தார்சூட மணம்புரிய இசைந்தா ளல்லள். 69

வீரத்தின் உறைவிடமாய் விளங்கும் வீரன்
வியன்புகழைப் போர்த்திறனை அழகை யெல்லாம்
சேரத்தன் இருசெவியால் நாளுங் கேட்டுச்
சிந்தைக்குள் அவனைஒரு தெய்வம் ஆக்கி,
நேரத்தை எதிர்நோக்கி நிற்கின் றாள்தன்
நிகரில்லா இளமைஎழில் படைப்ப தற்கே;
நேரிற்கண் டறியாதாள் அவனை நேற்று
நீள்விழியாற் கண்டுமனங் குளிர்ந்து நின்றாள். 70

காண்போமோ காணேமோ என்று நாளும்
கலங்கிமனங் குமைந்துடலம் மெலிந்து வந்த
நாண்பாவை நெருநலவன் திருவோ லக்கம்
நண்ணுங்கால் கண்குளிர உளம்பூ ரிக்கச்
சேண்மேவு கன்னியர்தம் மாடம் நின்று
சேல்விழியால் அவனெழிலைப் பருகி நின்றிவ்
வாண்போல யாவருளார் எனவி யந்தே
அவனைமறந் தியம்பினள்காண்' என்றாள் தோழி. 71

---

சேண்—உயரத்தில்.

## இயல் 20

**இளவரசி மனங்கவர்ந்த வீரன் இந்த**
**வேழன்தான் எனமொழிந்தாள்; அவன்ம கிழ்ந்தான்.**

‘மங்கையவள் மனக்கோயிற் றெய்வ மான
மாவீரன் யாவனவன்? மன்றல் கொள்ள
இங்கவன்போற் பேருடையான் ஒருவ னில்லை;
ஏங்குதற்குப் பிறந்தவரை ஏங்க விட்டாள்;
பொங்கிவரும் எழிலுருவப் பூவை நெஞ்சுட்
புகுந்தவனோர் நிகரில்லா வீரன் என்றாய்!
எங்குளனோ அவ்விளைஞன்? போரில் என்றன்
எதிர்நிற்கும் நெஞ்சினனோ? மொழிக’ என்றான். 72

‘ஒருநாளும் தோல்வியவன் கண்ட தில்லை;
உருத்தெழுந்தோர் நெடுநேரம் நின்ற தில்லை;
வெருவாத மன்னரிலை அவன்பேர் கேட்டால்;
வெற்றிமகள் அம்மறவன் தோளே வேட்டாள்;
மருவாரைப் புறங்கண்ட வீர னேனும்
மாதரசி ஒருத்திக்குத் தோற்று விட்டான்;
பெருவாளை வயல்தாவும் மூவ கத்துப்
பெருநாடே அவன்நாடாம்’ எனமொ ழிந்தாள். 73

---

வேட்டாள்—விரும்பினாள், மருவார்—பகைவர்.

என்றமொழி செவிபுகுதா முன்னர் வீரன்
இருவிழியும் சிவந்தெழுந்தான் 'என்றன் நாட்டில்
வென்றியல தொன்றறித லின்றி எங்கும்
விஞ்சுபுகழ் கொண்டுவரு மென்னை வெல்லும்
வன்றிறலன் இன்றுளனே? என்றன் வாளின்
வாய்மழுங்கிப் பொன்றியதோ? அவன்பேர் கூறாய்!
நின்றன்முனம் கொன்றுடலைக் கிழிப்பன் கூறாய்!
நிலைகுலையா வீரத்தின் ஆணை' என்றான். 74

'மூவகத்துப் பெருநாட்டின் வீரன் என்றாய்
மொய்குழலி! காதலை நான் இழந்து விட்டுப்
போவதற்கு மனமிசைவேன்; என்றன் வீரம்
புல்நுனியின் அளவேனும் குறைவ தென்றால்
சாவதற்கும் நான்தயங்கேன்; என்னின் மிக்க
தறுகணன்யார்? யாதவன்பேர்? நொடியிற் கூறு;
பூவகத்து வாழ்வானை விண்ண கத்துப்
போய்ப்புகுதச் செய்வித்து மீள்வேன்' என்றான். 75

'அப்பெயரை நின்முன்பு கூறல் நன்றோ?
அஞ்சுகின்றேன்; பெண்மைக்கு முறையு மன்று;
தப்பெனவே உலகுரைக்கும்; மேலும் நீதான்
தரியலர்க்குக் கூற்றாவாய் உண்மை; ஆனால்
ஒப்பரிய இளவரசி உளங்க வர்ந்த
ஒருவனை நீ என்செய்ய இயலும்?' என்றாள்;
'செப்புகஅப் பெயரென்றால் ஏதே தோ நீ
செப்புகின்றாய்' எனஇடிபோல் முழங்கி நின்றான். 76

---

பொன்றியதோ—அழிந்ததோ. தறுகணன்—வீரன்

'செப்புகின்றேன் உண்மைநிலை சினவேல் ஐய!
 சீயங்கள் பலகுழுமி எதிர்நின் ருலும்
உட்புகுந்தே விளையாடி அவற்றை யெல்லாம்
 ஒவ்வொன்ரு எடுத்தெறியும் ஆற்றல் மிக்கான்;
இப்புவியின் இளவரசி காதல் நெஞ்சில்
 இடங்கொண்ட பேருடையான் யாவன் என்றே
துப்பறியத் துடிக்கின்ருய்! நின்னை யன்றித்
 தொல்லுலகில் யாவருளார் வீரன் என்றே!' 77

எனமொழிந்த தோழியுரை கேட்டான் வீரன்
 இறும்பூது மீக்கூர நிலைத்து நின்ருன்;
முனமெழுந்த சினமடங்கி, ஆங்கு நின்ற
 மொய்குழலி முகம்நோக்கி நகைத்துக் கையால்
தினவெழுந்த தோள்தட்டி ஆர்த்த ஓசை
 திசையெங்கும் மோதிஎதிர் ஒலிக்கக் கேட்டான்;
முனமடைந்த வென்றிகளிற் காணு இன்பம்
 மொய்ம்புடையான் நெஞ்சத்துட் புகுதக் கண்டான். 78

சினவேல்—கோபிக்காதே. சீயம்—சிங்கம். இறும்பூது—வியப்பு.
மீக்கூர—மேம்பட.

## இயல் 21

காதலியைக் காண்பதற்கு விழைந்தான் வேழன்
கரையருகே வாவென்று பணித்தாள் தோழி.

‘எனைவிழைந்தாள் இளவரசி என்ற செய்தி
இதுகாறும் உரையாமல் ஏனோ தாழ்த்தாய்?
நினைவிழந்து துயரடைந்து வாடச் செய்தாய்!
நீமொழிந்த மறைமொழியால் சோர்வே தந்தாய்!
உனையிரந்து வேண்டுவல்மற் றொன்று தோழி!
உளங்கவர்ந்த எழில்மகளைத் தனித்துக் காண
முனையுமெனக் குதவுதல்நின் கடனே யாகும்;
முப்பொழுதும் எப்பொழுதும் மறவேன்’ என்றான். 79

‘துடிக்கின்ற பெருவீர! என்னை யிங்குத்
தூதனுப்பித் தன்கருத்தை நின்பாற் கூறிக்
கிடைக்கின்ற நல்விடையைக் கொணர்க என்று
கிள்ளைமொழி இளவரசி விடுப்ப வந்தேன்;
பிடிக்கடங்கு துடியிடையாள் நினைவா லிங்குப்
பேதுற்றுத் தவித்தனை நீ; அதனைச் சொல்லி
முடித்துவிட மனமின்றி மனத்தின் ஆழம்
முழுதுணர உரையாடி நின்றேன் ஐய! 80

---

பிடிக்கு—கைப்பிடிக்கு. துடி—உடுக்கை.

மனத்திலவள் நினைத்தவணம் வீரன் நின்னை
 மணம்புரியும் பேறடைந்தாள்; வாழி எங்கள்
அனத்தைவெலும் நடையழகி' என்றாள் தோழி;
 'அவளினுமோர் பெரும்பேறு நானே பெற்றேன்
எனப்புகலின் அதுபொருந்தும்! நினைத்த தைத்தான்
 இளவரசி அடைகின்றாள்; நினையா ஒன்றை
எனக்களித்த வாய்ப்பன்றோ பெரிது! வாழ்வில்
 இனையதவம் உடையரிலர்' என்றான் வீரன். 81

'பேறுடையார் இருவருந்தாம்! காதற் போரில்
 பிழையின்றி இருவருமே வாகை கொண்டீர்!
மாறுடைய கருத்தில்லை; நாளை மாலை
 மலர்ப்பொழிலுள் உறுபொய்கைக் கரையின் பாங்கர்
ஏறனையாய்! எங்கள்குலத் தலைவி நிற்பள்;
 ஏகுவையேல் அவண்காணல் கூடும்' என்று
கூறியவள் விடைகொண்டு மீண்டாள்; வேழன்
 கொடுமிரவு விடைபெறலை நோக்கி நின்றான். 82

---

பாங்கர்—பக்கம். அவண்—அங்கே.

## இயல் 22

**மாவேழன் காதலைத்தன் தோழி கூற
மனமகிழ்ந்தாள் இளவரசி துள்ளித் துள்ளி.**

வழியின்மேல் விழிசெலுத்தி வரவு நோக்கி
வளரிளமைக் கனவுகளில் மிதந்து நிற்கும்
விழியழகி இளவரசி திருமுன், தூது
வென்றியுடன் மீண்டவளும் வந்து நிற்க,
அழிபசியன் அமுதுண்ண விரைதல் போல
ஆர்வமுடன் துடித்தெழுந்து தோள்கள் பற்றி
'எழிலறிவு மிகுதோழி! கனியோ? காயோ?
எடுத்துரைப்பாய் அவருரைத்த வெல்லாம்' என்ருள். 83

'தோள்பற்றிப் புகழ்ந்துரைத்தோய்! என்பால் மாற்றம்
சொல்லும்நிலை அவற்கில்லை; நின்கருத்தை
வாள்பற்றும் அவன்பால்முன் எடுத்துரைக்கும்
வாய்ப்பொன்றும் எனக்கில்லை' என்னு முன்னர்த்
தேள்கொட்டி முடித்ததுபோல் துடித்து வஞ்சி,
'தீவினையேன் காதலுங்கைக் கிளையோ? அந்தக்
கேள்பற்றி வாழ்வதுதான் வாழ்வேயன்றிக்
கெடுவாழ்வு யான்வேண்டேன் மாய்வேன்' என்ருள்.84

---

அழிபசி—மிக்கபசி. கைக்கிளை—ஒருவர்மட்டும் விரும்புதல். கேள்—உறவு.

'உரைத்தமொழி திரித்துணர்ந்தாய் அதனுல் நெஞ்சம்
உழலுதியால்; புலம்புதியால்; பேதாய்! காதல்
ஒருத்தியினை விழைவதிலே மாற்ற மொன்றும்
உயர்வேழற் கிலையென்றேன்; முன்பே நெஞ்சில்
பொருத்தியுனை நினைந்திரங்கிக் கவல்கின் ருனல்
போயொருசொல் புகன்றிடவாய்ப் பில்லை என்றேன்;
அருத்திமிகு காதலினல் நின்னைக் காணும்
ஆவலினல் துடிக்கின்ருன் வீரன்' என்ருள். 85

வாடுகின்ற உயிராட்குத் தோழி சொன்ன
வாய்மொழிகள் அமுதாகி உடல்சி லிர்க்க
மாடுநின்ற தோழியினைத் திணறும் வண்ணம்
மகிழ்ச்சியினல் அணைத்திறுகக் கட்டிக் கொண்டாள்;
பாடுகின்ற குயிலானுள், விரித்த தோகைப்
பச்சைமயில் அவளானுள், வெற்றி வாகை
சூடுகின்ற வீரனுக்குத் துணையே ஆனுள்;
தூமலரின் பஞ்சணைவீழ் கொடிபோல் ஆனுள். 86

வீழ்ந்தவளப் பஞ்சணையுட் புரண்டாள், ஆடை
விலகுவதும் உணராமல் உருண்டாள், வண்ணம்
சூழ்ந்ததலை யணையுள்முகம் புதைத்தாள், மீண்டும்
தோகைஎழுந் தாடியின்முன் நகைத்தாள், நின்று
தாழ்ந்தவிழ்ந்து சரிகுழலை முடித்தாள், நெற்றி
தரித்தநறுந் திலகத்தை வடித்தாள், தோளின்
வீழ்ந்தொதுங்கும் ஆடையினைத் திருத்தி நெஞ்சம்
விம்மவரும் மகிழ்ச்சியினல் சிரித்து வந்தாள். 87

---

அருத்தி—ஆசை. மாடு—பக்கம். வடித்தாள் —ஒழுங்குசெய்தாள்.

‘கன்னியர்தம் நெஞ்சத்திற் குடியிருக்கும்
காதலரைப் பெற்றுவிடின் வெறியில் மூழ்கித்
தந்நிலைமை மறந்துமனம் மகிழ்வர் போலும்!
தான்செய்வ தின்னதென உணரா திந்த
மின்னிடையும் தனைமறந்து களிப்பில் மூழ்கி
மிதக்கின்றாள் திளைக்கின்றாள் என்னே விந்தை!
பன்னரிய வெற்றியினால் உலகம் காட்டும்
பரிசிதுதான் போலு’மென வியந்தாள் தோழி. 88

வியந்திருக்கும் தோழியின்பால் ஓடி வந்து
விளையாட்டுப் பிள்ளைஎனக் கன்னங் கிள்ளி,
‘நயந்தவனை நானடையும் பேறு பெற்றேன்;
நற்றவத்தின் பயன்நுகரும் வாழ்வு பெற்றேன்;
உயர்ந்ததொரு பேறிதன்மேல் உண்டோ? தோழி!
ஒளிவிளக்கை என்னுளத்தில் ஏற்றி விட்டாய்!
பயந்தவரும் இசைந்துவரச் செய்தல் நின்றன்
பாரமடி நேரமிது நல்ல’ தென்றாள். 89

---

பயந்தவர் பெற்றோர்.

## இயல் 23

பொய்கைக் கரைதனிலே—மாலைப்
பொழுது வருகையிலே—வேழன்
செய்கை எலாமுணர்ந்தே—சென்று
தேர்ந்திடு கென்றுரைத்தாள்.

'உயிரனையாய்! எனைக்கவர்ந்த காதலற்கண்
டுரையாட வேண்டுமென உள்ளம் சற்றே
மயலடையா நின்றதடி; நாணம் வந்து
மறுத்துரைத்துங் கேட்கவிலை நானென் செய்வேன்!
கயல்விழியோ உள்ளத்தை முந்தும் போலும்
கண்டன்றித் துயிலில்லை என்று நிற்கும்;
செயலறியேன் எதைச்சொல்வேன் எதைத்தடுப்பேன்
செந்நெறியொன் றுரைப்பதுநின் கடனே' என்றாள். 90

பொறுமையுடன் உரையனைத்துங் கேட்ட தோழி,
புன்முறுவல் செய்துசில மொழிவாள், 'அன்னாய்!
நறுமலரின் மணமாலை சூடும் நுங்கள்
நடுவினில்யான் ஊசலென ஆடு கின்றேன்;
மறுபகலின் கதிரவன்போய் மறையும் வேளை
மலர்வனத்து வாவியின்பால் வேழன் தன்னை
வருகவெனச் சொல்லிவந்தேன்; ஆங்கு நின்கை
வரிசையெலாம் காட்டுதி'என் றகன்று சென்றாள். 91

---

மயல்—மயக்கம். வாவி—பொய்கை.

## இயல் 24

மாலைப் பொழுதின் வருகை நோக்கி
ஏனைப் பொழுதை இகழ்ந்தனள் வேல்விழி.

‘கடையாமம் வருமுன்பே என்பொ ருட்டால்
கதிர்காட்டி விடிந்துவிடிற் குறைந்தா போகும்!
படையாகத் தென்றலுடன் வாடை வந்து
படுத்துவதேன்? மெல்லியலார்க் கிரங்கும் நெஞ்சம்
கிடையாதோ இக்கொடிய பாவி கட்கு?
கேளின்றித் தனித்துழலும் ஒருத்தி யின்பால்
இடையறவே ஒருசிறிதும் இல்லை யாக
இடர்தரின்யான் என்செய்வல்?’ என்று ழன்றாள். 92

‘கொடுமிரவுக் கெத்துணை தான் வலிய நெஞ்சம்;
கொல்வதெனக் கொண்டதுவோ கொடிய வஞ்சம்;
விடிவதற்கு மனமின்றி நிலைத்து நிற்கும்;
வெண்ணிலவின் துணைகொண்டு கனலைக் கக்கும்;
சுடுகதிரோற் கென்னகுறை செய்து விட்டேன்!
துங்கமுகங் காட்டாமல் தூங்கு கின்றான்!
கடுகிவரும் நினைவிலனோ? கருணை யில்லான்
கடமையினை மறந்தனனோ? வெய்யோன்’என்றாள். 93

---

கேள்—துணைவன், வெய்யோன்—கதிரவன், கொடியவன்.

புகழுரையும் இகழுரையும் உலக மாந்தர்
புகல்வனதாம் பொருளுரையோ மேலவர்க்கு?
தகவுடையர் அவ்வெல்லாம் மனத்துட் கொள்ளார்
தம்பணியைக் காலத்தில் ஆற்றிச் செல்வர்;
பகலவனும் வேல்விழியாள் நொந்துரைத்த
பழிமொழிக்குச் செவிகொடுத்தல் இலனாய்ச் சேந்து
தகதகவென் றொளிர்ந்தெழுந்து கடமை யாற்றத்
தங்கமயம் ஆக்குகின்றான் கிழக்கு வானை. 94

வான்வெளியிற் செந்நிறத்தைப் பகலோன் பூசி
வையத்தில் ஒளிபரப்பத் திகழ்ந்து வந்தான்;
தான்விழையும் காதலனும் தனது வாழ்வைத்
தங்கமய மாக்கிஒளி யூட்டும் என்ற
தேன்வழியும் நினைவதனுள் மூழ்கி மூழ்கித்
திருமகளும் பஞ்சணைவிட் டகன்று போந்து,
மான்வளையும் தோட்டத்துப் பொய்கை யாடி
மலர்சூடி விளையாடி மகிழ்ந்து வந்தாள். 95

'காலைஎனும் பொழுதகன்று போன பின்னர்க்
கடும்பகலும் நெடிதகன்ற பின்ன ரன்றோ
மாலைஎனும் பொழுதுவரும்! இவ்வி ரண்டும்
மனமிரங்கித் தொலையாவே! நின்றிருக்க
வேலைஒன்றும் இல்லெனினும் மாறி மாறி
வினையியற்ற வல்லனபோல் நிலைத்து நிற்கும்;'
மாலையுளங் கொண்டமையால் கலங்கும் மங்கை
மனம்வெம்பிப் பொழுதெல்லாம் வைது நின்றாள். 96

---

சேந்து — சிவந்து. மாலை — மயக்கத்தை.

## இயல் 25

காதலர் நெஞ்சம் களிப்புறச் செய்யும்
போதலர் மாலைப் பொழுதும் வந்தது.

கருத்தொருமை கொண்டிருவர் தம்முட் கூடிக்
கலந்துளத்தைப் பரிமாறுந் தலைக்கூட் டத்திற்
குருக்கமுடன் துடித்திருக்கும் பொழுதில், நாமேன்
ஊருக நின்றிருக்க வேண்டு மென்று
கருத்ததனிற் செய்யவனும் நினைந்தான் போலக்
கடுகிவிரைந் தோங்குமலைத் தொடர்ப்பு றத்தே
உருக்கரந்து கதிர்சுருக்கி மறைந்து விட்டான்;
உலகியலின் திறமுணர்ந்தோர் செயலே செய்தான். 97

களவியலில் பயின்றுவரும் காத லர்க்குக்
காலமெலாந் துணைநிற்கும் மாலைக் காலம்,
உளவியலை நன்குணர்ந்தோன் செய்கை போல
உணர்ச்சியினல் ஒன்றுபடும் இருவர் தம்முட்
பழகிடவந் துதவியது; மயங்கும் அந்தி
பாரெங்கும் பரவியது; காமுற் ருரின்
இளமையுளம் சிறகடித்துப் பறந்து செல்ல
இறகொடுக்கி அடங்கினவே புள்ளி னங்கள். 98

## இயல் 26

**மாதரசி வேல்விழியை ஆங்குக் கண்டு**
**மாவேழன் சிலையென்று மயங்கி நின்றான்.**

பாங்கியுரை மலர்ப்பொய்கைப் பாங்கர் வேழன்
பறந்துவந்தான் ; அன்னவனைக் காண்பான் வேண்டி
ஏங்கிமுனம் ஆங்குவந்த நங்கை நோக்கி
எழுந்தொருபால் நிலம்நோக்கி நாணி நின்றாள்;
தேங்கெழிலின் அவ்வுருவைக் கண்ட வீரன்,
'திகைத்தன்று சித்திரத்தைக் கண்டேன்; இன்று
பாங்குடைய சிலையுருவைக் காணு கின்றேன்;
பாவையைத்தான் காணுகிலேன் இன்னும்'என்றான்.99

குழலேந்தும் மலர்த்தொகையும், பிறையை வெல்லும்
குறுநுதலும், கரியசிறு புருவ வில்லும்,
அழகேந்தும் விழிமலரும், செவ்வா யென்னும்
அல்லியுடன் முகமலரும் வியந்து நோக்கி,
'விழவேந்தி ஊர்வலமாத் தேரில் செல்லும்
விந்தைமிகு பொற்சிலைபோல் இதனைச் செய்தே
நிழலேந்தும் பைந்தருவின் அடியில் சிற்பி
நிற்கவைத்த காரணமென்? தவறே செய்தான்! 100

---

குழல்—கூந்தல். நுதல்—நெற்றி. தரு—மரம்

கைம்மலராற் பற்றியுள தாம ரைப்பூக்
காண்பவரை மயக்குறுத்தும் வண்ணம் சிற்பி
செய்ம்முறையை என்னென்பேன்! சிலையின் வாயில்
சிவப்பூட்டிச் செய்தஇதழ் அடஒ விந்தை!
பொய்ம்மையிலை உயிருடைய பெண்ணே என்று
புகன்றிடுவர் நோக்குநர்தாம்; தொட்டு ணர்ந்தே
மெய்ம்மையினை உணர்ந்திடுவர்; இதனைச் செய்தான்
மேன்மையினை எவ்வண்ணம் புகழ்ந்துரைப்பேன்? 101

மாலைவரும் எனவுரைத்த குறியி டத்தில்
மன்னவன்றன் குலக்கொழுந்தைக் காண வில்லை;
பாலைநிகர் மொழியுடையாள் வாரா தேகின்
பாலைநிகர் வாழ்வாகும் என்றன் வாழ்வு!
மாலையவள் நிற்பளெனச் சொன்னாள் தோழி
மயக்குறுத்தும் சிலையைத்தான் மொழிந்தாள் போலும்!
மாலைஎனைச் சூட்டுவளென் றெண்ணி நின்றேன்
மாலைஎனக் குண்டாக்கி நின்று விட்டாள்!' 102

எனப்புலம்பும் ஏறனையான் நிலைமை கண்ட
இளவரசி நகைத்துவிடத் திகைத்தான் வீரன்;
மனக்குழப்பம் மிகவாகிச் சிலைசி ரித்த
வகையென்ன எனும்வியப்பால் உற்று நோக்கித்
தனக்குவந்த மயக்குக்கு நாணி விட்டான்;
தையலிவள் மையல்தரும் சிலைபோல் நின்றாள்
எனக்கலங்கிப் பினர்த்தெளிந்து நெருங்கிச் சென்றான்;
இறும்பூது கொண்டுயிர்த்து நிலைத்து நின்றான். 103

---

இறும்பூது—வியப்பு

## இயல் 28

போதலர் நறுமணப் பொய்கைக் கரையில்
காதலர் நெஞ்சம் கலந்து மகிழ்ந்தன.

நாணத்தால் மிகச்சிவந்து தோன்றும் கன்னம்;
நகைதவழ்ந்து விளையாடி இதழ்கள் மின்னும்;
காணத்தான் மீனெனக்கண் பிறழ்ந்து பாயும்;
காளையவன் நோக்குவதால் மருண்டு சாயும்;
காணத்தால் இயல்வளைகள் விளங்கும் செங்கை;
கச்சுக்குள் அடங்காமல் அழுங்கும் கொங்கை;
பாணத்தால் வடித்தெடுத்த விழியின் ஓரம்
பாய்ந்துழல்வோன் இவ்வனைத்துங் கண்டான் வீரன்.

'நாளொன்றில் சிலைவடிக்கும் ஆற்றல் மிக்கோன்
நனிவிழைந்து திங்கள்பல சிந்தித் தாய்ந்து,
தாளென்றும் இடையென்றும் மார்பம் என்றும்
தன்னைநிகர் முகமென்றும் விழிகள் என்றும்
தோளென்றும் ஒவ்வொன்றும் பலநா ளாகத்
தொன்முறையில் வழுவாமல் படைத்துத் தந்த
வாள்வென்ற விழியழகுச் சிலையே! நின்றன்
வாய்மலர ஏன்சிரித்தாய்?' என்றான் வேழன். 105

---

காணம்—பொன்

'ஏன்சிரித்தாய் எழிற்சிலையே என்னை நோக்கி'
 எனவினவும் வீரனுக்கு நின்ற பாவை
தேன்வடித்த மொழியொன்றும் புகன்று ளல்லள்;
 திருந்தடியால் ஈரடிகள் பெயர்ந்து சென்றாள்;
'நான்விடுத்த சொல்லுக்கு விடையே யில்லை
 நங்கையுனைச் சிலையென்று விளித்த தாலோ?
மான்கொடுத்த மருட்பார்வை பெற்ற வட்கு
 மனமிலையோ மொழியிலையோ வாய்ம லர்த்த?' 106

என்றுரைத்துப் பின்தொடர்வோன் அவள்செங் கையில்
 இலங்குமலர்த் தாமரையை நோக்கு வான்போல்
'ஒன்றிநிற்கும் அவ்விரண்டு மொட்டும் வேண்டி
 உனையிரப்பன் மகிழ்ந்தளிக்க வல்லாய் கொல்லோ'
என்றவற்கு மொட்டிரண்டும் ஈய வந்தாள்;
 'ஈதன்றே என்னுளத்து வேட்கை! என்னுள்
நின்றிருக்கும் மலரேனும் தருவாய்' என்றான்;
 நேரிழையாள் மலரொன்று கொடுக்க வந்தாள். 107

'சேயிழையுன் கைம்மலரை விழைந்தே னல்லேன்
 செங்கயல்கள் பிறழ்மலரே வேண்டு கின்றேன்;
ஈயிதனை இல்லையெனின் செம்மை தோயும்
 இதழிரண்டு தந்தாலும் போதும்' என்றான்;
வேயிணையும் தோளியிதழ் கொய்தா ளாக
 'விடுவிடுஅவ் விதழ்தன்னைக் கொய்ய வேண்டா
சேயிதழில் வழிதேனே வேண்டு' மென்றான்;
 சிற்றிடையாள் மொழிக்குறிப்பைப் புரிந்துகொண்டாள்.

வேய்—மூங்கில். சேயிதழ்—சிவந்த இதழ். 107, 108—இருபாடல்களும் காதற்குறிப்பை நயம்பட உரைக்கின்றன.

'பித்தரெனக் கலங்கிமனம் மாறி மாறிப்
பேசுவதேன்? நகைமொழியோ? குறும்புச் சொல்லோ?
நத்துவதை உரைக்காமல் தடுமாற் றத்தால்
நடுங்குவதேன்? பேதையர்பால் வீரர் காட்டும்
வித்தையிதோ? வேண்டுவதை உறுதி செய்து
விளம்புதியேல் தடையில்லை தருதற்' கென்றாள்;
புத்தமுத மொழியிதனைச் செவியிற் கேட்டுப்
பூரித்தான் அம்மொழியால் மயங்கி விட்டான். 109

'பித்தத்தின் வேகந்தான் பேசு கின்றேன்;
பேதையுன தெழிலுருவைக் கண்ட பின்பே
சித்தத்தின் நிலைகலங்கிச் செயல்க லங்கித்
தெரிவையுனை நினைந்திரங்கி மயங்கி நின்றேன்;
முத்தமிழின் சுவையனைத்தும் நின்வாய்ச் சொல்லில்
முகிழ்த்துவரக் காணுவதால் தெளிவுங் கொண்டேன்;
நத்துவதிப் பூங்கொடியே வேறொன் றில்லை
நல்குதியேல் வானுலகும் வேண்டேன்' என்றான். 110

'ஈவாருங் கொள்வாரும் இங்கே யில்லை
உரிமைதனைக் கொள்வதற்கோர் தடையு மில்லை;
பூவாருங் கொடிக்குரியை நீயே என்று
பூண்டுள்ளேன் ஒருறுதி; கண்ட ஞான்றே
நீவேறு நான்வேறென் றெண்ண வில்லை
நீங்கியது நானெனதென் றெண்ண மன்றே!
கூவாத குயிலொன்று கூவக் கண்டேன்
குழைவாக மனமின்று குளிரக் கண்டேன். 111

---

நத்துவது—விரும்புவது. பூஆரும்—பூநிறைந்த. ஞான்று—பொழுது.

நாளுக்கு நாளுன்னை நினைந்திரங்கி
 நான்மெலிந்து வாழ்ந்திருந்தேன்; வாடும் என்றன்
தோளுக்குத் தோள்கொடுக்க வந்து நின்ருய்!
 துணைவிஎன உரியமணங் கொள்க' என்ருள்;
'வாளுக்கும் வேலுக்கும் தோற்ற தில்லை
 வட்கார்தம் வில்லுக்குந் தோற்ற தில்லை
நீளக்கண் வேலுக்குத் தோற்று விட்டேன்
 நீயுரைத்த சொல்லுக்குந் தோற்றேன்' என்ருன். 112

'வேல்விழியென் றுனக்கிட்ட பெயர்பொ ருந்தும்
 வெலற்கரிய எனைவென்ற கார ணத்தால்;
சேல்விழிநின் துணையின்றி உலக மில்லை
 செந்தமிழே நீயின்றி வாழ்வே யில்லை;
நூல்புரைமெல் லிடையணங்கே எனக்கு நின்னை
 நுந்தைதர உடன்படுமோ? விழையும் எற்குப்
பால்வழியும் மொழிபுகலும் நின்னை என்பால்
 பரிந்தளித்தால் அவனைஎன்வாய் வாழ்த்தி நிற்கும்.113

மாவேழன் எவர்பாலும் கெஞ்சி நின்று
 மனம்விட்டுப் பொருளொன்று கேட்ட தில்லை;
பூ?வறும் தாழ்குழலி! நின்ம ணத்தின்
 பொருட்டாக நுந்தையின்பால் இரந்து நிற்பேன்;
கோவேலன் மறுத்துரைப்பின் போரே மூளும்;
 குமுறிஎழும் வீரத்தால் மணமே சூழும்;
நாவீறு வஞ்சினத்து மொழியாக் கொள்க!
 நாளைக்கு முடிவொன்று காண்பேன்' என்ருன். 114

வட்கார்—பகைவர்,

## இயல் 29

**தந்தையிடம் இசைவுபெற முடிவு செய்து**
**தணியாத காதலொடு பிரிந்து சென்ருர்.**

'புலரட்டும் முடிவொன்று காண்பேன்' என்று
  புலியனையான் புகன்றமொழி கேட்டுப் பூவை
'மலரட்டும் மணமுரசம் என்ப தல்லால்
  மருவட்டும் போர்முரசென் றுரைத்தல் நன்ரே?
பலரட்டுக் குவிப்பதிலா மணநாள் வேண்டும்?
  பற்றிருக்க உறவிருக்கப் பரிவி ருக்க
மலரொட்டும் மணமாலை சூடி நிற்க
  வழியிருக்க அதைவிடுத்துப் பகையா வேண்டும்? 115

போருக்கு முனைந்துவிடின் ஒருபால் தந்தை!
  புலியனைய காதலன்நீ மறுபால் நிற்பை!
யாருக்கோ இழப்பென்று நினைந்தாய் போலும்!
  எனக்கதிலோர் மணநினைவா மகிழ்வா தோன்றும்?
ஊருக்கும் பழிப்பாகும்; அதனல் நானே
  உயிர்த்தோழி துணைகொண்டு தந்தையின்பால்
நேருக்கு நேருரைத்து மணமுடிக்க
  நேயமுடன் இசைவுபெற முயல்வேன்' என்ருள். 116

---

அட்டு—கொன்று

'உனையடைய வேண்டுமெனும் நோக்கம் ஒன்றே
உந்துவதால் என்னியல்பால் உரைத்து விட்டேன்;
எனையடைய உனக்கிசைவு தந்தை தந்தால்
எனக்கதன்மேல் பேறுண்டோ வெல்க' என்றான்;
மனையடையும் நேரம்மிக ஆயிற் றென்று
மதிவந்து முகங்காட்டப் பிரிந்து செல்லத்
தினையளவும் மனமிலராய் விலகிச் சென்றார்;
திருமணத்து நினைவுடனே துயிலச் சென்றார். 117

நஞ்சுமிழும் முழுமதியை வானிற் கண்டார்;
நலிவுதரும் தென்றலெனும் காற்றைக் கண்டார்;
பஞ்சணையின் பெயராலே விரித்து வைத்த
பாழ்நெருஞ்சிப் பரப்பினையே அங்குக் கண்டார்;
விஞ்சுமணப் புகைபரவ, வெய்து யிர்த்து
விடும்புகையாய் அதுபரவிச் சூழக் கண்டார்;
வெஞ்சரமாய்ப் பூச்சரங்கள் தெரியக் கண்டார்;
விழிகுவியாக் கனவுலகில் மிதந்து சென்றார். 118

காட்சிப் படலம் முற்றும்.

---

சரம்—அம்பு

பூமருவு மணமாலை பூண்டு நெஞ்சுட்
புகுந்திருவர் ஒருவரென ஆகி நின்றார்
தாமரையும் மணமுமென இல்லறத்தில்
தாமிணைந்தோர் அணிகலனாய் விளங்கி நின்றார்.

—திருமணப்படலம் 163.

## இயல் 29

பழகிய காதலர் படுதுயர் நீங்கிடப்
பொழுது புலர்ந்தது புள்ளினம் ஆர்த்தன.

துயிலுக்கும் காதலுக்கும் தொடர்பொன் றுண்டோ?
துணைவனைத்தான் பெறும்வழியை உன்னி யுன்னி
மயலுக்குள் விழுந்துழல்வோள் உறக்க மின்றி
மலர்ப்பாயல் துவண்டுவிழப் புரண்டி ருந்தாள்;
மயிலுக்கு மணமாலை சூட்டு தற்கு
மன்னவன்றன் விடைகாணத் தவிக்கும் வீரன்
வெயிலுக்கு மன்னவன்றன் வரவு நோக்கி
விழித்திமையான் காத்திருந்தான் விடியு மட்டும். 119

இருளுக்குள் துயில்மடியில் அயர்ந்தி ருக்கும்
இருநிலத்தின் சோர்வகற்ற எழுந்த வெய்யோன்
கருநிறத்துக் கடலகத்துக் கதிர்க்கை நீட்டிக்
கண்கவரும் எழிலோடு கீழை வானில்
குருநிறத்துச் செவ்வொளியாற் கோலஞ் செய்தான்;
குரல்வகைய புள்ளினங்கள் இயம்போ லார்த்துச்
சிறகடித்துப் பறந்தனவான்; மலர்க ளெல்லாம்
சிந்துபனி யாற்குளிர்ந்து பொலிந்த யாண்டும். 120

---

உன்னி—நினைத்து. குரு—(அழகிய)நிறம். இயம்—வாத்தியம்
பொலிந்த—பொலிந்தன.

## இயல் 30

தந்தையின்பால் தூதுரைத்து மீள்க என்று
தலைத்தோழி தனையனுப்பி நின்றாள் மங்கை.

படியினுக்குள் புதுமலர்ச்சி பரவக் கண்டு
பாவைமனம் புத்துணர்ச்சி நிரம்பக் கொண்டாள்;
கொடியிருக்கும் மலரனைத்தும் கூந்த லுக்குள்
குடியிருக்கும் படிவைத்தாள்; தோழி தன்னைக்
கடிதழைத்தங் கருகமர்த்தி நெருநல் மாலை
கரைகாணுக் கனவுலகில் வீர னோடு
கொடிபிடித்துக் கற்பனைத்தேர் ஊர்ந்த வெல்லாம்
குறையாமல் சிதையாமல் உரையா நின்றாள். 121

'எனையளித்த தந்தைக்குச் செய்தி சொல்லி
எதிர்மறையால் விடையின்றி உடன்பா டாக்க
முனைவதுநின் கடனாகும்; நீநி னைத்தே
முயலுவையேல் முற்றுகும் எச்ச மில்லை;
நினைவிடுத்தால் எனக்குதவ யாரே உள்ளார்?
நேரிழையே நின்பெயரை வாழ்த்தி நிற்பேன்;
வினைமுடித்துத் திரும்'பென வேல் விழியு ரைத்தாள்;
'வேண்டுதியோ உடன்படுமெய்' என்றாள் தோழி. 122

---

படி—பூமி. நெருநல்—நேற்று. 122 ஆம் பாடலில் இலக்கணச் சொற்கள் நயம்பட வந்துள்ளன.

'கலக்கத்தாற் குழம்புமெனை விளங்கக் கூறிக்
கனிமொழியால் தெளிவுறுத்த முனைதலின்றி,
இலக்கணத்தாற் குழப்புகின்ருய்! புரிந்து கொள்ள
இந்நிலையில் இயலுவதோ?' என்ருள் செல்வி;
'குலக்கொழுந்தே! உயிரிரண்டு கூடுங் காலைக்
கூட்டுவிக்கும் உடன்படுமெய் போல உங்கள்
இலக்குடைய உயிரிரண்டைக் கூட்டு விக்கும்
எழில்மணத்தை அப்பெயராற் குறித்தேன்'என்ருள்.

'புணர்ச்சிக்கு விதிசொல்ல வல்லாய்! எங்கள்
புணரியற்கும் விதிசெய்ய வேண்டும்; தந்தை
உணர்ச்சிக்கு வயமாகி மறுக்கா வண்ணம்,
உரைக்குமுறை யாலுரைத்து, வீரனுக்கே
இணர்த்தொடையல் நான்சூட்டி மணமே கொள்ள,
இசைவிப்பாய்; என்னுயிர் நின் கையிற் றந்தேன்;
துணர்க்கொடியின் இடையுடையாய்! தூது சென்று
துணைதருமோர் மங்கலச்சொற் கொணர்க' என்ருள்.

---

உடன்படுமெய்—இரண்டுஉயிரைச் சேர்த்துவைக்கும் மெய்யெழுத்து.
புணர்ச்சி—இலக்கணப் புணர்ச்சி, புணரியல்—தலைவன் தலைவியர் கூட்டம்.
இணர்த்தொடையல்—பூங்கொத்து மாலை. துணர்—பூங்கொத்து.

## இயல் 31

**வேந்தன்பால் தூதுரைக்கச் சென்ற தோழி**
**வேல்விழிக்கு மணமுடிக்க வேண்டி நின்ருள்.**

மாதுக்குத் தந்தைவயத் தரசன் பாங்கர்
 மாவேழன் வேல்விழியின் மணமு டிக்கத்
தூதுக்கு நேர்ந்துசெலும் தோழி, மன்னன்
 துய்யமணி மண்டபத்தில் தனித்தி ருக்கும்
போதுக்கு வந்தெதிரே தொழுது நின்ருள்;
 புன்னகையால் வாழ்த்தியவன் அவளை நோக்கி,
'யாதுக்கு வந்தனை நீ? நின்னு ளத்தில்,
 என்விழைந்தாய்? விளம்புதியேற் பெற்ருய்' என்ருன்.

'உரைபிறழாச் செங்கோன்மை உடையோய்! என்றன்
 உள்ளத்தை உரையாமுன் பெற்ருய் என்ருய்;
கரையறியாப் பேருவகை நெஞ்சிற் பாயக்
 காண்கின்றேன் என்கருத்து முற்றிற் றென்றே;
விரைபிரியா மலர்பூத்துக் குலுங்கும் முல்லை
 வியன்கொடிதான் படரஒரு கொழுகொம் பின்றித்
தரைதனிலே கிடந்திடுமேல் வளர்ச்சி யுண்டோ?
 தவித்திருக்கக் காண்பதுதான் நமக்கும் நன்ருே? 126

---

விரை — மணம்.

இளமைஒரு நிலையுடைய பருவ மன்றே;
இருநிலத்தில் அப்பருவம் உயர்ந்த தொன்றும்;
வளமையினை நுகர்ந்தின்பம் துய்த்த லின்றி
வறிதொழிய விட்டுவிடல் இயல்பும் அன்று;
களமர்வயல் பருவத்தே பயிர்செய் யாரேல்
கண்காணப் பயனென்றும் தருவ தில்லை;
களகளவென் றொழியினுள் மழைபொ ழிந்தால்,
கானகத்து நிலவெறிந்தால் எவர்க்கு நன்மை?' 127

கொற்றவன்முன் பற்பலவும் விதந்து தோழி
கூர்மதியால் உரைத்தவெலாம் கேட்டி ருந்தோன்
'கற்றறியும் சான்றோர்தம் அறிவா ளுய்ந்து
கழறுதல்போல் ஏதேதோ மொழிந்து நின்றாய்;
உற்றவுன துளம்புகல மறந்தாய் போலும்
உண்மைசொலத் தயங்குவதேன்? நோக்க மென்ன?
சுற்றிவளைத் துரைப்பதினி வேண்டா என்பால்
துணிந்ததனை மொழிந்திடுநீ அஞ்சேல்' என்றான். 128

'அருள்பொழியும் விழியுடையாய்! பருவம் வந்த
அரிவையர்தம் வாழ்வுக்குத் துணையைத் தேடி
மருளுறுவ தியல்பன்றோ; மங்கை யர்க்கு
மணநாளே திருநாளாம்; அந்நன் னாளைத்
தருவதுநின் கடனாகும்; அதனை வேண்டித்
தண்குடையோய் நின்னிடம்யான் வந்தேன்' என்றாள்;
'சுருள்குழலி! நீவிழையும் ஒருவ னுக்கே
துணையாவாய்' எனமகிழ்ந்து சொன்னான் மன்னன்.129

---

களமர்—உழவர். எறிந்தால்—வீசினால்

'தந்தையினும் பரிவுடையோய்! மாலை சூடத்
தவிக்குநிலை எனக்கில்லை; குலம்தழைக்க
வந்தவளை வேல்விழியை அவள்விழைந்த
வாள்வீரன் ஒருவனுக்கு மணமுடிக்கச்
சிந்தையினில் நான்விழைந்தே வேண்டி நின்றேன்;
சிறியவளென் வேண்டுதலைச் செவியில் ஏற்று
நுந்தைகுலம் தழைத்துயர்ந்து வளர்வான் வேண்டி
நுண்ணிடைக்குத் திருமணநாள் குறிக்க' என்ருள். 130

'பொன்மகளே! ஆண்மகவு பெற்றேனல்லேன்
பொற்பதுமை என்னஒரு பெண்ணைப் பெற்றேன்;
என்மகட்கு மணமுடித்தால் நெடுநாள் நெஞ்சில்
இருந்துறுத்தும் கலிதீர்க்க அவள்வயிற்றில்
நன்மகவு பலபிறக்கும் என்றிருந்தேன்;
நனவனைத்தும் பகற்கனவாச் செய்து விட்டாள்;
மன்னிலத்து மன்னர்பலர் வேண்டி வந்தும்
மணங்கொள்ள மறுத்தனளே' என்ருன் வேந்தன். 131

கலி—துன்பம்.

## இயல் 32

**மணமகன் யாரென அறியா மன்னன்**
**கனலெனச் சீறிக் கடுமொழி பகர்ந்தான்.**

மன்னவன்றன் உரைகேட்ட தோழி 'ஐய!
 மன்றலுக்கு மனமொப்பி விட்டாள் தையல்'
என்னலுமவ் வயத்தரசன் களிப்பின் மூழ்கி,
 'என்னோற்றேன் இனியமொழி இதனைக் கேட்க!
மின்னனைய இடையுடையாள் எழிலுக் கேற்ற
 மேலவனைத் தேர்ந்தெடுத்து மணமு டிப்பேன்;
நன்னகருள் மணமுரசம் விரைவில் கேட்பாய்;
 நலியுமென்றன் கலியகன்ற தின்றே' என்றான். 132

'கன்னிமகள் வாழ்க்கைக்குத் துணையைத் தேடிக்
 கலங்குநிலை நினக்கில்லை; தன்ம னத்தே
உன்னியுளள் ஒருவனைத்தான்; அவனோ பாரில்
 ஒப்பரிய செப்பரிய வீர னவன்;
மன்னவநீ அன்னவற்கு மகளைத் தந்தால்
 மாநிலத்துப் பெருமையெலாம் நின்னைச் சாரும்';
என்னுமொழி செவிபுகுதா முன்னர் வேந்தன்
 'எந்நாட்டிற் கரசனவன் இயம்பு' கென்றான். 133

---

என்நோற்றேன்—என்னதவம் செய்தேன்,

'நாட்டினுக்கோர் அரசனலன்; நாடாள் வோர்க்கு
நற்றுணையாம் அமைச்சுமலன்; அவரை யெல்லாம்
ஆட்டிவைக்கும் பெருவலியன் அழகன் வீரன்
அன்னவற்கே தன்மனத்தைப் பறிகொ டுத்தாள்;
சூட்டுதற்கு மணமாலை அவனை யன்றித்
தொல்லுலகில் எவருமிலர்' என்ருள்; மன்னன்
வாட்டமொடு, 'நங்குலத்து மரபை மீறி
வழக்கமிலாச் செயல்புரிய நினைந்தாள் கொல்லோ? 134

இவளழகில் மனமயங்கித் தவங்கி டக்கும்
இளவரசர் பலரிருந்தும் மதியா ளாகி,
எவனெருவன் தனை நினைந்தோ மறுகு கின்ருள்?
இகழ்ச்சிசொலும் பான்மைக்கோ இடங்கொ டுத்தாள்?
தவறுசெயும் துணிவிவட்கு வந்த தேயோ?
தன்னிளமைப் பருவத்தால் விளைந்த தேயோ?
எவருடைய தூண்டுதலால் இதனைச் செய்ய
ஏந்திழையிங் கொருப்பட்டாள்?' எனக்க னன்ருன். 135

மீண்டுமவன் விழிசிவந்து, 'மன்ன ருக்குள்
மீக்கூர்ந்த புகழுடையான் ஒருவற் றேர்ந்து
பூண்டருதோள் புணர்மாலை சூடச் செய்வேன்;
போபோஅவ் விளையாட்கும் இதனைக் கூ'றென்
ருண்டுமுறை செயுமன்னன் ஆணை யிட்டான்;
அப்பனெனும் முறைமறந்தான்; தோழி அஞ்சி,
'ஆண்டகைநின் சொல்லுக்கோர் அட்டி யுண்டோ?
ஆயினுமென் பணிந்துரைக்குச் செவியீ' கென்ருள்.

---

மீக்கூர்ந்த—மேம்பட்ட. பூண்தருதோள்—அணிகலன்களையுடைய தோள்.

## இயல் 33

சீறிய மன்னன் சினத்தீ யதனை
ஆறிடச் செய்தனள் அறிவுடைத் தோழி.

அஞ்சித்தன் மொழிபுகல்வாள் அருள்பொழிந்த
அரசன்றன் முகக்குறிப்பை நோக்கி நோக்கி,
‘வஞ்சிக்குத் தாயில்லாக் குறையே தோன்றா
வண்ணமிது நாள்வரையும் வளர்த்த நீயோ
வெஞ்சினத்து மொழிபுகன்றாய்! அவள்தன் வாழ்வை
வீணாக்க விழைகின்றாய்! செற்றம் ஒன்றே
நெஞ்சகத்துப் புகவிடுவோர் நீதி காணார்;
நேர்மைக்கும் இடமளியார்; பகையே கொள்வர். 137

உயிராக ஒருவனைத்தன் மனத்தி னுள்ளே
உறவாக மதித்திருக்கும் ஒருத்தி யின்பால்
அயலானை மணக்கவென எடுத்து ரைத்தால்
அவளுடல்தான் மணமேடை வந்து சேரும்;
இயமாரும் மணமுரசம் ஆர்த்தல் கேளோம்;
இரங்கலொலி ஒன்றன்றி எதுவும் கேளோம்;
அயில்வேலோய்! தண்ணளியும் கொண்டுள் ளாய்நீ!
ஆய்ந்தொன்று மேற்கோடல் சால்பாம்’ என்றாள். 138

---

இயம்—வாத்தியம் அயில்—கூரிய. தண்ணளி—கருணை.

‘காதலெனின் ஆணைக்குக் கட்டுப் பட்டுக்
கருகிவிடும் பொருளன்றாம்; எதிர்த்து வந்து
தீததனை நெருங்குமெனில் தளிர்த்து நிற்கும்
தெய்வீகத் தன்மையது வாய்ந்த தென்றே
ஓதலிலே வல்லவர்கள் உரைப்பர்; அந்த
உண்மையினை நீயுணர மறுத்து நிற்பின்
சாதலிலே போய்முடியும்; குலம கட்குச்
சாக்காடு தரநினைந்தால் நின்பா’ டென்றாள். 139

‘நேரிழையே என்மனத்தை உருக்கி விட்டாய்!
நெறிதடுமா றுவண்ணம் திருப்பி விட்டாய்!
ஆருயிர்போல் வளர்த்தவளைத் தகுதி யில்லா
ஆருக்கோ கொடுப்பதெனின் பெற்ற நெஞ்சம்
கூரெரியின் மெழுகாகி நையு மன்றோ?
குழம்புமெனை என்செய்யக் கூறு கின்றாய்?
சீரெதுவோ அதுசெய்ய ஒப்பு கின்றேன்;
சிறியவட்கு மணமுடிந்தாற் போதும்’ என்றான். 140

## இயல் 34

வேல்விழி காதலன் வேழன் ருனெனச்
சேல்விழித் தோழி செப்பினள் அவற்கே.

'மங்கையர்க்குள் அரசியென விளங்கும் நின்றன்
மகளுளத்தைக் கவர்ந்தானோர் காளை என்ருல்
இங்கவனைத் தகுதியிலான் என நினைக்க
இயலுவதோ? அவனைத்தான் எளியனாக
எங்ஙனம்நீ நினைந்தனையோ? மணமே வேண்டா
திருந்தமகள் இளவரசி காதல் கொண்டு
கொங்கலரும் மலர்த்தொடையல் சூட்டுதற்குக்
குறிக்கொண்டாள் எனினதுதான் புதுமையன்ரே?

பேரரசர் அரிதின்முயன் ருலுங் கிட்டாப்
பெரும்பேறு நீபெற்ருய்! வேந்தரெல்லாம்
வீரனிவன் பெயர்கேட்பின் நடுங்கி நிற்பர்;
வெலற்கரிய வலியுடையான்; களிறு சூழ்ந்து
பாரதிரப் போரெதிர்ந்து வரினும் அஞ்சான்
பாய்ந்தவற்றைப் பரபரவென் றிழுத்துச் சாய்த்துக்
காரதிரும் இடியேறென் ருர்த்து நிற்பான்;
கட்டழகும் கட்டுடலும் ஒருங்கே பெற்ருன். 142

---

கொங்கு—தேன்

கற்பாறை பலவுருட்டி, நெடிதின் ஓங்கு
 கருமரங்கள் அடிபெயர்த்துச் சீறிப் பாய்ந்து,
முற்போகும் கான்விலங்கை எதிர்த்துத் தாக்கி,
 முழுவலியும் கெடஇழுத்து, வாகை சூடி
நிற்பாரின் பேரொலிபோல் ஆர்த்துச் செல்லும்
 நிறைவெள்ளப் போக்குடைய புனலா றென்னும்
சொற்பேரால் வழங்கிவரும் ஆற்றின் தென்பால்
 சூழ்மதில்சேர் மூவகமே அவன் நா டாகும். 143

அரியணையும் செங்கோலும் மணிவி ளங்கும்
 அணிமுடியும் வெண்குடையும் அவனுக் கில்லை;
உரிமையுடன் ஆட்சிசெய நாடும் இல்லை;
 உண்மைநிலை இதுவெனினும் அவற்றை யெல்லாம்
அரசர்தமக் களிப்பதுவும், தற்ப கைத்தால்
 அழிப்பதுவும் அவன்கையில் இலங்கும் வாளே;
அரியணையான் மாவேழன் என்னும் பேரான்;
 அரசருள்ளும் அவன்போல்வார் யாரே உள்ளார்? 144

பெருந்திறலன் அவனுக்கே மாலை சூட்டப்
 பெட்புடன்தன் மனத்தகத்தே உறுதி பூண்ட
முருந்தனைய நகையுடையாள் பிழையோ செய்தாள்?
 மொய்ம்புடையான் அவன்தகுதி இலனோ? சொல்வாய்!
விருந்தினனாய் நங்கோயில் அகத்து வைகும்
 வேழன்றன் உறவுபெற விழையாய் கொல்லோ?
திருந்தயில்வேல் மன்னநின துள்ளம் யாதோ?
 தெள்ளிதின்நீ ஆய்ந்தெனக்குச் செப்பு' கென்றாள்.145

---

முருந்து—மயிலிறகின் அடிப்பகுதி

## இயல் 35

**துணையாவோன் வேழனெனத் தோழி சொல்ல
மணநாளை முரசறைய மன்னன் சொன்னான்.**

'மணமகனாய் மருமகனாய் மாலை சூட
மாவேழன் வருமென்றால் மறுப்பா ருண்டோ?
நிணமருவு நெடுவேலான் பெயரைச் சொன்னால்
நீணிலத்துக் குறைசொல்ல எவரே உள்ளார்?
மணமலர்சூழ் நெடுங்குழலாள் இவனை எய்த
மாதவமே செய்திருத்தல் வேண்டும்; வேந்தர்
கணமுழுதும் இவனிழலில் வாழும் போது
களிறனையான் தகுதிக்கோர் குறைதான் ஏது? 146

என்மகளோ பிழைசெய்வாள்? இல்லை! இல்லை!
என்குலத்துப் பெருமையினை உயர்த்தி விட்டாள்!
பொன்மலரில் நறுமணமே தோன்றிற் றென்னப்
பூவையிவள் மனத்தெழுந்த ஆர்வ மெல்லாம்
தன்னளவிற் கைக்கிளையாய் விடுமோ என்று
தயங்குகிறேன்; மாவேழன் இசையா னாகின்
மின்னனையாள் வேல்விழியின் நெஞ்சில் துன்பம்
மிடைந்துவிடும் வாழ்வுமொரு கான லாகும்.' 147

---

நிணம்—கொழுப்பு.

என்றிரங்கும் மன்னனுக்குத் தோழி சொல்வாள்,
'இளவரசி பெறுங்காதல் இரண்டு நெஞ்சும்
ஒன்றுபடும் ஐந்திணையாய் விளங்கிற் றைய!
ஒருமகளாம் வேல்விழியை மணக்கும் நாள்தான்
என்றுவரும் என்றேங்கு கின்றான் வேழன்;
எள்ளளவுங் கவலற்க; இசைவும் தந்தான்;
மன்றல்கொள இவ்வணங்கை மறுப்பா ருண்டோ?
மாதவங்கள் செய்தவற்கே வாய்க்கும்' என்றாள். 148

இசைந்தானவ் வெலற்கரிய வீரன் என்ற
இனியமொழி கேட்டளவில் அமிழ்தம் ஆர
மிசைந்தான்போல் மகிழ்ந்தானவ் வயந்தர் வேந்தன்;
மீளியவன் இசைவுபெற முயன்றார் யாரோ?
ஒசிந்தொசிந்து நடைபயிலும் வேல்வி ழிக்கும்
ஒள்வேலான் தனக்குமிடை நின்று கூத்து
நசைந்தவணம் நடத்தியவள் நீதான் என்று
நன்குணர்ந்தேன் நின்மொழியால்' என்றான் மன்னன்.

'வேல்விழியின் தன்மனமும் இமையா வீரன்
வேழன்றன் மனமுமொரு நிலையில் நின்று
நூல்வழியே கோத்தனபோல் இணைந்த தென்றால்
நூல்வல்லார் ஊழெனவே நுவல்வர்; ஆனால்
கோல்வழுவாய்! பழிஎன்மேற் சுமத்து கின்றாய்;
கூர்ந்துணர்ந்து நோக்குங்கால் பருவக் கூத்தின்
மேல்விளைவே ஈதன்றி வேறொன் றில்லை;
மீறியவர் இயற்கையினை யாரே?' என்றாள். 150

---

ஐந்திணை—பொருந்திய அன்பு. மன்றல்—மணம். மிசைதல்—உண்ணல்
மீளி—வீரன். ஒசிந்து—வளைந்து. நசைந்தவணம்—விரும்பியவண்ணம்.

'அளப்பரிய நூல்பலவும் கற்ரு ரேனும்
அறிவொன்றும் அறியாத மற்ரு ரேனும்
களப்பலிகள் பலகொடுத்த வலிய ரேனும்
கனவகத்தும் போர்காணு மெலிய ரேனும்
உளப்படுத்தி உலகியலிற் சிறந்தா ரேனும்
உறவறுத்துப் பற்றனைத்தும் துறந்தா ரேனும்
விளக்கரிய காதலெனும் கூத்துள் நின்று
விளையாடா மாந்தரெங்கும் இல்லை' என்ருள். 151

தோழியுரை கேட்டரசன் நகைத்து நின்று
'துடியிடையாள் மணமுடிக்க முயன்ற உன்னை
வாழியென வாழ்த்துகின்றேன்; நாளை யந்த
மாவேழன் தனைக்கூடி அளவ ளாவி,
ஏழிசையின் இயமுழங்கச் சான்ருேர் வாழ்த்த
இளவரசி மணமாலை சூடும் நல்ல
நாழிகையும் மங்கலநன் ளுளும் ஆய்ந்து
நகருக்கு முரசறைந்து சொல்வோம்' என்ருன். 152

## இயல் 36

**மன்னவன் மொழியெலாம் வந்தவள் உரைத்திடக்**
**கன்னலின் மொழியாள் களிப்பில் மூழ்கினள்.**

விடைபெற்று நீங்குமவள் துள்ளிச் சென்று
வேல்விழிக்கு நிகழ்ந்தவெலாம் விளக்கி நின்றாள்;
தடையுற்று விடுமோதன் காதல் என்று
தவித்திருந்தோள் நற்செய்தி கேட்டு நெஞ்சில்
உடைபட்ட மடைபோல உவகை பொங்கி
உடலெல்லாம் பாய்வதுபோல் உணர்ச்சி கொண்டாள்;
இடைமட்டும் மெலிந்திருக்க எழிலைத் தாங்கும்
ஏனையுறுப் பத்தனையும் விம்மிற் றம்மா! 153

தான்விழைந்த மணமகனே கிடைத்து விட்டான்;
தனைப்பெற்றோன் மறுப்பொன்றும் உரைக்க வில்லை;
மான்விழைந்த பார்வையினாள் மனம்போல் வாழ்வு
வாய்த்தமையாற் பூரிப்புக் கொண்டு நின்றாள்;
மீன்வளைந்து விளையாடும் குளிர்த டத்துள்
மேவுமெழிற் றாமரைபோல் மலர்ந்தி ருந்தாள்;
தேன்விளைந்த காதலிலே வெற்றி கண்டால்
தெரிவையர்க்கு மேலுமொரு பேறும் உண்டோ? 154

## இயல் 37

**ஆயிழையின் நெஞ்சமெலாம் மகிழ்வு பொங்க**
**ஞாயிறெனும் செங்கதிரோன் தோன்றி வந்தான்.**

எஞ்சிடுமப் பகற்பொழுது நீங்கிச் செல்ல
இடையிலொரு கங்குலெனும் நெடிய போழ்து
விஞ்சுமெழில் கொண்டவட்குப் பகையாய் வந்து
விடிவதற்கு மறந்ததுபோல் நின்ற தங்கே!
'நஞ்சனைய இவ்விரவு முன்ன ரெல்லாம்
நாடோறும் விரைந்துசெலும் இன்று மட்டும்
வஞ்சியெனை வாட்டுதற்கோ நிலைத்த' தென்றாள்
வாள்வீரன் மணச்செய்தி நோக்கி நின்றாள். 155

ஆயிழையின் மனத்தகத்தே அடக்கி வைத்த
ஆர்வமெலாம் திரண்டுருண்டு வடிவு கொண்டு
மாயிருநீர்க் கடற்பரப்பில் உருவு காட்டி
வருவதுபோற் செங்கதிரோன் கீழை வானில்
ஞாயிறென முகங்காட்டித் தோன்றி வந்தான்;
நங்கையவள் உள்ளமெலாம் ஒளிபெற் றோங்கிப்
பாயுவகை மீதூரத் தளிர்த்து நின்றாள்
பகலவற்கு வாயார நன்றி சொன்னாள். 156

---

மாயிரு—கரிய பெரிய.

## இயல் 38

**வயத்தரசன் வேண்டுமொரு வாய்மொ ழிக்கும்
மாவேழன் மனமுவந்தே இசைவு தந்தான்.**

புலர்காலைப் பொழுதத்தின் வரவு கண்டு
பூரித்த வயத்தரசன் விரைந்து சென்று
மலர்மாலை வயங்கிருதோள் வேழற் கண்டு
மகளைமணங் கொள்கவென வேண்டி நின்றான்;
'நலமாரும் என்புரவி தேடி வந்தேன்
நான்தருவேன் நின்துணையை* என்று ரைத்தாய்!
பலர்சூழ உரைத்தமொழி வாய்த்த தைய!
பாவையைஎன் துணையாகக் கொள்வேன்'என்றான் 157

பெருவலியன் ஒருவனைஎன் மருக னாகப்
பெறுவதன்மேல் மகிழ்வுளதோ? ஆனால் நீதான்
சிறியஒரு வாக்குறுதி தருதல் வேண்டும்;
சீறுபகை கொண்டிரண்டு நாடுந் தம்முள்
பொருநிலையை எய்துமெனில் இவள்தான் இந்தப்
பொன்னாட்டை விட்டகலல் கூடா' தென்றான்;
திருமகளை மருவுவதில் மயங்கி நிற்கும்
திண்ணியனவ் வுறுதிமொழிக் கிசைவு தந்தான். 158

*54ஆம் பாடலை நோக்குக்.

## இயல் 39

**முரசம் ஆர்த்தது முழவொலி கேட்டது**
**அரசன் மகளை அடைந்தனன் வேழன்.**

மணமகளாம் வேல்விழியை அணுகி நின்று
மன்னவனவ் வுறுதிமொழி கூறக் கேட்டுக்
குணமகளாம் அன்னவளும் இசைந்தா ளாகக்
கொற்றவனும் மகிழ்ந்தெழுந்து சான்றோர்ச் சார்ந்து
மணவறையை அமைப்பதற்கு நாள்கு றித்தான்;
மாநகரம் முழுமைக்கும் முரச றைந்து
தணவரிய மகிழ்வூட்டும் செய்தி சொல்லத்
தனைச்சூழும் அமைச்சர்க்கும் ஆணை யிட்டான். 159

மாந்தரெலாம் மணமுரசங் கேட்டுத் தங்கள்
மக்கள் திரு மணம்போல மகிழ்வு கொண்டார்;
வேந்தனுறை அரண்மனையும் மாடஞ் சேரும்
வீதிகளும் தாமுறையும் இல்லம் யாவும்
ஏந்துமெழில் கொண்டிலங்கத் தோர ணங்கள்
எடுத்தார்பூம் பந்தர்பல படைத்தார்; வண்ணச்
சாந்துவகை மதிற்பூசி நகர மெல்லாம்
சாற்றரிய ஒப்பனையாற் கோலஞ் செய்தார். 160

தெருவெல்லாம் புதுமணலைப் பரப்பிக் கோலஞ்
  செய்திறத்தாற் புதுநகரம் படைத்து விட்டார்;
செருவெல்லாம் வென்றவனைக் கணவ னாகச்
  சேயிழையாள் மணமாலை சூட்டும் நன்னாள்
வருவதனாற் சிறைக்கதவம் திறக்க என்று
  வாள்வேந்தன் ஆணையிட்டான்; வாரி வாரித்
தருபொருளால் கற்றோரும் மற்றோர் யாரும்
  தனிமகிழ்ச்சி கொளச்செய்தான் தானுங் கொண்டான்.

குறித்தமண நாள்வரலும் கொற்ற வன்றன்
  கோயிலெலாம் தெருவெல்லாம் மக்கள் கூடிச்
சிரித்தமுகங் கொண்டங்கு நிறைந்து நின்றார்;
  சேர்ந்தவருள் மன்னரென்றும் மக்கள் என்றும்
பிரித்தறிய முடியாமற் கலந்து நின்றார்;
  பெரும்புலவர் தம்வாயால் வாழ்த்தி நின்றார்;
விரித்தஇதழ் மலர்மாலை சூட்டி வேழன்
  வேல்விழியைக்கைப்பிடித்தான் துணையாக்கொண்டான்

மாமலையிற் பிறந்தஒரு மணியும், பூமி
  மண்ணுக்குள் புதைந்திருந்த பொன்னும் ஒன்றாய்த்
தாமருவி அணிகலனாய் விளங்கல் போலத்
  தனிமகளாம் வேல்விழியும் வேழன் றானும்
பூமருவு மணமாலை பூண்டு நெஞ்சுட்
  புகுந்திருவர் ஒருவரென ஆகி நின்றார்;
தாமரையும் மணமுமென இல்லறத்தில்
  தாமிணைந்தோர் அணிகலனாய் விளங்கி நின்றார். 163

## இயல் 40

**திருமண மாகிய இருவரும் நிலவிற்**
**பெறுபயன் துய்த்துப் பெருமகிழ் வெய்தினர்.**

வந்தயர்ந்த விருந்தினரும் பகலும் ஓய
மணங்கண்டு மேற்றிசையில் கதிரோன் சாயச்
சந்தனத்துப் பொதியமலைப் பிறந்த தென்றல்
தண்மலர்கள் பலநீவி உலவி நிற்கப்
பந்துருண்டு வந்ததென மதியம் வானில்
படர்ந்துவரும் முகிலுக்குள் தவழ்ந்து செல்ல
முந்துமிரு நெஞ்சங்கள் துடித்து நிற்க
முதலிரவு வந்ததுவே இன்பம் நல்க! 164

பூமணமும் புகைமணமும் துதைந்து சுற்றும்;
புகுமிடங்கள் ஒப்பனையாற் பொலிந்து முற்றும்;
தூமலரின் சரங்களெலாம் அசைந்தி ருக்கும்;
தூவியுடன் பூவிதழும் கலந்தி ருக்கும்
காமமுறு பஞ்சணையும் விரித்தி ருக்கும்;
கட்டிலொடு கண்ணடி இணைந்தி ருக்கும்;
தாமரைபோல் அமைந்தஒளி விளக்கி ருக்கும்;
தண்ணியமென் தென்றல்வர வழியி ருக்கும். 165

---

துதைந்து—நெருங்கி, தூவி—அன்னத்தின் மெல்லிறகு

பாலிருக்கும், வகைவகையாய்ச் சுவைகள் நல்கும்
பழமிருக்கும், பக்கமெலாம் எழிலி ருக்கும்;
மேலிருக்கும் கூரையெலாம் வரைந்தி ருக்கும்
மேன்மை பெறும் ஓவியங்கள் நிறைந்தி ருக்கும்;
சேலிருக்கும் புனலலைகள் நெளிதல் போலத்
தென்றலிலே திரைச்சீலை அசைந்தி ருக்கும்;
வேலிருக்கும் விழியாளும் வேழன் ருனும்
விரிந்திருக்கும் மாளிகையுட் புகுந்தி ருந்தார். 166

புகுந்தவர்தாம் புதுமைமிகும் உலகிற் சென்று
புக்கவர்போல் அமர்ந்திருந்தார்; இருவர் நெஞ்சும்
தகுந்தகுமென் ருசையினுல் படப டத்துத்
தாளமிட உணர்ச்சிகொண்டார்; வடுவின் காயை
வகுந்ததெனும் விழியாலே அவன்ந லத்தை
வாரியுண்டாள்; அவனுந்தன் விழிம லர்த்தி
நகுங்கமல முகத்தாளின் அழகை எல்லாம்
நனியுண்டு மயங்கிமனங் களித்தி ருந்தான். 167

கையொன்ருல் சேயிழையின் மென்தோள் பற்றிக்
கன்னத்தை மற்ருென்ருல் தொட்டான்; அந்தக்
கையொன்ரு முன்னமவள் நாணங் கொண்டு
காளையவன் தடந்தோளில் முகம்பு தைத்தாள்;
மெய்யொன்றும் பொழுதத்தில் இருவர் தாமும்
மேனுளிற் கண்டறியா இன்பங் கண்டார்;
பொய்யென்ருர் இவ்வாழ்வை அறியா மாந்தர்;
புதுமையிது புதுமையிது என்று வந்தார். 168

சேல் - கயல். வடு - மாவடு. வகுந்தது - பிளந்தது.

காணாத இன்பத்தான் அவள்பாற் கொய்யாக்
  கனிகொய்தான்; முகஞ்சிவந்து பெண்மை நாணம்
பூணாக்கொண் டவளும்கொழுநன் றன்னைப்
  பூங்கொடிபோல் தன்னுடலால் தழுவிக் கொண்டாள்;
'பாணாக வண்டார்க்கும் பொய்கைப் பக்கம்
  பார்த்தென்பாற் பூங்கொடியை வேண்டி நின்றீர்!
நாணாளும் நுமைப்பற்றிப் படர்ந்து வாழும்
  நல்லகொடி யாகிவிட்டேன் கொள்க' என்றாள். 169

பாலறியார் பழமறியார் ஆனால் அந்தப்
  பாற்சுவையும் பழச்சுவையும் நன்கு ணர்ந்தார்;
நூலறியார் கவிநுகரப் புகுதல் போல
  நுழையினும்பின் சொலற்கரிய இன்பங் கண்டார்;
வேலறிவான் வாளறிவான் எனினும் இன்று
  வேலறியாக் களங்கண்டான்; வெற்றி கண்டான்;
மாலவள்தன் விழிவேலால் தோற்பும் கண்டான்;
  வளர்நிலவுப் பயன்முழுதும் வாரி யுண்டான். 170

---

பாண்—பாடல். நாணாளும்—நாளெல்லாம். மாலவள்—இன்பமயக்க முடையவள்.

## இயல் 41

**புணர்ந்து திகழ்ந்தோன் பூவையின் நலத்தை**
**உணர்ந்து புகழ்ந்தான் ஒண்டொடி மகிழ்ந்தாள்.**

'புலனைந்தாற் பெறுமின்பம் அனைத்தும் என்றன்
பூங்கொடிபால் நுகர்ந்ததனுள் திளைத்தேன்; நல்ல
குலனுவந்த நினைக்கண்டு கொண்ட காதற்
கொடுநோய்க்கு நீயேநன் மருந்தாய் நின்ருய்!
கலன்சுமந்த மென்தோளில் துயிலும் இன்பம்
கண்காணுத் துறக்கத்தை விஞ்சக் கண்டேன்!
நலனுகர்ந்து விலகுங்கால் சுடுதல் கண்டேன்
நண்ணுங்கால் தண்ணென்னும்விந்தைகண்டேன்! 171

நின்னலனை அறிதோறும் முன்னர் என்பால்
நின்றிருந்த அறியாமை கண்டேன்' என்று
பொன்னனையாள் புணர்ச்சியினுல் மகிழ்ந்துரைத்தான்;
'புரிநகையில் முல்லையுடன் கொவ்வை கண்டேன்
மின்னுமொளி மேனியினில் தளிரைக் கண்டேன்
மீன்விழியில் குவளைமலர் மிளிரக் கண்டேன்
சின்னஒரு மின்னலிடை துவளக் கண்டேன்
செய்யமலர் நின்முகத்தில் மலரக் கண்டேன். 172

---

கலன் – அணிகலன். துறக்கம் – சுவர்க்கம்.
செய்யமலர் – செந்தாமரை.

முகிலிடையே மலர்முல்லை கண்ட தில்லை
மொய்குழலில் அம்முல்லை மலரக் கண்டேன்;
துகிலுடைய மாங்கனியைக் கண்டதில்லை
தோள்தொட்ட பின்னரதைக் கண்டு கொண்டேன்;
நகையுடைய முல்லைக்கு வரிசை யில்லை
நானின்றவ் வரிசைதனை நின்வாய்க் கண்டேன்;
புகலரிய இனிமைக்கு வடிவ மில்லை
பூமகளே நின்னுருவில் அதனைக் கண்டேன். 173

வானத்து முழுமதிதான் நின்மு கத்து
வடிவழகுக் கொப்பாகத் தவங்கி டக்கும்;
மீனத்து நடுவிலது மேன்மை பெற்றும்
மேற்பொருந்தும் களங்கத்தால் உவமை யாகா
மானத்து நல்லுணர்வால் வெட்கி யங்கு
மாமுகிலுட் புகுந்தொழிந்து போதல் காண்பாய்!
நானத்தும் எழிலுருவப் பாவாய்! நின்றன்
நலத்தைஎலாம் எவ்வண்ணம் புகழ்வேன்'என்றான் 174

உணர்ச்சியினால் மெய்தழுவி என்றுங் காணா
உலகினுக்கு மாவேழன் அழைத்துச் சென்று
புணர்ச்சியினால் அவன்திளைத்து மகிழ்ந்து ரைத்த
புகழ்மொழிகள் அத்தனையும் மயங்கிக் கேட்டாள்;
உணற்குரிய நலமெல்லாம் உண்ட பின்னர்
உவந்துநலம் பாராட்டி உரைத்த சொல்லால்
துணர்க்கொடியின் மெல்லிடையாள் துவண்டி ருந்தாள்
தொல்லுலகைத் தன்னிலையை மறந்தி ருந்தாள். 175

---

முகில்—மேகம். துகில்—ஆடை. நகை—ஒளி. மீனம்—விண்மீன்கள். நானத்தும்—நான் நத்தும்.

புகழ்மொழிகள் தரும்மயக்கம் வேழன் தந்த
புணர்ச்சியினுல் வரும்மயக்கை விஞ்சி நிற்கும்;
புகழ்மொழிகள் தந்நலத்தை வெறுத்து விட்ட
பொதுநலத்துத் தொண்டரையும் மயக்கு மென்ருல்
வகிர்வடுவின் விழிமகளிர் நெஞ்சை மட்டும்
வாட்டாமல் வளேக்காமல் விட்டா போகும்?
திகழ்மலர்கள் உதிர்ந்திருக்கும் அணேயின் மீது
திருமகளும் சொக்கியிமை குவித்தி ருந்தாள். 176

ஆண்மைக்கோர் உவமைசொலும் உலக வீரன்
ஆணழகன் மாவேழன் என்னும் நம்பி,
வாண்மைக்கண் மாதரசி பாரில் இல்லா
வடிவழகி வேல்விழியாம் நங்கை, அன்புக்
கேண்மைக்கோர் இலக்கியமாய் இல்ல றத்துக்
கிழமைக்கோர் இலக்கணமாய் வாழ்ந்து வந்தார்;
வேண்மைக்கோர் உறுபயனேக் காதல் வாழ்வின்
விளேவுதனேக் கண்டுவக்கும் வாய்ப்பும் பெற்ருர். 177

திருமணப் படலம் முற்றும்

---

வாண்மைக்கண்—வாள்போன்ற மைபூசியகண்கள்,
வேண்மை—விரும்புந்தன்மை.

மாதவளும் துன்புற்ற பின்னே என்றும்
மாருத இன்பத்தைப் பெற்றெ டுத்தாள்;
போதவிழும் மலர்முகத்தாள் தாய்மை கொண்டாள்!
பூங்கொடியில் அரும்பொன்று பூக்கக் கண்டாள்.

—மகப்பெறு படலம் 228-

## இயல் 42

**மயங்கினன் ஒருநாள் மாது**
**வாடினன் வேழன்அப் போது**

மாடத்து நிலவரங்கில் ஒருநாள், காதல்
மணிப்புறவாய் அவ்விருவர் மகிழும் போது
கூடத்துச் சென்றவள்வாய் குமட்டி நின்ருள்;
கொடுவேலான் பதைத்தோடித் தோள்கள் பற்றிப்
பீடத்தின் பஞ்சணையின் சேக்கை சேர்த்தான்;
பேதையதன் மிசைமயங்கிக் கொடிபோற் சாய்ந்தாள்;
வாடத்தன் காதலிக்கு வந்த தென்கொல்?
வாய்குமட்டி நின்றதென்கொல்? எனத்துடித்தான். 178

மெல்லியகால் சுரந்துசிறி ததைத்திருக்க,
மேனியெலாம் பசந்தது போல் தளர்ந்திருக்க,
வல்லியவள் முகஞ்சிறிது செம்மை மாறி
வாட்டமுடன் விளர்த்திருக்கக் கண்டான்; போரிற்
கொல்லியலின் திறங்கண்டும் இளகா நெஞ்சன்
கோதையிவள் நிலைகண்டே இளகி விட்டான்;
வல்லினமும் மெல்லினத்தைக் கூடுங் காலை
வலிகுறைந்து மென்மைபெறல் உண்மை யன்ருே! 179

குளிர்புனலை மலர்முகத்தில் தெளித்தான்; சற்றே
 குறைவுபட மயக்கொழிந்து தெளிந்தாள்; 'நின்றன்
தளர்நிலையைக் கண்டுள்ளம் நடுங்கி விட்டேன்
 தளிர்மேனிக் கிந்தநிலை வந்த தென்கொல்?
விளரியதுன் முகமென்கொல்?' எனப்ப தைத்து
 வினவியவற் 'கொன்றுமிலை' என்று சொல்லி,
முளரிமுகம் ஒருசிறிது கவிழ்த்து, நாணி,
 முறுவலித்து, வேல்விழியாள் அகன்றாள் ஆங்கே. 180

காய்ச்சியநல் லாவின்பால் கொண்டு வந்து
 கைக்கொடுத்தாள் உயிர்த்தோழி; பாலை வாங்கி
வாய்ச்சிறிது வார்த்தவுடன் கடிந்து கொண்டாள்;
 வாழ்கின்றார் காதலர்தாம் எனது நெஞ்சுள்,
போய்ச்சுடுமென் றறியாயோ? விஞ்சும் சூடு
 போகாமல் கொணர்ந்தனையே! போபோ என்று
வேய்ச்சிறுமென் தோளுடையாள் சினந்தாள் ஓர்நாள்;
 வேறறிய வொண்ணுமல் ஒன்றி நின்றாள். 181

முளரி—தாமரை,

## இயல் 43

வேல்விழியாள் கருக்கொண்டாள் என்றறிந்த
வேழன்எனக் காண்மகவு பிறக்கு மென்ருன்.

மற்ருெருநாள் மாடத்துத் தனித்தி ருந்து
மாவின்காய் ஒன்றெடுத்துப் பாவை தின்ருள்;
பற்றுடனே வேல்விழிபால் வந்த வேழன்
பார்த்ததனை நகைக்கஅவள் மறைத்துக் கொண்டாள்;
'முற்றியநற் கனியிருக்கக் காயை வேண்டும்
முழுமதியை என்னென்பேன்!' என்ரு ஞக,
நெற்றியிலே பாதிமதி யுடையாள் 'இந்த
நேரத்தில் காயொன்றே இனிக்கும்' என்ருள். 182

'கனியாத காயினிக்கும் நேர மொன்று
கண்டதிலை விந்தையிது' வென நகைத்தான்;
'இனிதாக மண்ணுடனே சாம்பர் தின்னும்
இந்நேரம் புளிப்பென்ன கைத்தா போகும்?
தனியான இன்புலகில் இருவேம் மட்டும்
தனித்திருந்தோம் மகிழ்ந்திருந்தோம்; நமது காதற்
கனியாக அன்புக்கோர் சின்ன மாகக்
காணுகின்றேன் என்வயிற்றில் மற்ருேர் ஆவி. 183

---

முழுமதி—பேரறிவு (நகைக்குறிப்பு). சாம்பர்—சாம்பல்.

தாயாகும் நிலையெனக்கு வாய்க்கும் பேறு
  தந்தவற்கே சொல்லாமல் மறைத்து வைத்தேன்
காயாமல் பொறுத்தருள்க' என்ருள் மங்கை;
  களிப்பதனுற் பெருமுழக்கம் செய்தான் வேழன்;
'சேயாக ஒருமகனை எனக்க ளித்தாய்!
  சிந்தைஎலாம் இனிக்கின்ற செய்தி சொன்னுய்!
ஓயாத பெருவலியன் மற்ருேர் வீரன்
  உலகத்தில் தோன்றுகின்ருன்! வீரங் காப்பான். 184

தந்தையென எனையாக்கும் இனிக்குஞ் செய்தி
  தருவதற்கோ புளிக்கின்ற காயை யுண்டாய்?
கந்துமிகும் மாவேழற் கிணையாய் நிற்கும்
  காளைநிகர் ஒருவீரன் எவனும் இல்லை;
விந்தைமிகும் அவனுக்கே மகனுய் வந்தோன்
  வீரத்தால் எதிராவான் என்று பாரில்
எந்தமுகம் நோக்கினுமே கேட்கச் செய்யும்
  இணையில்லான் நின்வயிற்றில் வளரு கின்ருன். 185

மனக்கினியாய்! மாவீரன் வாழ்க என்றே
  வாழ்த்துகிறேன்' எனமீண்டும் முழங்கி நின்ருன்;
'சினக்களிற்றின் மிகுவலியோய்! கற்ப னைத்தேர்
  செலுத்துவதில் வல்லாய்நீ! புரவி வாங்க
நினைக்குமுனம் கசையொன்று வாங்கி விட்டாய்!
  நெடிதுழன்று கருவுயிர்க்கா முன்னர் ஆண்தான்
எனக்கழறிப் போர்மறவன் ஆக்கி விட்டாய்!
  எதிர்காலக் கற்பனையில் கவிஞன் ஆனுய்! 186

---

காயாமல்—கோபிக்காமல். கந்து—வலிமை. கசை—சாட்டை.
எதிராவான்...ஒப்பாவான்-

பெண்பிறவா தெனும்நினைவோ? யாரே கண்டார்?
பிறந்துவிடின் என்செய்வை? ஆணோ பெண்ணோ
கண்மணிபோல் நாம்வளர்ப்போம்; கட்டிக் காப்போம்;
காலமினும் ஐந்தாறு திங்க ளுண்டு
நண்பகலில் கனவெதற்குப் பிறகு பார்ப்போம்!'
நங்கையிவை மொழிந்தவுடன் வேழன் சொல்வான்
'மண்புகழும் பெருவீரன் எனக்கு மைந்தன்
மாவீரன் தான்பிறப்பான் ஐய மில்லை. 187

பெரும்படையை எதிர்நின்று பொருது வென்ற
பேராற்றல் கண்டுலக வீரன் என்று
தரும்பெயரைப் பெற்றுள்ளேன்; இந்நாள் மட்டும்
தருக்கிஎதிர் வருவோரைக் காணு கில்லேன்;
அரும்புகழைப் பெறும்விருதைப் பிறருக் காக்க
அணுவளவும் ஒவ்வேனென் பரம்ப ரைக்கே
வரும்படிநான் செய்வதுதான் கடனும் ஆகும்;
வளர்கின்ற நின்கருவும் ஆணே' என்றான். 188

## இயல் 44

**மணிவயிற்றில் வளர்மகவு ஆணே என்று**
**மாவேழன் கற்பனைத்தேர் ஊர்ந்து சென்றான்.**

பிறந்தவுடன் அவனையிரு கையால் வாரிப்
பெட்புடன்நான் வழங்கிடுவேன் முத்த மாரி;
திறந்தஎன தகல்மார்போ டணைத்துச் சென்று
சீரியஎன் போர்க்களத்திற் கிடத்தி, மண்ணிற்
பிறந்தவனே! இம்மண்ணே உனக்கு வாழ்வு;
பெருவீரங் காட்டியிதைக் காத்தல் வேண்டும்;
இறந்தாலும் களத்தேதான் இறத்தல் வேண்டும்;
எனவாழ்த்தி வீரத்தை ஊட்டிக் காப்பேன். 189

மரத்தாற்செய் சிறுதேரும் குதிரை யானை
வகைகளுடன் விளையாடத் தருவேன்; மேலும்
உரத்தால்வெம் புலியோடும் சிங்கத் தோடும்
உடன்றுபொரச் சிறுவேலும் வாளும் ஈவேன்;
மறத்தோள்கள் திரண்டுருளும் பருவம் வந்தால்
மற்போரும் விற்போரும் வாள்சு ழற்றும்
மறப்போரும் திறத்தோடு பயிற்று விப்பேன்;
மாமல்லர் போர்க்களமே பள்ளி யாகும். 190

---

பெட்பு—விருப்பு. பள்ளி—பள்ளிக்கூடம்.

போர்க்களத்தில் தேரூர யானை ஏறப்
புரவிமிசைப் பாய்ந்தேறப் பயிற்று வித்துப்
பார்த்தலத்தில் இக்கலையில் இவனைப் போலப்
பார்த்ததிலை எனப்பகர வளரக் காண்பேன்;
ஆர்க்கின்ற அரியேறு பலவந் தாலும்
அஞ்சாது பொருதழிக்கும் ஆற்றல் கொள்வான்;
கார்க்களிற்றின் இடைப்புகுந்து துதிக்கை பற்றிக்
கரகரவென் றவன்சுழற்றும் வலியன் ஆவான். 191

பண்டிளமைப் பருவத்தே எனது நாட்டில்
பாய்மதமா வெறிகொள்ள மக்க ளஞ்சக்
கண்டுடன்கைத் தண்டொடுசென் றதனைத் தாக்கிக்
கலங்கிஅது நிலந்தனிலே வீழ்ந்து சாகக்
கண்டவன்நான்; மைந்துடைய எனக்கு மைந்தன்
களங்களிலே எனைவிஞ்சும் வலிய னாகித்
தண்டுபல துண்டுபடப் பொருதுங் காட்சி
தணவாமல் கண்டுகண்டு மகிழ வேண்டும்; 192

பெற்றெடுத்துப் புறங்காத்துப் பேணி, உள்ளப்
பெட்புடனே வளர்ப்பதுநின் கடனே யாகும்;
செற்றமொடு பொருகளத்து வீரர் தம்முட்
சீர்மைமிகு தலைவீரஞ் சான்றோன் என்ன
முற்றுபுகழ் பெற்றிடவே பயிற்று விக்கும்
முழுப்பொறுப்பும் எனக்கிருக்கும் கடனே யாகும்;
கற்றபடி உற்றமர்கள் பலமு ருக்கிக்
களிறெறிதல் காளைக்குக் கடனே யாகும். 193

---

கார்க்களிறு — மேகம்போன்றயானை. தண்டு — போர்க்கருவி, சேனை.
தணவாமல் — நீங்காமல். முருக்கி — அழித்து.

வாள்பற்றிச் சுழன்றுசுழன் றவன்போர் செய்ய
வட்டமிடும் பொழுதத்தில் ஆர்ப்ப ரிப்பேன்;
தோள்தட்டிக் கெக்கலிப்பேன்' என்றே ஆர்த்தான்;
துய்யமணி மண்டபமே முழங்கிற் றம்மா!
வேள்விட்ட பெருமுழக்கால் அஞ்சிப் 'பேறு
விளையுமுனம் இம்முழக்கா' என்றாள் தோகை;
'வாள்சுற்றும் போர்க்களத்தில் சீறும் போதும்
மகிழ்பொழுதும் ஆர்ப்பரித்தல் என்வ ழக்கம்; 194

அஞ்சல்விடு வஞ்சியொரு வீர னுக்கே
அன்னையென ஆகியநீ நடுங்கல் நன்றோ?
கொஞ்சுமொழி மைந்தனுக்கு வீரப் பாலே
கொடுத்துமற மூட்டுவதுன் கடனே' என்றான்;
பஞ்சினுமெல் லடியுடையாள் அவன்சொற் கேட்டுப்
'பாவைஎன்றன் மணிவயிற்றில் வளரும் செல்வம்
அஞ்சுகம்போல் பெண்ணாகப் பிறக்க வேண்டும்;
அகலாமல் என்வயமே இருக்க வேண்டும். 195

என்றவள்தன் மனத்தகத்தே எண்ணிக் கொண்டாள்;
இரும்பனைய மாவேழன் நாள்கள் எண்ணித்
துன்றமரில் பொருதுவரும் மகனைக் காணத்
துயிலாத பெருங்கனவு கண்டி ருந்தான்;
என்றுவரும் என்றுவரும் அந்த நன்னாள்
எனவேங்கி இருவருமே நோக்கி நிற்க,
ஒன்றொன்றாய் நாள்வளர உரிய காதல்
ஒளிவிளக்கம் அவள்வயிற்றில் வளர்ந்த தம்மா! 196

---

அஞ்சுகம்—கிளி.

## இயல் 45

நாவலத்தான் படையெடுத்த செய்தி கேட்டு
மூவகத்து மாவேழன் கொதித்தெ ழுந்தான்.

நாவலத்துப் பெருங்கனகன் பகைமை பூண்டு
நட்புரிமை விட்டொழித்துச் செருக்குக் கொண்டு
மூவகத்துட் பெரும்படையை ஏவி விட்டான்;
முனைத்தெழுந்து படையெடுத்து மதிலைக் கோவும்
காவலுக்குப் புறப்பட்டான் என்ற செய்தி
களிறடக்கும் மாவேழன் செவியிற் கேட்டான்;
போவதற்குக் கொதித்தெழுந்தான் முகஞ்சி வந்தான்
பூரித்த தோள்தட்டி ஆர்ப்ப ரித்தான். 197

ஆர்ப்பரித்த ஒலிகேட்டு நங்கை வந்தாள்;
'ஆயிழையே! நானில்லாப் பொழுத றிந்து
போர்ப்படையை நாவலத்தான் எனது நாட்டிற்
புகுத்தியுளான் எனுஞ்செய்தி இன்று கேட்டேன்;
தேர்ப்படையால் வாட்படையால் எதிர்த்தா னேனும்
செருக்கடக்கிப் படைமடக்கிப் பிறக்கிட் டோடத்
தார்ப்புரவி செலுத்திப்போர் வென்று மீள்வேன்;
தரியலரைச் சிதறடித்துக் கொன்று மீள்வேன்'. 198

பிறக்கிடல் — முதுகுகாட்டல். தார் — முன்னணிப்படை.

என்னுஞ்சொற் செவியுறலும் மலர்வி ழிக்குள்
  இருக்கின்ற புனலெல்லாம் சோர விட்டாள்;
வன்னெஞ்சன் தோள்தழுவி விரிந்த மார்பில்
  மலர்முகத்தைப் பதியவைத்து விம்மி நின்ருள்;
கன்னெஞ்சன் எனினுமவன் காதற் செல்வி
  கண்ணீரால் கரைந்திளகி இரக்கங் கொண்டு,
'மின்னுஞ்சேல் விழியுடையாய் என்ன கண்டு
  விம்முகின்ருய் வெம்புகின்ருய்? நிமிர்க'! என்ருன். 199

மென்புறத்தைத் தைவந்து, கையி ரண்டால்
  மெல்லியலைக் கைப்பற்றி, அவள்மு கத்தைத்
தன்விரலால் மேல்நிமிர்த்திப் பிரிவை நெஞ்சம்
  தாங்காமல் கண்பொழியும் நீர்து டைத்தான்;
அன்புதவழ் இருவிழியால் அவளை நோக்கி
  அலர்பொதியும் கார்குழலைக் கோதி விட்டான்;
தன்புதிய வாழ்வுக்குத் துணையாய் நின்ற
  தையலுக்குக் கனிமொழிகள் பலவு ரைத்தான். 200

---

சேல் — கயல்மீன். தைவந்து – தடவி கார்குழல் – கரியகூந்தல்.

## இயல் 46

**செருவினை வேட்டுச் சினந்தெழு வேழன்**
**பிரிவினை யஞ்சிப் பேதை புலம்பினள்.**

'பிரிந்துறைதல் ஆண்மக்கட் கெளிய செய்கை;
பேதையர்க்கோ கொழுநர்தமைத் தணந்து வாழ்தல்
வருந்தியழும் கொடுஞ்செயலாம்; கொழுகொம் பின்றி
வாடுகின்ற பூங்கொடியாய் வதிக என்றல்
பொருந்துகிற செயலாமோ? வயிறு வாய்த்த
பொழுதத்துப் பிரிந்துழலச் செய்தல் நன்றோ?
நறும்புனலை மீன்பிரிந்து துடித்தல் போல
நான்துணையை விட்டகன்று தவித்தல் நன்றோ? 201

களம்பலவும் சென்றுவந்தீர் வென்று வந்தீர்!
காலமெலாம் போரொன்றே குறியாக் கொண்டீர்!
குளம்படிந்து நீந்துதல்போல் போரில் நீந்திக்
குளித்தாலும் ஆசையினும் அடங்க வில்லை?
உளம்பொருந்துங் காதலிக்குத் தனிமை தந்தே
ஓடுதல்தான் வீரர்தமக் கழகோ? பாரோர்
விளம்புபுகழ் போதாவோ? எங்கும் வீரம்
விளைத்தவெலாம் போதாவோ?' எனத்து டித்தாள். 202

---

தணந்து – பிரிந்து . வயிறுவாய்த்தல் - கருக்கொள்ளுதல் ,

## இயல் 47

தேறிய சிலமொழி செப்பிய வேழன்
ஆறுதல் கூறி அகன்றனன் ஆங்கே.

'புகழுக்குப் போர்புரியச் செல்வே னல்லேன்;
புரிகின்ற காதலினும் கடமை ஒன்றே
மகனுக்குப் பெரிதாகும்; பிறந்த மண்ணின்
மானத்தைக் காப்பதென்றன் கடமை யாகும்;
இகழ்வுக்குத் திருநாட்டை விட்டு விட்டால்
எனையன்றோ எள்ளிநகை யாடி நிற்பர்!
தகைமிக்க தாயைமறந் தாலும் பிள்ளை
தாய்நாட்டை மறப்பதொரு கொடுமை யன்றோ? 203

பொருந்தலர்க்கென் பொன்னடு பணிந்து விட்டால்
பொருவேழன் இருந்தென்ன மாய்ந்தா லென்ன?
வருந்தற்க! தாயகத்தின் துயர்த ணித்து
வந்திடுவேன் நின்துயரம் தணிப்ப தற்கே;
பொருந்தொழிற்குட் புகுந்துவிடின் இன்பங் காணும்
புலனுணர்ச்சி வாழ்க்கைநலம் அணுகா என்பால்;
விருந்தளிக்கும் அகத்துறைகள் நல்கும் இன்பம்
வீரமுறு புறத்துறையால் என்முன் தோற்கும். 204

---

மகன் — வீரன்.

மறக்குலத்து மாமகளே! உலக வீரன்
மாவேழன் மனைவினனில் கலக்கம் கொள்ளேல்;
திறற்களத்து வென்றிபெற வாகை சூடச்
சிரித்தமுகங் கொண்டென்னை வழிய னுப்'பென்
றுரக்களிற்றின் மிகுவலியன் விறைத்து நின்றான்;
உள்ளத்துள் இசையாளாய் இருந்த போதும்
மறுப்புரைக்க இயலாமல் சிரித்து நின்றாள்;
மாவேழன் அவள்கன்னம் சிவக்கச் செய்தான். 205

'கண் திறந்து விடைதந்தாய், நின்றன் கொவ்வைக்
கனிதிறந்து மனந்திறந்து தந்தா யல்லை;
மண்பிறந்த காலத்தே வாய்த்த வீரம்
மாற்றலர்க்குக் காட்டுதற்கே செல்லு கின்றேன்;
பெண்பிறந்தால் இவ்வணியைக் கழுத்திற் கட்டு;
பெறுமகவு மகனானால் கையிற் கட்டு;
கண்பொழுதுங் களையாமல் அணிந்தி ருப்பின்
காளையவன் பெருவலியும் புகழுங் கொள்வான்'. 206

நயந்துரைகள் இவ்வண்ணம் பலவுங் கூறி,
நாட்படுமோர் பொன்னணியை அவட்க ளித்து,
வயந்தநகர் வீரர்சிலர் கவர்ந்து சென்று
வயத்தரசன் ஆணையினால் மீண்டும் தந்த
வயங்கெழுமு கடுநடைய பரிமா வேறி
வாள்வீரன் தன்திசையிற் பறந்து சென்றான்;
மயங்கியவள் கட்புலனுக் கெட்டுங் காறும்
மாவேழன் செலுந்திசையை நோக்கி நின்றாள். 207

---

கண்பொழுது — இமைப்பொழுது. வயம் - வெற்றி.

## இயல் 48

**பிரியாத் துணைவன் பிரிவால் வாடிப்**
**புரியாத் துயரொடு புலம்பினள் வேல்விழி.**

உயிர்தளிர்ப்பச் செய்திருந்த கொழுநன் இன்றவ்
வுயிர்தவிக்கச் செய்தகன்று சென்ரு ஞகப்
பயிர்தவித்துத் துவள்வதுபோல் தளர்ந்தாள் நங்கை;
பாவையவள் பொழுதொன்று கழிவ தற்குள்
மயல்பழுத்துப் படும்பாடு பெரும்பா டாகும்;
மனங்கவர்ந்த காதலனை நினைந்தி ரங்கும்
மயிலவட்குத் துணைசெய்ய யாரே உள்ளார்?
மாதென்றும் பாராமல் பிரிவு கொல்லும். 208

தொடும்பொழுது மட்டுந்தான் தொடுவோர் தம்மைச்
சுடுநெருப்பைக் கண்டதுண்டு; என்றன் வாழ்வில்
விடும்பொழுது சுடுகின்ற நெருப்பொன் றுண்டு;
விந்தைமிகும் அவ்வொன்று காம மாகும்;
அடும்பொழுதும் மெல்லியநன் மாத ரைத்தான்
அளவின்றித் துயருறுத்தும் போலும்! இந்தக்
கெடுங்குணமேன்? கண்ணில்லை என்று மாந்தர்
கிளப்பதனல் கருணையொன்று மில்லை போலும்! 209

---

அடும்பொழுது — வருத்தும்பொழுது.

கண்ணில்லாக் காமத்தின் வெம்மை தாக்கக்
கணவன்றன் நினைவதனுல் உருகும் நெஞ்சம்
புண்ணில்லாப் புண்பட்டுப் போன தாலே
புழுவானுள் மெழுகானுள் அந்தத் தீயில்;
எண்ணில்லாத் துயராலே நையும் பாவை
இரவென்றும் பகலென்றும் மாலை என்றும்
மண்ணில்லாப் பொழுதனைத்தும் மாறி மாறி
வந்துதுயர்ப் படுத்துவதால் புலம்பு கின்ருள். 210

'உறவுக்குத் துணையானன் இன்பந் தந்தான்
உழல்கின்ற பிரிவுக்கும் துணையாய் நின்ருன்;
வரவுக்கு வழிநோக்கி ஏங்கும் என்றன்
வாழ்வுக்கு மலர்ச்சிதர வரும்நாள் என்ரே?
நறவுக்குச் சுற்றிவரும் வண்டே போல
நாள்முழுதும் எனைச்சுற்றிச் சுற்றி நின்ருன்
செருவுக்குப் போய்விட்டான் தவிக்க விட்டுச்
செயலிழந்து துயிலிழந்து புலம்ப விட்டு. 211

மறைக்கின்றேன்; இந்நோயைப் பிறர்க்கு ணர்த்த
மாட்டாமல் தவிக்கின்றேன்; ஆயி னுந்தான்
இறைக்கின்ற நீர்போல ஊறி ஊறி
ஏறுவதைக் காண்கின்றேன்; நட்பா லன்பு
சுரக்கின்ற என்னிடமே இதுசெய் தாரேல்
சூழ்பகைமை கொண்டோரை என்செய் வாரோ?
பிறைக்கொன்றும் நுதலார்தம் பிரிவால் நேரும்
பெருந்துயரம் ஆடவர்க்கு வாரா தேயோ? 212

---

மண்ணில்லா — உலகில் நிலைத்து நில்லாத. செரு – போர்.

காதலரைக் கூடிமகிழ் பொழுதி லின்பம்
கடல்போலப் பெரிதாகும்; பிரிந்து விட்டால்
வேதனையோ கடலைவிடப் பெரிதாய்த் தோன்றும்;
வீரரவர் என்னோடு பயிலும் போதும்
போதனைய என்விழிகள் துயில வில்லை;
போர்புரியக் கருதியவர் பிரிந்து விட்டார்
ஆதலினால் இன்றுமவை துயில வில்லை;
அன்றவைதாம் கண்டதின்பம்; இன்றோ துன்பம்! 213

ஊரெல்லாம் உறைபவரைத் துயிலப் பண்ணி,
ஒருதனிமைக் கஞ்சியஇவ் விரவுப் போது
பாரெல்லாம் தேடியொரு துணைகா ணமல்
பாவையெனைத் துணையாகக் கொண்ட தேயோ?
போரெல்லாம் வென்றவரென் னுடனு றைந்த
பொழுதெல்லாம் வெகுவிரைவில் இரவு செல்லும்;
வேரெல்லாம் வீழ்த்ததுபோல் நிலையா யின்று
விடியாமல் நெடுநேரம் தங்கிக் கொல்லும். 214

உள்ளத்தால் உவந்தென்னை விழையா ராகி
உண்மையென நம்பும்வணம் சொல்லால் மட்டும்
கள்ளத்தால் காதலித்த கள்வ ரைத்தான்
காணத்தான் போகத்தான் துடிக்கும் கண்ணை
எள்ளத்தான் வெறுக்கத்தான் நினைவு தோன்றும்;
இருவிழியும் துயிலைத்தான் எய்தி நின்றால்
மெள்ளத்தான் வருங்கனவில் அவரைக் கண்டு
விளம்பிடுவேன் துயரைத்தான் துயிலே இல்லை. 215

---

வேர் வீழ்த்தல் — வேர்விடுதல். எள்ள - இகழ.

சிலபொழுது செயலிழந்து விழிகள் சோரும்;
சிறியஒரு கனவுவரும்; கனவில் என்றன்
குலமகனும் தொடவருவான்; ஆர்வத் தோடு
கொடுந்துயரைச் சொலஎழுவேன்மறைந்துபோவான்;
நலமழியும் என்தோளில் உறைந்தி ருப்பான்
நனவுடைய கனவதனில்; விழித்து நோக்கின்
புலனறிய முடியாமல் நெஞ்சுக் குள்ளே
போய்ப்புகுந்து கொள்கின்ருன்; யாது செய்கேன்? 216

தென்றலுனக் கென்னபிழை செய்து விட்டேன்?
தீயாக வீசுகின்ருய்; கொழுநர் ஓர்நாள்
முன்றிலிடத் தருகிருந்து காதல் கொண்டென்
முகத்தெழிலைப் புகழுங்கால் நிற்ப ழித்தார்
என்றதற்கோ முழுநிலவே நெருப்பே போல
எரிகின்ருய் சொரிகின்ருய் அனலை அள்ளி;
கொன்ருெழித்தாற் குற்றமிலை கொல்லா தென்னைக்
குற்றுயிராக் கிடத்திடவோ விரைந்து வந்தாய்? 217

மருண்மாலைப் பொழுதேநீ அளிக்கத் தக்காய்;
மங்கும்நிலை உனக்களித்த மாயன் யாரோ?
அருண்மாலை எனக்களித்த காதல் மன்னன்
அயலாகிப் பிரிந்ததனுல் மங்கி என்றன்
உருமாறி நிலைமாறிக் கலங்கு கின்றேன்;
உனக்கொருவன் இவ்வண்ணம் செய்தான் போலும்;
பொருண்மாறித் தடுமாறி இவ்வா ருகப்
பொழுதெல்லாம் புலம்புவதே தொழிலாக் கொண்டாள்.

---

நிற்பழித்தார் — நின்னைப்பழித்தார். அளிக்க - இரங்க. அருள்மாலை- அன்புமயக்கம்.

## இயல் 49

**ஆற்றுக என்றனள் ஆருயிர்த் தோழி;**
**ஏற்றிலள் அவள்மொழி இரங்கினள் வேல்விழி.**

பொழுதனைத்தும் புலம்புகிற மங்கை நெஞ்சைப்
புரிந்தவளாம் தோழிவந்து, 'கருக்கொள் போழ்தில்
அழுதிருத்தல், உணமறுத்தல், துயில்வெ றுத்தல்,
அழகாமோ? பிரிவுதரும் துயரந் தாங்கித்
தொழுதிருத்தல் மங்கையர்க்குக் கடனே யன்றோ?
தூமொழிநீ சிறுமகவோ? மனத்தில் வைகும்
பளுவகற்று! பாலகனை எண்ணி நின்றன்
பரிதவிப்பை விடுபேதாய்!' எனக்க டிந்தாள். 219

'கலங்குகிற எனைக்குறைகள் கூறு கின்றாய்!
காதலியைக் கைவிட்டுப் பிரிந்து சென்று
கலங்கும்வணம் செய்தானே அவனை நீதான்
கடுகளவும் குறைசொல்லிப் பழித்தா யல்லை!
இலங்கிழையே! பரிவுடனே ஒருசொற் சொல்லி
இனைவுறுமென் பாலருளித் தூது விட்டால்
வலங்கெழுமும் வேழற்குக் குறைந்தா போகும்?
வஞ்சகற்கு வாயென்ன நொந்தா போகும்? 220

பளு - சுமை. இனைவுறும் - வருந்துகின்ற.

தண்ணளியொன் றில்லானைத் தறுகணானைத்
தணிப்பரிய துயர்தந்து தணந்து சென்ற
கண்ணலனைச் சொல்வதற்கிங் கெவரு மில்லை;
கடிந்துரைக்க நாளுருத்தி தான்கிடைத்தேன்;
எண்ணரிய தீவினையை நோவ தல்லால்
எவரிடம்போய் முறையிடுவேன்' என்றரற்றிப்
பண்ணமுத மொழியுடையாள் நொந்து கொண்டாள்
பாருலகை வெறுத்தவள்போல் உயிர்த்து நின்றாள்.221




---

தணந்து—பிரிந்து. கண்ணலன்—கருணையிலான். உயிர்த்து—பெருமூச்செறிந்து.

## இயல் 50

**வேழனைப் பழித்த தோழியை மறுத்து**
**வேல்விழி புகழ்மொழி விளம்பினள் உருத்து.**

பொறுமையுடன் கேட்டிருந்த தோழி நெஞ்சுட்
  புன்னகைத்து வேல்விழிக்குத் தகுந்த வண்ணம்
மறுமொழிகள் புகல்வதுபோற் பொய்ம்மை யாக
  மாவேழன் இயல்பதனைப் பழித்து ரைத்தாள்;
'தறுகணன்பால் தண்ணளியும் இருக்கும் என்ருல்
  தாவுமுயற் குட்டிக்கும் கொம்பி ருக்கும்;
வெறியனவன் போருக்கே உரிய ஞவான்
  விளங்கிழையார் காதலுக்குத் தகுதி யாகான். 222

தினவெடுத்த திண்டோளன்; கண்ணும் மண்ணும்
  தெரியாமற் சமர்விளைக்கும் கூர்வாய் வாளன்;
சினமடுத்த மடங்கலெனக் கூச்சல் செய்வான்
  சிந்தையிலே மென்மைக்கோர் இடந்தான் உண்டோ?
கனவகத்தும் மெல்லியல்நின் துயரங் காணுன்;
  கடுந்துயரக் கடலுக்குள் தள்ளி விட்டான்;
புனமடுத்த களிறனையான் மனமே யில்லான்;
  பொய்யனவன்' எனஅவனை இயற்ப ழித்தாள். 223

‘என்பால்நீ கொண்டிருக்கும் அன்பால் என்றன்
இன்பத்துத் தலைமகனை இகழேல் தோழி!
வன்பாகவ் வினியானைக் கருணை யில்லான்
வஞ்சமுளான் என்றெல்லாம் பழிகள் கூறேல்;
மென்பாலால் பிரிவதனைத் தாங்கும் ஆற்றல்
மேவாத தென்குற்றம்; வலிய னேனும்
அன்பாலே தலையளிகள் புரிந்த வெல்லாம்
அறிவாயோ நீதோழி! அவனென் செய்வான்? 224

எனக்குமவன் தாய்நாடு தனக்கும் நெஞ்சுள்
இடமளித்தான் சமமாக; பெற்ற நாடு
தனக்குமொரு நிகர்பங்கே செய்து தந்தோன்
தாய்நாடு துயருறுங்கால் தரியா னாகி
முனைத்தெழுந்து களஞ்சேர்தல் முறைமை யன்றோ?
மூவகத்தான் பிரிவாற்ற இயலே னாகிப்
பினற்றுகின்ற நிலைக்கிரங்கி அவற்ப ழித்தாய்!
பேதையினி அப்பிரிவைப் பொறுப்பேன்’ என்றாள். 225

---

பினற்றுகின்ற—புலம்புகின்ற.

## இயல் 51

பத்துத் திங்கள் முற்றிய பின்னர்
முத்துப் பிள்ளை பெற்றனள் அவளே.

'பிரிந்தவனும் இவண்வருவான்; திங்கள் நான்கில்
பேரெழிலாய் மகன்வருவான்; பிரிவுத் துன்பம்
இரிந்தொழியக் கண்டின்பக் கடலுள் மூழ்கி
எந்நாளும் திளைத்திருப்பேன்' என்ற எண்ணம்
விரிந்துளத்திற் பொருந்துவதால் துயரந் தாங்கி
விரிதோகை மயிலனையாள் களித்திருந்தாள்;
சரிந்துமணி வயிறணிந்து மாதம் பத்துச்
சரியாக நிறைந்துவர வயவு கொண்டாள். 226

இடைவலியால் அவளுழன்ருள்; அவ்வ யாவால்
இணர்க்கொடிபோல் துவண்டுதுவண் டரற்றிநின்ருள்;
உடைநெகிழ வெய்துயிர்த்தாள்; வியர்த்தாள்; வாயால்
ஓவென்று குரலிட்டாள்; ஓங்கிக் கட்டில்
அடைவுறுமெல் லணையின்மே லடித்துக் கையால்
அதனைமிகப் பிசைந்தயர்ந்தாள்; மஞ்சம் பற்றிப்
பெடைமயிலாள் உடல்தளர்ந்து நெளிந்தாள்; பிள்ளை
பெறுவதன்முன் தாயர்படுந் துயரம் என்னே! 227

---

இரிந்து—நீங்கி வயவு—பேறுகாலத்துயர். பெடைமயில்—
பெண்மயில்.

காதலனைக் கூடுங்கால் இன்பங் கண்டாள்;
 கருவுற்ற நாள்முதலா உயிர்க்குங் காறும்
வேதனைகள் பலகொண்டாள்; இன்ப துன்பம்
 வியனுலகில் மாறிவரும்; இயற்கை ஈதே;
மாதவளும் துன்புற்ற பின்னே என்றும்
 மாறாத இன்பத்தைப் பெற்றெடுத்தாள்;
போதவிழும் மலர்முகத்தாள் தாய்மை கொண்டாள்
 பூங்கொடியில் அரும்பொன்று பூக்கக் கண்டாள். 228

அன்புக்கோர் அறிகுறியாய்க் காதல் வாழ்வின்
 அரியதொரு விளைபயனாய்ப் பிரிவு தந்த
துன்புக்கோர் அருமருந்தாய்ப் பிறந்த சேயைத்
 துணைவிழியால் அருள்பொழிய நோக்கிப் பெற்ற
இன்புக்கோர் அளவில்லை; தாய்மை நெஞ்சம்
 இருப்பவர்க்கே அதுபுலனாம்; மகிழ்வு ணர்ச்சி
என்புக்குள் பாய்வதுபோல் உணர்வு கொண்டாள்;
 இடரனைத்தும் போயொழியப் பெற்றாள் அன்னை. 229

பெற்றமகன் தளிருடலைப் பஞ்சின் மென்மை
 பெற்றிருக்கும் கைவிரலால் பூப்போல் தொட்டுக்
கற்றுணர்ந்த சான்றோரின் பாட லுக்குள்
 கரந்திருக்கும் உட்பொருளை உணர்ந்தார் போல
உற்றஒரு மகிழ்ச்சியினால் சொக்கிக் காதல்
 ஒள்வேலான் ஆண்மகனே பிறப்பான் என்று
சொற்றசொலை மனத்தகத்து நினைத்துக் கொண்டு
 சூரனுக்கு வாழ்த்துரைத்தாள் தொழுதாள் அன்னை. 230

---

கரந்து—மறைந்து. சொற்ற—சொன்ன.

## இயல் 52

**வேல்விழிக்குப் பெண்மகவு பிறந்த தென்று
வேழனுக்கு வயத்தரசன் தூது விட்டான்.**

குலக்கொடியாம் தன்மகட்கு மகன்பி றக்கக்
கூர்மகிழ்வு வயத்தரசன் கொண்டா னேனும்
கலக்குறுத்தும் பெரும்பகையால் இரண்டு நாடும்
கடும்போரில் ஈடுபட்டு நிற்ப தாலே
பலர்க்குரைத்துத் திருநாள்கொண் டாட வில்லை;
பாலகன்றன் வெள்ளணிநாட் சிறப்பை எல்லாம்
இலக்கணநூற் பாவென்னச் சுருக்கிக் கொண்டான்;
இன்பமெலாம் மறைபொருளா அடக்கிக் கொண்டான்.

ஒருமகனும் முதல்மகன்றான் பிறக்கும் போழ்தே
ஓராண்டுப் பருவத்தன் போலி ருந்தான்;
நறுமலரின் மலர்ச்சிஎன முகம்ம லர்ந்து
நாளெல்லாம் சிரித்திருக்கும் கார ணத்தால்
முறுவலனென் றொருபெயரால் அழைத்து வந்தார்;
முன்பொழுதின் பின்பொழுது மேனி வண்ணம்
பெருகிவர வளர்ந்துவர ஒளிமி குந்து
பேரழகுப் பறழ்புலிபோல் வளர்ந்து வந்தான். 232

---

வெள்ளணிநாள்-பிறந்தநாள், முறுவலன்—புன்னகையுடையவன், பறழ்புலி—புலிக்குட்டி.

மகன்பிறந்த மகிழ்ச்சியினைத் தந்தை யான
மாவேழற் குணர்த்துவலென் றுள்ளங் கொண்டு
மகள்வயினவ் வயத்தரசன் எடுத்து ரைத்தான்;
மங்கையவள் அம்மொழிக்கு மறுப்பு ரைத்தாள்;
'மகனெனவே செய்திசொலி அனுப்ப வேண்டா
மைந்தனென அறிந்துவிடின் முறுவல் பூத்த
முகனிவனைத் தன்னகர்க்கே எடுத்துச் சென்று
முனைமுகத்துக் கிடத்திடுவான் போரில் வல்லான். 233

வரைந்திருந்த கொழுநரெனை வரைந்து சென்ற
வாட்டமினுந் தணியவில்லை; வேர்கொண் டோங்கும்
அருந்துயரம் சிறிதேனும் அறுந்து போக
ஆற்றுமிவன் முகங்கண்டு வாழு கின்றேன்;
மருந்தனைய இவனையும்நான் பிரிந்து விட்டால்
மாய்தலன்றி வேறில்லை; என்றன் வாழ்வின்
குருந்தனைய மலர்முகனைச் சுமந்து பெற்ற
குலமகனை எவ்வணம்நான் பிரிந்து வாழ்வேன்? 234

தன்மகனைப் பெருவீரன் ஆக்கு தற்கே
தணியாத விருப்புடையான்; அதனால் என்றும்
வன்மைமிகு போர்முறையே பயிற்று விப்பான்;
வளர்ந்துவிடின் இவனுமவன் போல நாளும்
கொன்முறைய போர்க்களமே குடியாக் கொள்வான்;
கொடியிடையாள் ஒருத்தியிவன் மனையாய் வந்தால்
என்னிலைபோல் அவள்நிலையும் ஆகும்; பாவம்!
என்தந்தாய் உண்மைநிலை சொல்ல வேண்டா. 235

---

வரைந்து—மணந்து, பிரிந்து. குருந்து—குருத்து.

பெண்மகவு பிறந்ததெனப் பொய்ம்மை ஒன்று
பேசுவதால் குற்றமிலை; யார்க்குந் தீங்கு
முண்ணுனியின் அளவேனும் விளைவ தில்லை;
மொழியினொரு புரைதீர்ந்த நன்மை வாய்க்கும்;
கண்மணியை என்னுயிரைக் காப்ப தென்றால்
களம்வதியும் காதலர்க்குத் தயக்க மின்றிப்
பெண்மகவே பிறந்ததென்று செய்தி சொல்லிப்
பேதைமனம் தளிர்ப்பதற்கோர் உய்தி நல்கு! 236

என்றிறைஞ்சி நின்றாளை இரங்கி நோக்கி
'என்மகளே நின்மனம்போற் செய்வேன் அஞ்சேல்;
உன்றனுள மகிழ்வன்றி வேறொன் றில்லேன்;
உன்மகனை நின்வயமே இருக்கச் செய்வேன்;
கன்றினைவிட் டகல்கின்ற ஆவின் தன்மை
கனவகத்தும் வாராமல் காத்து நிற்பேன்'
என்றவட்கு மன்னவனும் உறுதி சொல்லி
ஏவலரை வேழன்பால் அனுப்பி வைத்தான். 237

---

முண்ணுனி—முள் நுனி, புரை-குற்றம் உய்தி—ஈடேற்றும் வழி,

## இயல் 53

**வளர்மதி போல வளரும் முறுவலன்**
**பலர்புகழ் கோளரிப் பட்டம் பெற்றான்.**

பகைகொண்ட இருநாடும் உருத்தெழுந்து
பகைப்புலத்து நின்றுவரும் காரணத்தால்
முகைவிண்ட மலர்மாலை சூடும் நாளில்
முன்னமவள் தந்தைக்குத் தந்த சொல்லால்
தகைகொண்ட மாதரசி தந்தை நாட்டில்
தன்கொண்கன் தருபிரிவின் துயரந் தாங்கி
நகைகொண்ட முறுவலன்றன் முகமே நோக்கி
நன்முல்லைப் பொருளுக்கோர் இலக்காய் நின்றாள். 238

வலியாலும் வடிவாலும் சிறிதும் அஞ்சா
வகையாலும் வனப்பாலும் வாய்முழக்கும்
ஒலியாலும் நடையாலும் சிறப்புற்றோங்கி
ஒப்பில்லா மாவேழற் கிணையே யாகப்
புலிபோலும் அவ்விளைஞன் மூன்றாம் நாளிற்
பூத்துவரும் வளர்பிறைபோல் நாளும் நாளும்
பொலிவோடு கலையோடு வளர்ந்து வந்தான்;
பூரித்துப் புதுமகிழ்வு கொண்டாளன்னை. 239

---

முகைவிண்ட அரும்பு விரிந்த கொண்கன் - கணவன். முல்லைப் பொருள் - முல்லைத் திணைக்குரிய உரிப்பொருள், (கணவனைப் பிரிந்து ஆற்றியிருத்தல்).

தன்னொத்த பருவத்துச் சிறுவ ரோடு
தான்கலந்து மகிழ்ந்துவிளை யாடும் போதும்
மின்னொத்துப் பொலிகின்ற வேலும் வாளும்
வீசிஎறிந் தார்ப்பரிப்பான்; வீரங் காட்டும்
சின்னத்தை விழைவதைத்தான் அன்றே அந்தச்
சிறுவன்செயல் ஒவ்வொன்றும் காட்டி நிற்கும்;
பொன்னொத்த உடலழகன் வலிமை யோடு
புரிகின்ற அனைத்திலுமே முதன்மை கொள்வான். 240

பாய்ந்தோடும் விரைவுக்குப் புரவி தன்னைப்
பாருலகம் பொருளாக எடுத்துக் காட்டும்;
சாய்ந்தாடும் உளைப்பரிதான் இவனைச் சேர்ந்து
தன்விரைவை வெளிப்படுத்த ஓடுங் காலை
ஓய்ந்தாடுங் கால்தளர்ந்தே உருண்டு வீழும்;
உறுகாற்றிற் கடிதேகி இவனே வெல்வான்;
தோய்ந்தாடும் பருவத்துச் செயல்க ளெல்லாம்
சொல்லரிய வியப்பினையே தந்து நிற்கும். 241

விளையாட்டுப் பருவமொரு சிறிதே ஏக,
விறன்மிகுத்த இளங்காளைப் பருவம் வந்து
முளைகாட்டி முகிழ்த்திருக்கத் தோளும் மார்பும்
முகமலரும் விழியிணையும் பொலிந்து நல்ல
களைகூட்டி நிற்க,உடல் தோற்றந் தானும்
கட்டிளமை கொண்டிலங்கக் கோட்டு வெற்பின்
முழைகாட்டும் அரியேற்றின் குட்டி போல
மொய்ம்புமிகு பெருமிதமும் கொண்டு நின்றான். 242

---
உளை—பிடர்மயிர். முழை—குகை.

மரஞ்செறிந்த காடடர்ந்து விளங்கி ஓங்கும்
மலைச்சரிவில் இளைஞரொடு வேட்டம் போகி
உரஞ்செறிந்த விலங்கினத்தை எதிர்த்துக் கொல்ல
உவகையொடு திரிதருவான்; இவனைத் தாக்க
முறஞ்செவிய களிறுகளும் முழக்கங் காட்டும்
மொய்யுளைய அரியினமும் வருதல் காணின்
குறிஞ்சியகம் எதிரொலிக்க இடிபோல் ஆர்த்துக்
குதித்தவற்றின் மேற்பாய்ந்து கொன்று மீள்வான் 243

வேட்டைஎனிற் பெருவிருப்பம்; கான்வி லங்கின்
வேந்தனெனில் தனிவிருப்பம்; முழக்கம் ஒன்று
கேட்டுவிடின் உருமுழக்கம் இவனும் செய்வான்;
கிளர்ந்தெழுவான்; ஆதலினால் இளைஞ ரெல்லாம்
வேட்டெழுந்து படையென்னத் திரண்டு தம்முள்
வீரனிவன் தலைவனெனத் தேர்ந்து கொண்டார்;
காட்டுகின்ற பெருவலியால் கார்மு ழக்கால்
கண்டவர்தாம் கோளரிஎன் றழைக்க லுற்றார். 244

---

மொய்உளைய–மொய்த்த பிடர்மயிரினையுடைய.
குறிஞ்சியகம் – மலையகம். உரும் முழக்கம் - இடிமுழக்கம்.

## இயல் 54

**தன்னைப் பெற்ற தந்தை யாரென**
**அன்னையின் பாலவன் அறிய வினவினன்.**

மதிலுயர்ந்த கோவிலுக்குள் பிறந்தா னேனும்
வனப்புமிகு காடுகளில் உறைந்த நேரம்
அதிகமெனத் திரிந்ததனுல் தந்தை பற்றி
அறியாமல் வளர்ந்திருந்தான்; எனினும் ஓர்நாள்
மதியணிந்த நுதலாளை அணுகி, 'அன்னுய்!
மகனென்னைப் பெற்றெடுத்த தந்தை யாவர்?
வதியுமிடன் யாண்டுளதோ? இன்னும் இங்கே
வாராத தென்கருதி? விளங்கச் சொல்வாய். 245

உயிருடன்தான் உள்ளனரா? உள்ளா ரென்ருல்
உனையின்றும் உள்ளாராய் இருப்ப தென்கொல்?
செயிருடன்தான் கைவிட்டுப் பிரிந்தார் என்ருல்
சினங்கொள்ள நீசெய்த செயிர்தான் என்ன?
உயர்குடியாம் மன்குடியில் பிறத்தல் செய்யா
ஒருத்திஎனை மண்குடிலில் பெற்ருள் கொல்லோ?
துயருடையேன் எனைவளர்ப்புப் பிள்ளை யாகத்
தொட்டிலிலே பெற்றனையோ? உற்ற தென்கொல்? 246

---

உள்ளாராய் – நினையாராகி. செயிர் - கோபம், குற்றம்,.
மன்குடி – அரசர்குடி. மண்குடில் - மண் குடிசை,

எனைமகவாப் பெற்றுனைக் காண்ப தென்றோ!
  என்றேனும் காணும்நிலை வாரா தேயோ?
அனைவருமென் னிலைகண்டே எள்ளும் வண்ணம்
  ஆயிற்றே! ஆதரவாம் தந்தை யில்லாத்
தனயனெனச் சொலும்பழியைப் பெற்றேன் அந்தோ
  தலைகவிழச் செய்தனரே! வீர மெல்லாம்
முனைமழுங்கிப் பாழாக, வினையொன் றிங்கே
  மூண்டெழுந்து துயர்ப்படுத்த வந்த தேயோ?' 247

எனப்பலவும் கசிந்துருகிச் சொல்லி னையும்
  இளையவற்குத் தேற்றரவு சொல்லி, 'ஐய!
தினைத்துணையும் நின்முகத்தில் துயரம் ஒன்றும்
  தெரிந்ததிலை; இன்றதனை மதிமு கத்தில்
பனைத்துணையாக் காண்கின்றேன்; என்றும் மாறாப்
  பால்வண்ணச் சிரிப்பெங்கே? இந்தக் கோலம்
உனக்கெதற்கு? விட்டுவிடு! பெற்ற பிள்ளை
  உறுதுயரம் பொறுக்குமுரம் இல்லேன்' என்றாள். 248

'தந்தைபெயர் தெரியாத மைந்த னுக்குத்
  தரையிலொரு பீடுநடை மகிழ்ச்சி ஏது?
சிந்தைதனில் குழப்பங்கள் சூழும் போது
  சிரிப்பேது? வீரந்தான் விளைவ தேது?
வெந்துயரம் துடைக்கஉனக் கெண்ணம் உண்டேல்
  விளைந்தவெலாம் மறைப்பின்றிச் சொல்க! இன்றேல்
நொந்தழிய விட்டுவிடு! சாவ தற்கு
  நூறுவழி உண்டறிவேன்;' என்றான் மைந்தன். 249

---

தேற்றரவு – ஆறுதல்

## இயல் 55

**மாவேழன் பெற்றமகன் என்றாள் அன்னை**
**மைந்தனவன் சொலற்கரிய மகிழ்வு கொண்டான்.**

'கொன்றனைய இன்னாச்சொல் மற்றும் ஓர்கால்
கூறாதே நின்வாயால்' என்று, தன்முன்
நின்றவனை முகம்நோக்கி நெடிது யிர்த்து
நீர்மல்கப் புகல்கின்றாள், 'என்றன் சேயே
உன்றனையும் பிரிவதற்கோர் உள்ள மில்லேன்
உண்மையினை மறைத்திருந்தேன் மற்றொன் றில்லை;
நின்றொளிரும் கதிரவனை இரவு வந்து
நெடுநேரம் மறைத்தாலும் மறைந்தா போகும்? 250

தனக்குநிகர் எவருமிலாத் தறுகண் வீரன்.
தந்தஒரு பிள்ளையடா நீ;இப் பாரில்
உனக்கெதற்குத் தலையிறக்கம்? பத்துத் திங்கள்
உளைந்துளைந்து சுமந்துயிர்த்துப் பெற்றேன் உன்னை;
மனக்கவலை ஏன்கொண்டாய்? உலகம் போற்றும்
மதிப்பன்றிப் பழிப்பொன்றும் வாரா துன்பால்;
சினக்களிற்றின் மகவுன்னைப் புகழ்வ தல்லாற்
சிறிதேனும் எள்ளுதலுக் கிடமே இல்லை. 251

பழுதொன்றும் இல்லாமற் புகழே கொண்டு
பாராளும் மன்னர்குலம் நீபி றந்த
தொழுதகுநற் குலமாகும்; உன்றன் தந்தை
தோகைஎனை வெறுத்தெங்குஞ் செல்லவில்லை;
கொழுநரவர் மனம்வெறுக்கும் வண்ணம் நானும்
குற்றமொன் றும் மறந்தேனுஞ் செய்ய வில்லை;
அழகுதரும் மங்கலநாண் என்க ழுத்தில்
அணிசெய்ய வாழ்கின்ருர் பகைவர் நாட்டில். 252

தாயகத்தைக் காப்பதற்கே தணந்து சென்ருர்;
தரியலர்தம் போர்முனையில் படைந டாத்தப்
போயவர்க்குக் களமொன்றே நினைவில் நிற்கும்
போர்முடிந்து பகைதணியும் நாளில் தோன்றும்
தூயவர்க்கு நம்நினைவு; நீவ யிற்றில்
தோன்றிவளர் பொழுதத்தே எனைப்பி ரிந்த
சேயவர்க்குப் பெண்பிறந்த தென்று பொய்ம்மை
செப்பியதே நான்செய்த பிழையாம்' என்ருள். 253

'ஏனம்மா பொய்ம்மொழிந்தீர்? மொழிந்த பின்னர்
என்னபயன் கண்டீர்நீர்? தந்தை யின்றி
நானம்மா துயர்கின்றேன்; எனக்குச் செய்த
நன்மைஎனக் கொண்டீரோ? விந்தை' என்ருன்;
மீனம்போல் விழியுடையாள் அவனை நோக்கி
'மெய்ம்மொழியின் உனையங்கே அழைத்துச் செல்வார்;
கானம்போல் பாலையைப்போல் என்றன் வாழ்வு
காய்ந்துவிடும் என்றஞ்சிச் சொன்னேன்' என்ருள். 254

---

சேயவர்—தொலைவில்உள்ளவர். துயர்கின்றேன்—
துயரப்படுகின்றேன்.

'இத்தனை நாள் இவற்றையெலாம் என்பாற் சொல்லா
 தேன்மறைத்தீர்? இதற்கென்ன சொல்வீர்' என்றான்;
'வித்தகன்மா வேழற்கு மகன் நீ என்று
 வேந்தனவன் பெருங்கனகன் அறியு மாயின்
எத்துயரும் விளைத்திடுவன் நினக்கென் றெண்ணி
 ஈதறியா வண்ணமுனை வளர்த்தோம் ஐய!
அத்தனை நீ அறிகுவையேல் ஈங்கு வேந்தன்
 அறியும்வகை பரவிவிடும் அதனால்' என்றாள். 255

'மாவேழன் மகனா நான் அம்மா! அம்மா!
 மாவீரன் பெற்றெடுத்த மைந்தன் என்ற
நாவாழ்க வாழ்க'எனக் களித்து நின்று,
 'நானிலத்துப் பெருமறவன் பெற்றான் என்று
கோவேந்தன் அறிந்தாலென்? குற்ற மில்லை;
 கூறவொணாப் பெருமையலால் இழிவொன் றில்லை;
சாவாத புகழுடையான் பெற்ற பிள்ளை
 தகவுடையன் தனிமறவன் என்ன வாழ்வேன். 256

பாருலகம் ஏத்துபுகழ் படைத்த வீரன்
 பாலன்எனை இத்தனை நாள் காண வாராக்
காரணமென்? வியப்பன்றோ? ஒருகால் என்றன்
 கவலைக்கு மருந்தாகப் பொய்ம்மை யாக
ஆறுதலை மொழிந்தனையோ? உண்மை சொல்ல
 அறியாயோ? மனமிலையோ? ஈத னைத்தும்
யாருடைய கற்பனையோ? நம்பும் வண்ணம்
 யாதொன்றும் புகலாயோ? அன்னாய்' என்றான். 257

'ஈன்றமகன் எனைநம்ப மறுத்து நின்ருல்
எவ்வணந்தான் தெளிவிப்பேன்? உலகில் என்னைப்
போன்றமகள் ஒருத்தியினைக் கண்ட துண்டோ?
புதல்வனுக்கும் கொழுநனுக்கும் இடையில் நின்றே
ஆன்றதுய ருடையேனுய் ஊசல் போல
ஆடுகிறேன்; வாடுகிறேன்;' என்றுள் நைந்து
தேன்றுளியின் அனையஒரு நினைவு தோன்றத்
தெளிமனத்தள் இளையோன்பால் நவில லுற்ருள். 258

'கலங்குநிலை கொண்டுழலும் மைந்த! ஒன்று
கழறுகிறேன் இதனைக்கேள்! கருவில் நீதான்
துலங்குகிற பொழுதத்துன் தந்தை எற்குத்
துயர்தந்து பிரியுங்கால், மணிகள் மேவி
இலங்குமொரு பொன்னணியைக் கையிற் றந்தே
எழில்தவழும் வீரமகன் பிறப்பான், அந்த
வலங்கெழுமும் மகவுக்குக் கையிற் கட்டு!
வலிவுடனே பெரும்புகழும் வாய்க்கும் என்று, 259

பலபுகன்ருர்; எனைத்தேற்றிப் போரை நோக்கிப்
பறந்தகன்ருர்; அவர்தந்த அணியின் ஓர்பால்
குலமகனும் தந்தைபெயர் பொறித்தி ருக்கும்;
கொடுத்தஅணி இதுகொள்க! இதனை என்றும்
விலகலிலாப் பூணுக அணிந்து பேணி
வென்றிகொண்டு திகழ்க'என மொழிந்து நின்ருள்;
உலகமெலாம் பெற்ருன்போல் அதனை வாங்கி
உவகைமிகக் கையகத்தே அணிந்துகொண்டான். 260

## இயல் 56

**படைதிரட்டி மூவகத்தை வெற்றி கொள்வேன்**
**பரியொன்று வேண்டுமென மைந்தன் கேட்டான்.**

'என்மதலாய்! உனையொன்று வேண்டு கின்றேன்;
இவ்வுண்மை தனையெவரும் உணரா வண்ணம்
நின்மனமாம் சிறையகத்து வைக்க வேண்டும்;
நின்னையும்நான் பிரிந்திருக்கச் சிறிதும் ஒவ்வேன்;
வன்மனங்கொள் கனகனுக்கும் நின்தந் தைக்கும்
வளர்ந்துவரும் குலப்பகைமை நெடுநா ளுண்டு;
நன்மையிலான் பழிவாங்க நினைத்தல் கூடும்;
நாடோறும் விழிப்புணர்வோ டிருத்தல்வேண்டும்.' 261

இவ்வண்ணம் முன்னிகழ்ச்சி அனைத்துஞ் சொன்ன
ஏந்திழையாள் திருவடிக்கு வணக்கஞ் செய்து,
'மெய்வண்ணம் என்வரலா றுரைத்த அன்னாய்!
மேவலர்தாம் நமக்கினிமேல் எவரு மில்லை;
கைவண்ணங் காட்டிடுவேன்; தந்தை போலக்
களங்களெலாம் போய்ப்புகுந்து வெற்றி கொள்வேன்;
செய்வண்ணம் அறிந்துலகம் புகழும் போது
தெரியாமல் என்னிலைதான் மறைந்தா போகும்? 262

எத்துணைதான் மறைத்தாலும் என்றன் போக்கால்
என்றேனும் வெளிப்படுதல் திண்ணம்; காட்டை
நத்துபுலிக் குட்டியின்பால் பூனைப் பண்பை
நயப்பதனால் பயனில்லை; எனினும் என்றன்
அத்தனைநான் காணும்வரை அடக்கிக் கொள்வேன்;
அன்னாய்நீ அஞ்சற்க! திட்ட மிட்டே
இத்தரையில் படைதிரட்டி வாகை சூடி
இணையாரும் இல்லையென வாழ்வேன் அம்மா! 263

மறஞ்செறிந்த நாவலத்து மாந்தர் தம்முள்
மனவலிமை மிக்காரைத் தேர்ந்தெடுத்துப்
புறஞ்செறிந்த துறையெல்லாம் பயிற்று வித்துப்
பூவேந்தர் அஞ்சவரு படைதிரட்டி,
உரஞ்செறிந்த மூவகத்தைத் தாக்கி, வீரர்
ஓடோடப் புறங்கண்டு, நாட்டை ஆளும்
திறமிழந்த மன்னவனும் மதலைக் கோவைச்
சிறைசெய்து, சொல்லரிய வென்றி கொள்வேன். 264

ஆர்த்தெழுந்த போர்த்திறத்தைக் காட்டிப் பெற்ற
அரியணையை எனைப்பெற்ற தந்தைக் கீந்து,
சேர்த்துன்னை அவ்வணையில் அமரச் செய்து,
சேயென்றன் இருவிழியும் களிக்கக் காண்பேன்;
பேர்த்தெழுந்து மூவகத்தின் துணையுங் கொண்டு
பேரரசன் பெருங்கனகன் படையைத் தாக்கிக்
கார்த்தொகையைக் கலைந்தோடச் செய்ய வல்ல
காற்றேபோல் சுழன்றடித்து வெற்றி காண்பேன். 265

---

புறஞ்செறிந்ததுறை—போர்த்துறை. கார்த்தொகை—மேகக்கூட்டம்

தந்தைஒரு நாடாளத் தன்னே ரில்லாத்
  தனயனொரு நாடாளப் பாரில் எங்கும்
எந்தஒரு பகையுமிலை என்று போற்ற
  இருகதிர்போல் ஒளிசெய்ய ஆட்சி செய்வோம்;
முந்தைவரு மன்னரெலாம் விண்மீன் போல
  மொய்த்திருந்து பணிசெய்ய உலகம் எங்கள்
சிந்தைதரும் குறிப்புணர்ந்தே இயங்கக் காண்பேன்
  சீரெல்லாங் குவிந்தொன்ருய் வயங்கக் காண்பேன். 266

இன்றேநான் என்பணியைத் தொடங்கு கின்றேன்
  ஏற்றதொரு வயப்புரவி எனக்கு வேண்டும்;
குன்றேபோல் களிறனைய வலியும் பெற்றுக்
  கோளரியை விஞ்சுகின்ற வீரங் கொண்டு
நின்றேறிப் பாய்புலிபோற் பாய்ந்து செல்லும்
  நீர்மையெலாம் அப்பரிபெற் றிலங்க வேண்டும்;
சென்றேநான் வென்றிகொளச் சிந்தை கொண்ட
  'செயலெல்லாம் நிறைவுபெற வேண்டும்' என்ருன். 267

## இயல் 57

**பரியினைப் பெற்றஅச் சிறியவன் விரைந்து**
**பொருபடை திரட்டிப் போர்செய முனைந்தனன்.**

ஆடிக்குள் காண்பார்தம் தோற்ற மெல்லாம்
அவ்வாறே தோன்றுதல்போல் தந்தை சாயல்,
நீடிக்கும் பெருவீரம், செய்கை, பண்பு
நினைவெல்லாம் அப்படியே ஒக்கின் றுறனல்;
தேடிக்கண் டின்புறவே தந்தை யின்பால்
செலநினைந்தான்; இவனை இனித் தடுப்ப தென்றால்
மூடிக்குள் பெரும்புயலை அடக்கல் போலாம்;
முயல்கஅவன் வெல்கவென மகிழ்ந்து நின்றாள். 268

பணியாளன் ஒருவனைக்கூய்த் தேர்ந்தெடுத்த
பரிபலவுங் கொணர்கவென ஆணை யிட்டாள்;
அணியாக வந்தவற்றுள் ஒன்றும் இந்த
அடலேற்றுக் கொப்பவில்லை; மற்றோர் வீரன்
மணியான பாய்மாவொன் றங்குத் தந்து
'மாவேழன் புரவிக்குப் பிறந்த தாகும்;
இணையாக இதற்கொன்றும் இல்லை' என்றான்;
ஏறனையான் மகிழ்ந்ததன்மேல் ஏறிக் கொண்டான். 269

---

ஆடி—கண்ணாடி. கூய்—அழைத்து. அடலேறு—வெற்றிக்காளை போன்ற தோளரி.

'என்னையினிப் பொருதுவெல யாரும் இல்லை;
எவருக்கும் அஞ்சுதலும் இனிமேல் இல்லை;
முன்னிவரும் புரவியிதன் மிசையி ருந்தே
மூவகத்தை வென்றிடுவேன்; மதலைக் கோவும்
தன்னுரிமை அரசிழப்பன்; எனது நெஞ்சின்
தணப்பரிய கனவுகளும் நனவாய்த் தோன்றும்
அன்னையினை வணங்குகின்றேன்' எனமொ ழிந்தே
அடல்மிகுந்த படையொன்று திரட்டிச் சென்றான். 270

வயத்தரசன் அவையகத்தே உளஓர் வீரன்
வளங்கெழுமும் மூவகத்தை வெல்வான் வேண்டி
நயத்தெழுதல் ஊர்முழுதும் பரவக் கேட்டு
நல்லஇளங் காளையர்கள் படையிற் சேர்ந்தார்;
வியத்தகுநற் செயலுக்கு மகிழ்ந்த மன்னன்
விறன்மிகுதன் கவசத்தைத் தலைவற் கீந்து
பயக்கட்டும் பெருவெற்றி என்று வாழ்த்திப்
பலமறவர் படைகளுடன் அனுப்பி வைத்தான். 271

மகப்பெறுபடலம் முற்றும்.

---

தணப்பரிய—நீங்காத. நயத்தெழுதல்—விரும்பியெழுதல். தலைவன்—படைத்தலைவனாகிய தோளரி,

நாவகத்துப் பெருமுழக்குஞ் செய்து வீரர்
நடைவகுத்துப் படைத்துணைவர் சூழச் சென்றார்
காவகத்துக் கொடுவிலங்கின் கூட்ட மெல்லாம்
கடுகிஒரு வழிநடந்த தென்னச் சென்றார்·

— படையெழுச்சிப்படலம். 327

## இயல் 58

**போரெடுத்து வந்தவனைப் புரிந்து கொண்ட**
**புன்மை மனப் பெருங்கனகன் துணைபோல்நின்றான்.**

அளப்பரிய வலியுடையான் தன்னோ டுற்ற
அடன்மிகுந்த வீரரொடும் புனலா றென்னும்
வளப்புகழ்சேர் நதிக்கரையின் ஒருபால் தங்க
வந்துள்ளான் எனுஞ்செய்தி நாவ லத்தான்
களத்தவையிற் போய்ப்புகுத, வேந்தன் சூழ்ந்து
கருதலரைப் புறங்காண உருத்தெ ழுந்த
குழக்களிற்றின் அனையானைக் கூற்ற மன்ன
கோளரியைப் புகழ்ந்தவற்குத்துணைகள் செய்தான்.272

முறுவலனும் கோளரிதான் மொய்ம்பு மிக்க
மூவகத்து வேழனுக்கு மகனே என்று
மறைதெரியும் ஒற்றதனால் உணர்ந்து கொண்ட
மாமன்னன் தனித்திருந்து சூழ்ச்சி செய்தான்;
'உறுபகையால் எழுமிவனுக் குதவி செய்யின்
ஒள்வேலான் வேழனையே கொல்லல் கூடும்;
பிறகிவனை வஞ்சனையால் நஞ்சு தந்து
பெருந்துயிலில் கிடத்துவம்நாம்' என்றேகொண்டான்;

---

குழக்களிறு—இளையயானை. மொய்ம்பு—வலிமை,மறை — இரகசியம்,
ஒற்று—உளவறிவார்.

கொண்டதொரு வஞ்சனையால் ஐயி ரண்டைக்
கூடிவரும் ஆயிரமாம் வீரர் சூழ்ந்து
மண்டுபெரும் படையொன்றைத் திரட்டித் தந்து
மாவலியன் தடவலியன் என்பார்க் கூவித்
'தண்டுகொண்டு கோளரிக்குத் துணையாய் நின்று
சமர்புரி'கென் றிருவர்க்கும் ஆணை யிட்டான்;
தொண்டுபுரி படைத்தலைவ ரவரை நோக்கித்
துணைபுரியச் செல்லுமவர்க் கொன்று சொல்வான். 274

படைத்தலைமை கொண்டுள்ளீர்! வயந்தர் தந்த
படைக்குரிய கோளரிதான் யாவன் என்று
படைத்துணர வல்லீரோ? நமது நாட்டின்
பகைவன்மா வேழனுக்கும் வயந்தன் பெற்ற
இடைக்கொடியள் வேல்விழிக்கும் பிறந்த செல்வன்;
இதுபிறர்க்கு மறைபொருளா வுள்ள தென்று
கிடைத்துளது செய்தியொன்று; போரில் வேழக்
கிழவனுக்கு நிகராவான் என்றும் சொல்வர். 275

நமதுபெரும் படைத்துணையும் இன்று பெற்முன்
நானிலத்தில் எவர்பொரினும் எளிதில் வெல்வான்;
எமனனைய மாவேழன் வாழ்வால் தோல்வி
ஏலாத மூவகத்தைத் தோற்கச் செய்வான்;
சமர்புரியும் மதலைக்கு வேழன் போலத்
தனிமதலை இவன்நமக்கு வாய்த்தான்; நல்ல
சமயமிது; இவ்வமரில் நமக்கே வெற்றி
சார்ந்துவிடும் ஐயமிலை திண்ணம் திண்ணம். 276

---

.தண்டு—சேனை. பொரினும்— போர்செய்தாலும். மதலைக்கு— மதலைக் கோமானுக்கு.

தந்தையையும் மகனறியான்; தந்தை யும்தன்
தனயனைக்கண் டறிந்ததிலை; அதனுற் போரில்
உந்திஎழும் உணர்ச்சியினுல் நேரில் மோத
உடன்றெழுவர்; கிழமகனை வலித்துத் தாக்கி
நொந்துவிழ அவன்மகனே செய்து நிற்பான்;
நொடிப்பொழுதில் ஆர்ப்பரித்துக்கொன் றுந் தீர்ப்பான்;
எந்தஒரு துயருமிலை மூவ கத்தை
எளிதாகப் பணிவிப்போம் ஆட்சி கொள்வோம். 277

பின்னர்மகன் உண்மையுணர்ந் தெதிர்க்கு மாயின்
பெரிதில்லை நமக்கவனை அழித்தொ ழித்தல்;
முன்னமிவர் ஒருவரைமற் ருெருவர் தம்முள்
முறைமையினை அறிந்துகொளா திருப்பி னன்ருே
சொன்னவெலாம் நிறைவேறும்! புரிந்து கொள்ளின்
தோன்றமரில் சமர்செய்ய வாரார்; நீவிர்
சின்னஒரு துளியேனும் அறியா வண்ணம்
சின்னவனைச் சூழ்ந்திருத்தல் வேண்டும்' என்ருன் 278

மாமன்னன் எண்ணத்துக் குடந்தை யாக
மாவலியும் தடவலியும் இசைந்தா ராகி,
ஆமென்ன உறுதிமொழி தந்து நின்ருர்;
அரசனெரு முடங்கல்வரைந் தவர்பால் தந்து,
போமென்ன, அப்பணியைத் தலைமேற் கொண்டு
போர்த்தலைவர் முறுவலன்பால் புக்கு நின்று
கோமன்னன் தந்ததிரு வோலை தந்தார்;
கோளரியும் விரித்ததனை நோக்க லுற்ருன். 279

## இயல் 59

**கனகனின் ஓலையைக் கண்ட கோளரி.**
**மனமகிழ் வுறவே மலர்த்திப் படித்தனன்.**

'நாட்டின்பால் பற்றுடைய இளைஞர் ஏறே!
நாவலத்தின் மானத்தைக் காப்ப தற்கு
வேட்டெழுந்த உன்திறத்தை நாடு போற்றும்;
வெற்றியுடன் மீள்கஎன வாழ்த்து கின்றேன்;
கோட்டைஎழும் வெண்ணகரம், மூவகத்தின்
கோட்டருகில் வடதிசையில் விளங்கல் காண்பாய்!
கூட்டமொடு சூழ்ந்ததனை முதலில் தாக்கிக்
கோட்டையினை நின்வயமே ஆக்கிக் கொள்க! 280

பின்னருனக் கெளிதாகும்; மூவ கத்தின்
பிடியுனது கையகத்தே வந்து சேரும்;
நன்னரது வந்துவிடின் உலகில் எங்கும்
நலம்விளையும்; நலிவுதரும் போரே யில்லை;
பன்னரிய இதுநினைந்தே மறவர் சூழப்
படைத்தலைவர் இருவரையும் அனுப்பி யுள்ளேன்;
நின்னுடைய சொற்கேட்டுத் துணையாய் நிற்பர்;
நிகரில்லாப்போர்த்திறத்தர்'எனுஞ்சொற்கண்டான் 281

---

கோட்டருகில்—எல்லைப்பக்கத்தில்,

## இயல் 60

**வெறியோ டெழுந்த வீரப் படையினர்**
**வெண்ணகர்ப் புகுந்து விளைத்தனர் சமரே!**

பெருமன்னன் துணைபெற்ற மைந்தன் தன்னுள்
பெருகிவரும் மகிழ்ச்சியினுல் நன்றி சொன்னுன்;
வருமுன்னம் இவனென்று நினைந்தான்; வெற்றி
வாய்க்குமுனம் அவனென்று நினைந்தான்; ஆனல்
ஒருவன்றன் நினைவறிய முடிய வில்லை;
உருத்தெழுங்கால் போரிலது தெரியும் நாளை;
செருமுன்னி எழுபடைகள் இரண்டுஞ் சேர்ந்து
சேயோனைப் பின்தொடர்ந்தே அப்பாற் சென்ற. 282

படகுகளால் புனலாற்றைக் கடந்து சென்று
படையிரண்டும் அக்கரையைச் சார்ந்து, தீயிற்
படமனைகள் பலவெரித்துக் கழனி யெல்லாம்
பாழ்செய்து, மாந்தர்தமை அச்சு றுத்திப்
படபடவென் ருர்ப்பெடுத்து நகருட் புக்க
பாய்புலிகள் போலானுர் வீர ரெல்லாம்;
அடகெடுக; வெறியொன்றே நிமிர்ந்தெ ழுந்தால்
அழிவன்றி மற்ரென்றற் கிடமே யில்லை. 283

---

சேயோன்–இளைஞன்.

## இயல் 61

வெண்ணகருட் படைபுகுந்த செய்தி கேட்ட
வெண்கோடன் சினந்தெழுந்து பாய்ந்து வந்தான்

பாய்புலிகள் நகருக்குட் புகுந்த காலைப்
பார்த்தனர்வெண் கோட்டையினை; உடன்றெழுந்து
போய்மதிலைத் தகர்க்களன ஓடி வந்தார்;
பொன்றலர்தாம் உட்புகுந்த செய்தி கேட்டுக்
காய்சினத்தன் வெண்கோடன் உருத்தெழுந்து
கருதலரைப் பொருதலறச் செய்வேன் என்று
பாய்புரவி மிசையேறிப் பாய்ந்து நாட்டுப்
பற்றதனுல் பற்ருரைப் பற்ற வந்தான். 284

பரியேறி வருவீரன் பகைமுன் னின்று
'பற்றலரே! என்னுடன்போர் தனித்துச் செய்ய
வருவீரோ? பொருதற்கு வல்ல ராயின்
வருக'வெனத் தோள்தட்டி ஆர்ப்ப ரித்தான்;
அரியேறிவ் வறைகூவல் கேட்டு நின்றே
'அதிரவரும் மொழிபுகல்வோய்! யார்நீ? என்பால்
சரியாகத் தனிநின்று பொரவல் லாயோ?
தகுதுணிவும் பெறுதிஎனில் பொரவா' வென்ருன். 285

---

பொன்றலர், கருதலர், பற்ருர்—பகைவர். பொர—போர்புரிய.

‘இளமகனே! வெண்கோடன் எனும்பேர் கொள்வேன்
இக்கோட்டைத் தலைவன்யான்; மாதர் தாமும்
களமருவிப் போர்செய்யும் வீரங் கொண்ட
கடிநகராம் வெண்ணகருள் வந்து நின்றே
உளறுமொரு துணிவுனக்கு வந்த தேயோ?
ஒருவரெனை இதுவரையும் அழைத்த தில்லை;
வெளிறுடைய உன்னுடலும் தலையும் வேறும்;
வேலைஎடு! ஆவிவிட வாவா’ என்றான். 286

கடிநகர்— காவல்பொருந்தியநகரம். வெளிறு— வலியற்றதன்மை.

## இயல் 62

**கோளரிக்கும் வெண்கோடன் றனக்கும் நேர்ந்த
கொடும்போரில் வெண்கோடன் தோல்வி யுற்ருன்.**

வெண்கோடன் உரைத்தவெலாம் கேட்டு நின்ற
வீரமகன் வேலெடுத்தான் நகைத்தெ ழுந்தான்;
கண்மூடித் திறக்குமுனம் பாய்மா வேறிக்
கறங்கெனவே சுழன்றுசுழன் ருர்ப்ப ரித்தான்;
நண்பாடும் பொழுதத்து நண்பர் போல
நண்ணரிவ் விருவருமே நகைத்து நின்று
விண்ணுடும் மின்னொளிபோல் வேலே வீசி
விளையாடிப் பொருதனர்தம் திறமே காட்டி. 287

காலெடுத்துப் புரவிகளும் சுழலும் போது
களமெங்கும் மேலெழுந்து புழுதி சூழ,
வேலெடுத்து வாய்மடித்துக் கோடன் மார்பில்
வீரமகன் குறிபார்த்து வீசி விட்டான்;
மேலுடுத்த வன்கவசம் வாய்பி ளக்க,
விரியகலத் தவ்வீட்டி தைத்த ழுந்த,
வாலுகத்துச் செங்குருதி சோர வீழ்ந்தான்
வாய்வீரம் பலபேசி வந்த வீரன். 288

---

கறங்கு—காற்ருடி. நண்பாடும்பொழுது- நட்புக்கொள்ளும்பொழுது. அகலம்—மார்பு. வாலுகத்து—வெண்மணலில்.

புரண்டுவிழும் வெண்கோடன் கவச மார்பில்
பொற்கழலை வைத்தழுத்தி வாளை ஓச்சி,
மருண்டவன்றன் கழுத்தரிய முயலுங் காலை
மனம்மயங்கி முறுவலன்றன் தாள்கள் பற்றி,
'வெருண்டவனை விட்டுவிடு, கொல்ல வேண்டா,
வீரவுனை வேண்டுகிறேன்' என்று கெஞ்ச,
'இருண்டுவிடும் உன்வாழ்வென் றஞ்சி என்னை
இரக்கின்ருய் ஆதலினுல் இறக்க வேண்டா. 289

பணிவோரை ஒருநாளும் கொல்ல ஒவ்வேன்;
பகைஎனினும் பிழைத்துப்போ!' என்று கூறிப்
பணியாளர் தமையழைத்துக் 'கோடன் கையில்
பற்றுவிலங் கணிவித்துக் கொண்டு செல்க!
துணிவாளன் இவனைஒரு காவல் செய்க!
துயரேதும் தாராமல் பேணு' கென்று
தணியாத திறலுடையன் ஆணை யிட்டான்;
தாள்பணிந்தவ் வேவலர்தாம் கொண்டு சென்ருர். 290

பொருகளத்தில் நகர்த்தலைவன் தோல்வி கண்டான்;
பொருதலர்முன் இறந்திலனுய் இரந்தான் என்ற
அருவருக்கும் புன்மொழிகள் நகர மெங்கும்
அலராகிப் பரவியது; பெண்ணும் ஆணும்
'சிறுபகைவற் காற்ருமல் தோற்றுப் போன
சீரிழந்த வெண்கோடன், உயிருக் காக
உறுபகைக்குப் பணிந்துவிட்டான் மான மில்லான்
உலுத்த'னென ஊரெல்லாம் வெறுத்து ரைத்தார். 291

---

துணிவாளன் என்றது உள்ளக்குறிப்பு. அலர்—பழிமொழி

## இயல் 63

**வெண்கோடன் சிறைப்பட்ட செய்தி கேட்டு
வீரமிகு தனியொருவன் பாய்ந்து வந்தான்.**

அம்பாரும் புட்டிலொன்று தோளில் தூங்க
ஆர்க்கின்ற சிலையொன்றை மலர்க்கை தாங்கத்
தெம்பாக ஒரிளைஞன் புரவி ஏறித்
தேர்கவசம் மெய்ம்மறையப் பூண்டு, தன்னை
முன்பாக அடையாளம் அறியா வண்ணம்
முகமூடி ஒன்றணிந்து, சினமே கொண்டு,
கொம்பூதி ஆர்ப்பரித்துப் போர்மேற் செல்லக்
கோட்டையின்முன் தனியொருவன் வந்து நின்றான்.

'போர்தொடுக்க வந்துள்ளேன்; துணிவு கொண்ட
புகல்மறவர் எவரேனும் தனியராக
நேர்தொடுக்க வல்லீரேல் வருக! இன்று
நிகழ்போரில் கண்டிடுவோம் வெற்றி தோல்வி;
யார்தொடுக்க வருகின்றீர்? வாழ்வும் சாவும்
எனுமிரண்டுள் தலைக்கொன்று பகிர்ந்து கொள்வோம்;
ஊர்கொடுத்து வாழ்வெதற்கு? போரில் என்றன்
உயிர்கொடுத்தும் நகர்காப்பேன் வருக' என்றான். 293

---

அம்புஆரும்புட்டில்—அம்புக்கூடு. தூங்க—தொங்க. சிலை—வில். புகல்—மனச்செருக்கு

## இயல் 64

**கோளரியை எதிர்க்கவந்த கவச வீரன்**
**கூர்வேலால் தாக்குண்டு தரையிற் சாய்ந்தான்.**

'வெண்ணகரில் செயல்வீரம் குறைந்த தேனும்
விளம்புகிற சொல்வீரங் குறைய வில்லை;
திண்ணியனும் வெண்கோடன் வந்து நேற்றுச்
சிறையகத்து வதிகின்முன் அமரில் தோற்று;
பெண்ணனையான் இவன்வந்து வீரம் இன்று
பேசுகின்முன் வாய்கிழிய என்முன் நின்று;
நண்ணிவரும் மானென்று புலியின் முன்னே
நாடகங்கள் ஆடுவதைப் பாராய் இன்னே! 294

என்பரியைக் கொணர்க'வென ஏறிக் கொண்டான்
ஏறனைய கோளரியன்; கோட்டை வீரன்,
முன்பழியைத் தீர்ப்பதற்கே ஈண்டு வந்தேன்;
முனைத்துவரும் என்பகழிக் கெதிரில் நிற்கத்
தென்புனது நெஞ்சகத்து நிலைத்து நின்முல்
தெரிகணையை எதிர்தாங்கஃ தில்லை என்முல்
பின்புறவே ஓடிவிடு!' எனப்பு கன்று
பெரும்பகழி பலதொடுத்தான் நாணிற் பூட்டி. 295

பகழி—அம்பு

கார்முகத்தின் தாரையெனக் கனன்று சிந்தும்
கார்முகத்தின் அம்புகளைத் தடுத்துத் தாங்க
ஏர்முகத்தன் தடுமாறிக் குனிந்தும் சாய்ந்தும்
இடையிடையே உடல்வளைந்தும் சுழன்றும் நின்றான்;
ஓர்முகத்தும் இவ்விளவல் இன்றே போல
உறுதுயரம் அடைந்ததிலை; எனினும் அன்னான்
போர்முகத்துச் சலிக்கவிலை; புலிபோல் நின்று
பொருமுறையைப்புகழ்ந்தவனைப்பொருதுநின்றான். 296

நெடும்பொழுது பொருததற்பின் காளை நெஞ்சம்
நிமிர்ந்தெழுந்தான் கனன்றெழுந்தான்;வேலைத்தூக்கி
விடும்பொழுது வழக்கம்போல் முழக்கஞ் செய்து
விட்டெறிந்தான்; பட்டதிர்ந்தான் எதிர்ந்த வீரன்;
தொடுங்கவசம் கிழித்தகலம் தைத்த தவ்வேல்;
துளைத்தழுந்தும் அதனைஒரு கையாற் பற்றிப்
பிடுங்கியவன் செங்குருதி சோர வீழ்ந்தான்;
பீடுபடப் பொரவந்தோன் தரையிற் சாய்ந்தான். 297

---

கார்முகம்— 1 மழை 2 வில். ஏர்— அழகு. பீடு—பெருமை.

## இயல் 65

சாய்ந்த வீரன் தையலென் றறிந்து
போந்தவட் கறிவுரை புகன்றுசிறை செய்தான்.

சாய்ந்தவன்பால் அவ்விளவல் விரைந்து சென்று,
தன்வாளால் முகத்திரையை விலக்கி விட்டான்;
ஓய்ந்தவளோர் பெண்மகளே என்று கண்டான்;
ஒளிமுகத்தில் கயல்விழிகள் பிறழக் கண்டான்;
சாய்ந்தளகம் தோள்மிசையே புரளக் கண்டான்;
தாங்கரிய திகைப்புடனே வியப்புங் கொண்டான்;
காய்ந்தமரில் பெண்ணுடனே பொருதோம் என்று
கைபிசைந்து தனதுமனம் வருந்தி நின்ருன். 298

மூவகத்துப் பாவையரும் படையிற் சேர்ந்து
முனைத்தெழுபோர்தொடுக்குவரேல்ஆண்பால்என்போர்
சாவதற்கும் அஞ்சாராய்ப் புரியும் வீரம்
சாற்றுதற்கும் எளிதாமோ? விந்தை! விந்தை!
ஏவகத்து விற்போரும் மற்றைப் போரும்
இவளின்மேற் பன்மடங்கு விஞ்சி நிற்பர்;
நாவகத்துச் சொல்லெல்லாம் கூட்டிச் சேர்த்து
நவின்ருலும் இவள்திறத்தை நவிலப் போமோ? 299

---

அளகம்—கூந்தல். காய்ந்து—கோபித்து. ஏ அகத்து—அம்பைத்தன்னகத்தே கொண்ட,

எனவுளத்துச் சிந்திப்போன் அவனை நோக்கி,
'இயம்பரிய வீரத்தின் எழில ணங்கே!
தினவெடுத்த திண்டோளன் என்முன் தோற்றாய்;
சிறைசெய்தேன்; என்னையினித் தப்பிச் செல்லல்
கனவகத்தும் இயலாது; போரை வேட்டுக்
களமுற்றார் சிறையுறுதல் சமரிற் சாதல்
எனுமிவற்றுள் ஒன்றுறுதி; அறிவாய் நீயும்;
ஏன்வந்தாய் ஆய்வின்றி முனையகத்தே? 300

அரிவைஎனப் பிறந்தனை நீ! செங்களத்தில்
ஆடவரோ டமர்புரிதல் ஒல்வ தாமோ?
உரிமைஎனக் கூறுவை நீ! ஒவ்வேன் ஒவ்வேன்;
உடலமைப்பின் இயல்புணர்ந்து நடத்தல் வேண்டும்;
அரியசெயல் பலசெய்தல் இயல்வ தேனும்
அமர்புரிதல் முறையன்று பேதாய்' என்றான்;
புரிசமரில் பலர்முன்னர்த் தோல்வி காணப்
புழுங்கினள்நெஞ் சழுங்கினளப் பூவை நல்லாள். 301

## இயல் 66

வஞ்சனை யுளத்தொடு வஞ்சியவ் வீரனைக்
கெஞ்சிவெண் ணகர்க்கண் வந்தருள் என்றனள்.

சூழ்ந்தொன்று சிறையிருந்து தப்பிச் செல்லத்
தோகைமனங் கொண்டவளாய்த் தன்மு கத்தைச்
சூழ்ந்துள்ள திரையதனை நன்க கற்றிச்
சூரனையோர் கடைவிழியால் உற்று நோக்கத்
தாழ்ந்தநெடுங் கருங்குழலும், எள்ளின் மூக்கும்,
தண்ணியநற் பிறைநுதலும், புருவ வில்லும்,
ஆழ்ந்தபொருட் குறிப்புணர்த்தும் அகல்வேற் கண்ணும்
அரியேறு கண்டுளத்தை அவள்பால் தந்தான். 302

'முறுவலுக்கு முகந்தந்த மறவ ரேறே!
முனைமுகத்துப் பலமறவர் பொருதார் என்பாற்
புறமளித்துச் செலக்கண்டேன் முன்னர்; இன்றோ
புலியனையாய்! எனைவென்றாய்; போரில் வெல்லும்
திறமுனக்குப் பெரிதெனினும் என்போற் பெண்ணைச்
சிறைசெய்தாய் வென்றுவிட்டாய் என்று சொன்னால்
வரவுனக்குப் பழியல்லால் புகழே யில்லை;
வாய்மையிது; நினையினது வீர மில்லை. 303

---

முறுவல்—புன்னகை

பெண்ணோடு பொருதுயர்ந்தான் வெற்றி பெற்றான்
பிறங்குபுகழ் வீரமொடு கொண்டான் என்று
மண்ணாடு சொலும்விருது பெறுவ தற்கோ
மனம்வைத்தாய்; மாதென்னைச் சிறையில் வைக்க
எண்ணாதே; விட்டுவிடு; நினதே வெற்றி;
எங்கட்கும் பணிவதுதான் கடமை யாகும்;
நண்ணாரென் றெண்ணாமல் இனிமேல் எங்கள்
நகருக்குள் நீவருக! நலமே வாய்க்கும். 304

பொரவந்த வெண்கோடன் சிறையுற் றேகப்
புதுத்தலைமை என்தந்தை பெற்றார் அன்றே;
கரவில்லை; முதியரவர் என்சொற் கேட்பர்
கன்னிஎன்பேர் மானத்தி என்பர்; நெஞ்சில்
உறவந்த நட்புறவால் என்பின் வந்தால்
உரியதொரு கோட்டையினை ஒப்ப டைப்பேன்;
பிறகிந்தச் சமரெதற்கு வாவா' என்று
பெடைக்குயிலின் இனியகுரல்கொண்டுசொன்னாள். 305

அவளெய்த வில்லம்பு தடுத்து நின்றோன்
ஆயிழையின் விழியம்பு தடுக்க லாற்றான்;
தவளநகைப் பொலிவுடனே இனிய சொல்லும்,
தனிநடையும், கொடியிடையும், நயஞ்செறிந்து
தவழுமொழி வாயழகும், வீரப் போக்கும்
தறுகணுறுங் கோளரியை வென்று நிற்க,
இவனுமவ ளுடன்செல்ல இயைந்தா னாகி
எழில்வீரக் குலமகள்பாற் சிலசொல் சொல்வான். 306

---

பிறங்கு—விளங்கு. விருது—சிறப்பு. கரவு-வஞ்சனை. தவளம்—வெண்மை. தறுகண்—அஞ்சாமை.

'மறவர்குலப் பூங்கொம்பே! நயந்து சொல்லும்
மாற்றத்தை நம்புகிறேன்; மாற்றம் செய்யேல்;
சிறகிழந்த பறவைஎன நிற்கு முன்னைச்
சிறைதவிர்த்தேன்சொன்னசொலேக்காத்தல்வேண்டும்
உறநிவந்த கோட்டையினை அட்டி யின்றி
ஒப்படைத்துச் சொற்கேட்டுப் பணிதல் வேண்டும்;
பிறழுநிலை தென்படுமேல் எனது சீற்றம்
பேரழிவைச் செய்துவிடும் எழுக' என்றான். 307

---

மாற்றம்—சொல். மாற்றம்—மாறுபாடு. உறநிவந்த—மிகஉயர்ந்த.

## இயல் 67

**மானத்தி உரைத்தமொழி உண்மை என்று**
**தானுந்திப் பின்தொடர்ந்தான் தடந்தோள் வீரன்**

சிறைவிடுத்த அம்மகள்தான் சொன்ன வண்ணம்
செய்வதென உடன்பட்டுத் தலையசைத்து
விரைபுரவிக் குசைதொட்டுத் திருப்பி விட்டாள்;
வில்விடுத்த அம்பெனவே அதுபாய்ந் தோட,
உறைவிடுத்த வாளேந்தி வயமா வேறி
உரமுடையான் அவளைப்பின் தொடர்ந்து சென்றான்;
இரைபிடிக்க விரைந்துவரும் மீனைப் போல
எழில்மகளைத் தொடர்ந்ததவன் இளைய உள்ளம். 308

சடைவிரிந்த கருங்குழலும், திரண்டு ருண்டு
சாயல்மிகும் இருதோளும், புறத்தின் பாங்கும்,
இடைசுருங்கிப் பொலியழகும், குசையைப் பற்றி
எழிலாகப் பரிசெலுத்தும் இயல்பும் நோக்கி,
இடையிடையில் அவள் திரும்பிப் பார்க்குங் காலை
இளையவன் அவ் ஒருபாதி முகத்திற் சொக்கி,
நடைமெலிந்த புரவியினை நோக்கா னாகி,
நனவிழந்து கனவுலகில் தொடர்ந்து சென்றான். 309

---

குசை—கடிவாளம். சாயல்—அழகு

## இயல் 68

தையல் அவள்தான் தப்பிப் புகுந்தாள்
மையல் கொண்டோன் வஞ்சினம் மொழிந்தான்

ஓங்குநிலைப் பெருவாயிற் கோட்டை முன்னர்
ஓடிவரும் மானத்தி நிலைமை கண்டே
ஆங்குறுவோர் பெருங்கதவைத் திறந்து விட்டார்;
அரிவையத னுட்பாய்ந்து புகுந்து கொள்ள
வீங்குநெடுங் கதவதனை மூடிக் கொண்டார்;
வீரமகன் அதுகண்டு வெளியில் நின்றே
ஏங்குமனத் துயரத்தைத் தாங்கி நின்றான்;
ஏமாற்றம் பெற்றமைக்கு நாணி நின்றான். 310

உட்புகுந்த அம்மகளும் மதின்மே லேறி
ஒருமகனாய் நிற்போனை விளித்து நோக்கிக்
கட்கமுடன் நிற்போய்நின் நாடு நோக்கிக்
கடிதுவிரைந் தோடுகநீ!' என்றாள் மங்கை;
வெட்கமுடன் பெருஞ்சினமும் கொண்ட காளை
'விரகுபுரிந் தெனைப்பழித்தாய்! பிழைத்தாய்! நாளை
மட்புகுந்து தூளாகும் நினது கோட்டை;
மாயத்தாய்! நின்னுடலும் கரியாம் தீயில். 311

கட்கம்—வாள். விரகு—தந்திரம்

நரிகண்டு பின்வாங்கச் சூழ்ச்சி செய்த
நயவஞ்சப் பேய்மகளே! என்றன் நெஞ்சை
வெறிகொள்ளச் செய்துவிட்டாய்! நாளை நேரும்
விளைவுகளை உணராமல் விதைத்து விட்டாய்!
கரிகொண்டு பரிகொண்டு படைகள் கொண்டு
காத்தாலும் என்சினத்தைத் தடுக்கல் ஆற்ருய்!
எரிகொண்டு வாயிலெலாம் தீயும்; எங்கள்
இடிகொண்டு கோட்டைஎலாம் சாயும்' என்ருன். 312

சினந்துரைத்த மொழியெல்லாம் கேட்ட நங்கை
செவ்வாயிற் கலகலெனச் சிரித்து நின்று,
'தனந்தனியாய் நிற்கின்ருேய்! உனது நாட்டில்
தனக்குநிகர் இலையென்று தருக்க லாகும்;
வனந்திரியும் களிறனையான், எங்கள் நாட்டு
வாள்வீரன், படைத்தலைவன், உடன்றெழுந்தால்
இனந்தெரிய ஒண்ணுமல் உடலைக் கீறி
எடுத்தெறிவன் உயிர்தப்பிப் பிழைத்துப் போபோ! 313

வென்றுவிட மனப்பால்நீ பருகு கின்ருய்!
விளையாட்டுப் பிள்ளையென மறுகி நின்ருய்!
குன்றனையான் வெகுண்டெழுமேல் வீர ரெல்லாம்
குற்றுயிராய்க் கையிழந்து காலி ழந்து
பொன்றுநிலை எய்திடுவர் அந்தோ! நீதான்
புறங்கொடுத்து மீள்வைஎனில் உயிர்கள் தப்பும்;
சென்றுபிழை' என்றவளும் எள்ளி நின்ருள்;
சினமடங்கல் குமுறலுக்கோர் அளவே யில்லை. 314

---

தனந்தனியாய்—தன்னந்தனியாகி, மீள்வை—மீள்வாய்.

பெண்ணொருத்தி இகழ்ந்துரைத்த இழிவும், வெற்றி
பெறும்நிலையில் மதியிழந்து பிறழ்ந்து காட்டும்
கண்ணசைவில் ஏமாற்றங் கொண்ட நாணும்,
கன்னியவள் சொன்னசொலில் பிழைத்த தாலே
உண்ணிவந்து வருசினமும் மாறி மாறி
உள்ளத்தை வாட்டுவதால் உழன்ற செம்மல்
எண்ணியதை வெளிப்படுத்திக் காட்டு வான்போல்
இருவிழியும் கனல்தெறிக்க நோக்கிச் சென்ருன். 315

---

உண்ணிவந்து—உள்நிவந்து—மனத்தில் மேலோங்கி. செம்மல்—தலைமைதாங்கும் கோளரி.

## இயல் 69

**கோளரியின் வஞ்சினத்தைக் கேட்டோர் அஞ்சிக் கூடியொரு சுருங்கைவழி தப்பிச் சென்ருர்.**

வெஞ்சினத்தான் வெகுண்டுரைத்த வஞ்சினத்து
வீரமொழி மானத்தி தந்தைக் கெட்ட,
அஞ்சுளத்து முதியனவன் காளை நாளை
அணுகுமுனம் வழிதேட வேண்டு மென்று
நெஞ்சகத்துச் சிந்தித்தான் வழியுங் கண்டான்;
நினைத்தவெலாம் தொகுத்தொருங்கே வரைந்த ஓலை
கஞ்சுகத்து மறவன்பால் தந்து, நாட்டுக்
காவலன்பால் தருகவெனப் பணித்த பின்னர், 316

மற்றவரை அழைப்பித்து நிலைமை கூறி,
'மாற்றலர்பாற் சிக்காமல் தப்பிச்செல்ல
உற்றதொரு சுருங்கைவழி புக்குச் செல்லின்
ஊர்கடந்து மூவகத்தை அடைத லாகும்;
சொற்றபடி வஞ்சினத்தை முடிக்கும் ஆற்றல்
சூரன்பால் உளதறிவீர்; இதைவி டுத்தால்
முற்றுமழிந் தொழிந்திடுதல் உறுதி' என்ருன்;
மொழியுமுனம் எல்லாரும் சுருங்கை புக்கார். 317

---

வஞ்சினம்—சபதம். அஞ்சுளம்—அஞ்சும் உள்ளம். கஞ்சுகம்—சட்டை நாட்டுக்காவலன்—மதலேக்கோ. சுருங்கை—சுரங்கம்.

## இயல் 70

**மறுநாள் கோட்டை வாயிலுட் புகுந்தோன்
பொருவாள் விழிமகட் கண்டிலன் புலம்பினன்.**

துயிலரசு செயுமிரவு புறந்தந் தோடத்
துதையிருளின் வாய்பிளந்து கதிரோன் தோன்ற
அயிலரசின் இலைவேலான் படைதி ரட்டி
ஆர்ப்பரித்து வெண்கோட்டை வாயில் சார்ந்தான்;
எயில்வளையும் நெடுங்கதவின் வாய்பி ளக்க
இடித்ததனுட் புலிபோலப் பாய்ந்து சென்றான்;
பயில்பவரங் கொருவருமே காணு னாகிப்
பகரரிய ஏமாற்றங் கொண்டு நின்றான். 318

காணுநுங் கேளாருங் கூனர் தாமும்
கைகால்கள் முடமாகிச் செயல்செய் யாரும்
பேணார்தங் கோட்டைக்குள் இருக்கக் கண்டான்;
பேருலையின் வெய்துயிர்த்தான்; வீரம் ஒன்றே
பூணாகக் கொண்டவளைத் தனது நெஞ்சுட்
புக்கதனைக் கவர்ந்தவளைத் தேடித் தேடிக்
காணாமல் பதைபதைத்தான்; ஏதோ ஒன்று
கவ்வியது போல்மனத்தில் துடிது டித்தான். 319

துதை—செறிந்த. அயில்—கூரிய. அரசின் இலை—அரசமரத்திலை. எயில்—மதில். பயில்வர்—வாழ்பவர். உலையின்—உலையைப்போல,

இகழ்ந்துரைத்த மாற்றமெலாம் மறந்து போனான்;
எழிலணங்காம் அவள்மீது மையல் ஆனான்;
திகழ்ந்திருக்கும் அவளழகில் சொக்கி நின்று
சிறைப்பட்டான் இவனன்றி அவளோ இல்லை;
அகன்றிருக்கும் நெடுவேலால் காயம் செய்தான்
அவள்மார்பில்; அஃதாற மருந்தும் உண்டு;
வகிர்ந்திருக்கும் வடுவிழியால் பட்ட காயம்
மாறுதற்கு மருந்தின்றித் தவித்தி ருந்தான். 320

முனைமுகத்து மானத்தி தொடுத்து விட்ட
மொய்ம்புமிகு கணையெல்லாம் தடுத்து விட்டான்;
நனைமுகத்து மலர்க்கணையைத் தடுத்தல் ஆற்றான்
நலிவுமிகச் சுழன்றடிக்கும் புயலிற் சிக்கிக்
கனைகடற்கண் தடுமாறும் கலமே போலக்
கையற்று நிலைகலங்கித் தளர்ந்தி ருந்தான்;
நினைவகத்து நில்லாமல் உழல்வோற் கண்டு
நிகழ்ந்ததனை மாவலியன் வினவி நின்றான். 321

---

நனை—தேன். கனைகடல்—ஒலிக்கின்றகடல். கலம்—மரக்கலம்.
கையற்று—செயலற்று.

## இயல் 71

**மானத்தி நினைவதனால் வாடு வோனை**
**மாவலியன் இடித்துரைத்து மறக்கச் சொன்னான்**

விடையெதுவும் துயருறுவோன் தாரா னேனும்
விழைந்ததனைப் பளிங்கேபோல் எடுத்துக் காட்டும்
விடையனையன் முகத்துறுப்பால் கண்டு கொண்டான்;
'வீர நினக் கொன்றுரைக்கக் கடவன் கேண்மோ!
கடைவிழியிற் கட்டுறுத்தும் மகளிர் கொண்ட
கட்டழகும் பற்றுளமும், இன்று பூத்து
நடைமுறையில் இதழ்விரித்து நாளை வாடும்
நலமுடைய மலரனைய இயல்பே கொள்ளும். 322

போர்விழைவோர் காதலெனும் மலருள் மூழ்கிப்
பொன்றிவிழும் வண்டாகார்; போரில் வெற்றித்
தார்விழையும் நினைவுடன்தான் ஈங்கு வந்தோம்;
தையலரால் கடன்மறந்து திரிதல் நன்றோ?
கார்விழையும் கூந்தலுக்கு மயங்கி நின்றோர்
கடும்போரை வென்றதிலை; உண்மை வீரர்
ஏர்விழையும் காமமெனும் வலையிற் சிக்கி
இடருக்குள் தாமேபோய் வீழ்ந்து சாகார். 323

---

ஏர்—அழகு.

தலைவனென உனை நம்பி வந்தோம்; இங்குத்
  தரியலர்தம் நாட்டழகி ஒருத்திக் காக
அலையுமனம் நீகொண்டாய்! மூவ கத்தை
  அருஞ்சமரில் வென்றுவிடின் அதன்மேல் நீதான்
கலையுலகம் புகுந்திடலாம்; காதல் வாழ்வில்
  களித்திருந்து திளைத்திடலாம்; தடுப்பா ரில்லை;
மலைவரிய கோளரியின் வீர மெல்லாம்,
  மாண்பெல்லாம் வீணாகப் போதல் நன்றோ? 324

வீரந்தான் விரும்புதியோ? காதல் ஒன்றே
  மேலாக விழைந்தனையோ? இரண்டில் ஒன்றைத்
தேருங்கால் மற்றொன்றை விடுதல் வேண்டும்;
  சேயிழையின் காதலொன்றே வேண்டு மென்றால்
பாரஞ்சும் கைவாளைத் தரையில் வீசு!
  பணிந்துவிடு மாற்றலர்க்கு! வீர மென்றால்
போரஞ்சாத் திறல்காட்டு! வாளைத் தூக்கு!
  புகல்மறவன் கோளரியின் பெயரை நாட்டு!' 325

---

மலைவரிய—எதிர்க்கமுடியாத.

## இயல் 72

**மாவலி சொல்லால் மாறிய கோளரி**
**போர்வலி காட்டப் புறப்பட் டேகினன்.**

படைத்துணைவன் மாவலியன் சூடு தோன்றப்
பகர்ந்தவெலாம் செவிபுகுத்த் தளர்வு நீங்கி,
விடைக்களிற்றின் அனையானோர் முழக்கஞ் செய்தான்;
'வெம்பகைக்குப் பணிந்திடுமோ வீரத் தோள்கள்!
படைக்கலங்கள் மோதட்டும்; போர்க்க ளத்தில்
பகைவருடல் வீழட்டும்; பார்த்த லத்தில்
முடைக்குருதி ஓடட்டும்;' எனப்ப கர்ந்து
முறுவலன்பல் நறநறெனக் கடித்து நின்றான். 326

'நாவலத்துக் கோளரியின் வீரம் வாழ்க!
நமைக்காக்கும் பெருங்கனகன் கொற்றம் வாழ்க!
மேவலர்க்குப் பணியாத திண்டோள் வாழ்க!
மிடலுடைய மறவர்குலம் வாழ்க' என்று
நாவகத்துப் பெருமுழக்கஞ் செய்து வீரர்
நடைவகுத்துப் படைத்துணைவர் சூழச் சென்றார்;
காவகத்துக் கொடுவிலங்கின் கூட்ட மெல்லாம்
கடுகிஒரு வழிநடந்த தென்னச் சென்றார். 327

## இயல் 73

**வெண்கோட்டை நகர்த்தலைவன் விட்ட ஓலை**
**விரித்தொருவன் படித்திருக்க மன்னன் கேட்டான்.**

வெண்கோட்டைக் கஞ்சுகத்து மறவன் வந்து
வேத்தவையில் மதலைக்கோ தாள்ப ணிந்து
மண்போற்றும் மானத்தி தந்தை தந்த
வரைமுடங்கல் தந்திருக்க, வேந்தன் அங்குக்
கண்காட்ட அதுபெற்ற ஓலை நாய்கன்
காவலன்முன் அவையத்துப் படிக்க லுற்றான்;
'பண்போற்றும் புகழ்வேந்தே! வணக்கம்; உண்மை
பகர்கின்றேன் சினவாமல் செவிதந் தாய்க! 328

துளியேனும் அச்சமிலாச் சிறிய வீரன்
தோற்றத்தில் அரியேற்றை நிகர்க்கும் செம்மல்
விளிவேதும் அறியாத படைதி ரட்டி
வெண்கோட்டை பற்றுதற்கு முற்றி யுள்ளான்;
அளிவாழும் மலர்மாலைக் கனகன் தந்த
அணிவகுத்த பெரும்படையும் துணையாக் கொண்டான்;
எளியேனைப் பொறுத்தருள்க! ஒன்றும் செய்ய
இயலாமல் தவிக்கின்றேன் துணையே யின்றி. 329

---

முடங்கல்—ஓலை. ஓலைநாய்கன் —அரசனுடைய கடிதப்போக்கு வரத்து அதிகாரி. விளிவு— அழிவு. அளி— வண்டு.

வயந்தநகர்ப் பெருவீரன் தனித்துச் செய்யும்
வாட்போரில் முன்னிற்க எவரும் இல்லை;
நயந்திருக்கும் அவனுருவம் ஆற்றல் எல்லாம்
நம்நாட்டு மாவேழன் தனை நிகர்க்கும்;
வயங்கொழிக்கும் வெண்கோடன் போரில் தோற்று
வலிவிழந்து சிறைப்பட்டான் என்றால் பாரோர்
வியந்திருக்கும் பெருவீரன் வலிமை எல்லாம்
விளம்புதற்கு யார்வல்லார்? எவரு மில்லை! 330

மீளியிவன் எதிர்நிற்கும் ஆற்ற லுள்ளார்
வேழனன்றி ஒருவரிலர்; கோட்டை தன்னை
நாளையழித் தொழிப்பனென வஞ்சி னத்தான்
நவின்றுள்ளான்; வேழனும்வந் துதவி செய்ய
வேளையிது போதாது; வீரன் வந்து
விடலையொடு பொருவனெனக் காத்து நிற்பின்
ஆளியிவன் வாளுக்கே இரையாய் வீழ்வோம்;
ஆதலினால் சுருங்கைவழி தப்பி விட்டோம்'. 331

---

வயம் — வெற்றி. மீளி — வீரன். விடலை — தலைவனாகிய கோளரி.
ஆளி—சிங்கம் போன்ற விலங்கனையு கோளரி,

## இயல் 74

**வேழனை அழைத்து விரைவினில் வருகென**
**ஆளினை மன்னன் அனுப்பினன் துடித்தே**

முடங்கல்தரும் செய்திஎலாம் படிக்கக் கேட்டு
முனிந்தெழுந்த மதலைக்கோ, எதிர்த்து வந்த
அடங்கலரை ஒழிப்பதினி எவ்வா றென்றே
அமைச்சர்படைத் தலைவரையும் வினவி நின்றான்;
'மடங்கலினை நிகர்ப்பானை அடக்க வேண்டின்
மாவேழன் ஒருவன்தான் தக்கான் என்றார்;
தடங்கலின்றி வலிமைமிகு வேழன் இன்று
தண்டலத்தில் உறைகின்றான்' என்று சொன்னார். 332

மாமன்னன் தூதுவரை விரைந்து கூவி
மாவேழற் கொணர்கஎனப் பணித்து நின்று,
'கோமன்னன் நாவலத்தான் போர்தொ டுத்தான்;
குமரனொரு சிறுமகனே தலைமை பூண்டான்;
நாமன்னும் வெண்கோட்டை பற்றிக் கொண்டான்;
நல்வலிமைக் கோடனையும் சிறையில் வைத்தான்;
ஏமன்னும் வில்லானுக் கெல்லாம் சொல்லி
இப்பொழுதே கொணர்க' வென ஏவி விட்டான். 333

---

அடங்கலர் — பகைவர். மடங்கல் — சிங்கம். தண்டலம் — வேழன் ஊர். ஏ — அம்பு.

## இயல் 75

**விரைந்திவண் வந்த வீரன் அனைத்தும்
வேழன் றன்பால் விளம்பினன் எடுத்தே.**

சொல்லேந்தித் தூதுசெலும் வீரன், காற்றுத்
தோல்விபெற விரைகின்ற புரவி ஏறி,
மல்லேந்தும் திண்டோளான் வேழன் வைகும்
மாநகராம் தண்டலத்தை எய்தி யங்குக்
கல்லேந்தும் உடலானைக் கண்டு தங்கள்
காவலன்சொல் செய்திஎலாம் எடுத்துச் சொல்வான்
'வல்லேந்திப் பொருமறவ! நமது நாட்டை
வயப்படுத்தப் போர்தொடுக்க ஒருவன் வந்தான். 334

முறுவலனும் கோளரிஎன் றொருபேர் தாங்கும்
மொய்ம்புடையன் வெண்ணகரைப்பற்றிக்கொண்டான்;
உறுவலிய கோடனையும் சிறையில் வைத்தான்;
உருவத்தால் உனை நிகர்த்தே விளங்கு கின்றான்;
தெறுசமரில் எனைப்பொருவார் மூவ கத்தில்
தேர்மறவர் எவரேனும் உளரோ என்று
தறுகணனாய் அறைகூவல் விடுத்து நின்று
தருக்குற்று வருகின்றான் நாடு நோக்கி. 335

---

வல் — ஒரே காலத்தில் பலரை வீழ்த்தும் வலிமை.

செருக்குற்றுத் தருக்குமொழி பேசி வந்த
சீயத்தின் வலியானை அடர்த்துத் தாக்கி
வெருக்கொண்டு வெந்காட்டி ஓடப் பண்ணும்
விறலுடையார் நினையன்றி யாரே உள்ளார்?
உருக்குற்ற நின்தோளால் தாக்குற் றுங்கே
உடன்றுவரும் அவ்விளைஞன் வீழ்தல் வேண்டும்;
நெருக்குற்று நாடுழலும் காலை ஈங்கு
நீயிருத்தல் முறையன்றும்; எழுக வீர! 336

நாடுனது தோள்வலிமை நாடுங் காலை
நமக்கென்ன எனவிருத்தல் நலமோ ஐய!
கேடுளத்தில் அறியாத மன்னன் உன்னைக்
கிளந்ததனை மனத்திருத்தும் நேரம் ஈதோ?
ஈடுலகில் எவருமிலர் எனப்பு கழ்ந்த
எம்வேழன் உயிருடனிங் கிருக்கும் போது
நாடுரிமை யிழந்தடிமை யாதல் நன்றே?
நண்ணுரும் இகழ்ந்துரைக்க வாழ்தல் நன்றே? 337

காலமினித் தாழ்த்துவிடின் கொடிய மாற்றார்
காலடியில் வீழ்ந்துவிடும் நமது நாடு;
ஞாலமுனை எள்ளிநகை யாடு மன்றே?
நாளொன்று போவதெனின் நாடு பாழாம்;
கோலமொடு வேலைஎடு! கூற்ற மென்னக்
கோலைஎடு! வாளைஎடு! கவசம் தாங்கு!
வாலமொடு வருவோனைத் தொலைக்க வாவா!
வாளுக்குந் தோளுக்கும் விருந்து கிட்டும்.' 338

---

சீயம் — சிங்கம். வெங்காட்டி — முதுகாட்டி. விறல் — வலிமை. கிளந்ததனை — சொன்னதை. வாலம் — சுட்டித்தனம்.

## இயல் 76

கோளரி யாரென ஐயங் கொண்டு
காளையை வேழன் கழறினன் வியந்தே.

எனவுரைத்த மொழிகேட்டு நின்ற வேழன்
எல்லையிலா வியப்புற்றுத் திகைத்து நின்றான்;
'கனவகத்தும் எனைப்பொருத நினைவோன் றன்னைக்
கண்டதில்லை நாவலத்தில் இந்நாள் மட்டும்;
எனை நிகர்க்கும் ஏந்தலென நுவலு கின்றான்;
யாவனவன்? என்மனைவி வேல்வி ழிக்குத்
தனயனில்லை பெண்மகவே பிறந்த தென்றாள்;
தந்துரைத்தமொழிபொய்யோ?பொய்யோ சொல்வாள்!

மகனென்றால் தனிமகிழ்வு கொள்ளுந் தாயர்
மகளென்று பொய்மொழியத் துணிவார் கொல்லோ?
மகனென்றால் எனைத்தேடி வாரா தின்னும்
மறைந்தங்கு வைகுவனோ? வந்தே சேர்வன்;
மகனென்றால் இவனன்றோ மகனே யாவன்;
மகவெனக்குப் பெண்ணாகப் பிறந்த தந்தோ!
மகனிவன்றான் யாவன்?யாண் டிருந்து தோன்றி
மல்லுக்கு வருகின்றான்? விந்தை! விந்தை!' 340

---

ஏந்தல் — பெருமையிற் சிறந்தோன்,

## இயல் 77

**சிறுவன் அவனெனச் சிந்தையின் இகழ்ந்தோன்
உறுபகல் நான்கு விருந்தயர்ந் தேகினன்.**

'தென்புறத்து மூவகத்தைச் சிறிதென் றெண்ணிச்
சிறுமகனே தாக்குதற்குச் சீறி வந்தான்?
வன்புயத்து மாவேழன் வயமா வீரன்
வாழ்கின்றேன் எனும்நினைவை மறந்தான் போலும்!
முன்பெடுத்த போரிலெலாம் முதுகு காட்டி
மூச்செறியத் தோற்றோடிச் சென்றி ருந்தும்
பின்பெதற்குச் சிறியவனை அனுப்பு கின்றான்?
பெருங்கனகன் ஆட்சிக்கு முடிவு போலும்!' 341

எனப்பலவும் தன்னுளத்து நினைந்த வேழன்
இயம்பவரும் தூதுவனை இனிது நோக்கி,
'மனக்கவலை விட்டொழிக! போர்தொ டுத்த
மைந்தனொரு சிறுவனென மொழியா நின்றாய்;
தனக்கெனவோர் வலியில்லா வேந்தன் இந்தத்
தகையறியாச் சிறுவனுக்கோ எனைய ழைத்தான்?
நினைத்தெழின் நான் செருக்கடக்கி அவனை வீழ்த்த
நெடும்பொழுதாவேண்டும்? நொடிப் பொழுதேபோதும்!

விருந்துண்டு களிப்போம்வா! இவனை மோதி
 விளையாட்டாக் கொல்வ' னென எண்மை யாகப்
பருந்தனைய நோக்குடையான் பகர்ந்திருந்தான்;
 பரியேறி வந்தமகன் வருந்திச் சொல்வான்,
'பொருந்தொழிலோய்! விருந்துண்ணும் நேரம் அன்று!
 போர்தொடங்கும் முன்பாக விரைதல் வேண்டும்;
நிறைந்தபுனல் வருமுன்பே அணைகள் கோலி
 நிறுத்துவதே கடனாகும்' என்றான் வீரன். 343

ஒல்லையில்நாம் செல்வமென உரைத்த மாற்றம்
 ஒன்றேனும் அவன்செவியிற் புகுத வில்லை;
எல்லையிலாக் களிப்புடனே ஆடிப் பாடி
 எக்களிப்பு மீதூர விருந்த யர்ந்தான்;
எல்லனையான் ஈரிருநாள் கழிந்த பின்றை
 இனிதெழுந்து போர்க்கோலம் பூண்டு நின்று
வல்லியம்போல் மறவர்புடை சூழ வந்தான்
 மாமன்னன் மதலைக்கோ நகரை நோக்கி. 344

---

எண்மை — எளிது. கோலி — கட்டி. ஒல்லையில் — விரைவில்.
ஏல்— சூரியன் வல்லியம் — புலி,

## இயல் 78

**விரைந்து வந்திலன் வேழன் என்றுங்கு
எரிந்து சிறைசெய ஏவினன் மன்னன்.**

என்றுவரும் என்றுவரும் சென்ற வீரன்
என்றேங்கும் மன்னவன்முன் வந்த தூதன்
நின்றரசன் தாள்பணிந்து 'வேழன் இங்கு
நேரலரைப் பொருதொழிக்கச் சீற்றங் கொண்டே
ஒன்றிவுளி மீதேறி வருகின் ருʼனென்
றுரைத்தமொழி கேட்டுளத்துச் சினந்த வேந்தன்
'நன்றியிலன் என்சொல்லைப் புறக்க ணித்தோ
நாள்கடந்து வருகின்ருன் நாயிற் கீழோன். 345

மதித்திருப்பின் இத்துணைநாள் தாழ்த்தல் செய்யான்
வாளொன்று கொண்டவனை வீழ்த்த போதும்
கொதித்திருக்கும் எனதுமன மாரு, தென்ருன்;
கொற்றவன்றன் சொற்கேட்டுத் தூதன் ருனும்,
மதித்துரைக்கும் அமைச்சவையும், ஆயத் தாரும்,
மற்றுள்ள குழுவினரும் வருந்தி நின்ருர்;
எதிர்ப்பிருக்கும் இவ்வேளை மன்னன் சொன்ன
இழிமொழிகள் கேட்டுளத்தில் வெறுப்புங் கொண்டார்.

---

இவுளி — குதிரை

குன்ருெத்த திண்டோளான் கவசம் பூண்ட
  கொலேவேலான் மாவேழன், வேந்தன் ஆட்சி
மன்றத்துட் பீடுநடை யோடு வந்து
  மன்னவனேப் பணிந்திறைஞ்சி நின்ருன்; உள்ளம்
கன்றத்தன் சினங்காட்டி மதலேக் கோமான்
  'காலந்தாழ்த் திங்குவரும் இவனேக் கொண்டு
சென்றந்தக் கொட்டிலுக்குள் அடைக்க' என்று
  திறமிக்க காவலனுக் காணே யிட்டான். 347

## இயல 79

வேந்தன் சுடுசொல் வேழன் கேட்டதும்
காந்தும் மனத்தொடு கழறினன் வெகுண்டே.

காவலன்றன் ஆணைக்கங் கஞ்சி நின்ற
காவலனும் சீயத்தை அணுகி வந்தான்;
மேவலர்தம் படைநடுக்கும் வேழன் சீறி
வீரனுக்கோர் அறைகொடுக்க, ஐயோ என்று
நாவலற மெய்யதிர மயங்கி வீழ்ந்தான்;
நாடாள்வோன் முகம்நோக்கிச் சூரன் சொல்வான்,
'காவலனே! நாட்டுக்கோர் பழியாய் வந்தாய்!
கருத்தில்லாய்! பொறுப்பில்லாய்! கடமை யில்லாய்! 348

என்னுயிரும் மதியாமல் போரில் உன்னை
எத்தனையோ முறைகாத்தேன்; அதற்கோ என்னைச்
சின்னவனைக் கொண்டவையில் இகழ்ச்சி செய்தாய்?
செருக்கொண்டு சீறிவரும் பகைவ ருக்கு
முன்னணுக மாட்டாமல் அஞ்சிச் சாகும்
மொய்ம்புடையோய்! வாய்மதமோ பேசு கின்றாய்?
உன்னையொரு கடுகளவும் அஞ்ச கில்லேன்;
ஒருவருக்கும் அடிபணியேன்; வீரங் கொள்வேன். 349

நாட்டின்பால் கொண்டதொரு வேட்கை யாலுன்
நன்றியிலாச் செயலெல்லாம் பொறுத்து வந்தேன்;
மாட்டின்பால் கறக்காமல் பயனே நல்கும்
மடியறுக்க முனைகின்றாய்! எனை நீ யாட்டும்
ஆட்டம்போல் அடங்கியுனக் காடி நின்றேன்;
அஞ்சியன்று; தாய்நாடு போற்றும் ஆசை;
வாட்டும்போ தடங்குவதால் மன்னா! என்றன்
வலிமைஎலாம் ஓர்ந்திலையோ? உணர்வாய் நாளை. 350

பொங்காமல் பொங்கிவரும் சீற்றங் கொண்டு
புரிந்தெழுந்து கைப்பற்ற நான்நி னைத்தால்
செங்கோலும் மணிமுடியும் நீய மர்ந்து
சீரிழந்த அரியணையும் என்பாற் சேரும்;
வெங்கோல! அரசிருக்கை கொள்ளும் ஆசை
விளைகின்ற தினையளவும் என்பால் இல்லை;
இங்காளும் அரசர்க்குப் பணிந்து போதல்
என்போன்றார் கடமைஎன அடங்கி நின்றேன். 351

முரசறைந்து போர்தொடுத்துப் பகைவன் வந்து
முறுக்குங்கால் ஆற்றாமல் தோல்வி கண்டே
அரசிழந்து நாடிழந்து செல்வம் நீங்கி
அடவிதனில் கோவூரன் அலையுங் காலைப்
பொரநினைந்தவ் வூரனுக்குச் சார்பாய் நின்று
புகுந்தபகை கெட்டொழிய வாகை சூடி
அரிநிவந்த இருக்கையினை அவனுக் கீந்தே
அணிமுடியும் கவித்ததைநீ அறியாய் கொல்லோ? 352

---

அடவி — காடு. கோவூரன் — வேழனால் முடி பெற்றவன்.

நீயணியும் இம்முடியும் நிலைத்த தைத்தான்
நினைந்தின்று சிறிதேனும் பார்த்தா யல்லை;
பேயனைய வெண்பூதன் பகைமை கொண்டு
பெரும்படையா லுனைஎதிர்த்தான்; அந்த நாளில்
தீயனைய சினமூண்டு செருக்க ளத்துச்
சேர்ந்திலனேல் பூதனுக்கோர் இரையா யன்றே
போயழிவை; எண்ணுகிலா ததும றந்தாய்;
புன்மைகளும்எனக்கிழைக்கத்துணிந்தாய்இன்றே! 353

பன்முறையும் நாவலத்துப் பகையை வென்றேன்
பார்காத்தேன் தாய்நாட்டுப் பற்ருல் மன்னு!
புன்மொழிகள் பலபொறுத்தேன் அதனு லன்ரு
புழுவென நீ நினைந்துசிறை செய்க என்ருய்!
நன்மைஎது வரினுமுன தவையில் நில்லேன்;
நன்றிக்குச் சிறிதேனும் தொடர்பே யில்லாய்!
வன்பகைவன் சூழ்கின்ற வேளை நீயே
வாளெடுபோ போர்தொடுநீ செல்வேன்' என்ருன். 354

## இயல் 80

**வெகுண்டுசெலும் வேழன்பால் நம்பி என்பார்
விரைந்தணுகி அவன்சீற்றம் மாற்றி நின்றார்.**

வெகுண்டெழுந்த மாவேழன் பயணம் ஆனான்;
வேத்தவையிற் சான்றோராம் நம்பி என்பார்
தகுந்துணைவர் மனங்கலங்கி வேந்தற் சார்ந்து,
'சற்றேனும் மதியிலைநின் செய்கை தன்னில்;
புகும்பகைவன் எதிர்நிற்க எவரே உள்ளார்?
புலமின்றி வேழனுளம் நோகச் செய்தாய்!
நகுஞ்செயலே செய்தனை நீ ஒல்லையிற்போய்
நன்மொழிகள் புகல்க'வென இடித்துரைத்து, 355

விரைந்துசெலும் வேழன்பால் ஓடி நின்று
'வீரருக்குள் முதல்மகன்நீ; வெற்றிச் செல்வன்!
கரைந்துமனம் இரங்குதலே கடமை; வேந்தன்
கரைந்ததனைப் பொருட்டாகக் கருதல் வேண்டா!
நிறைந்தமதி யுடையவனோ நினது மன்னன்?
நீயறியாய் அவன்நிலையை? ஓர்தலின்றி
இரைந்துசில உளறுவதும், வெகுட்சி நீங்கின்
இனியபல கழறுவதும் உடையான் அன்றோ? 356

---

கரைந்து—உருகி. கரைந்ததனை—சொன்னதை.

அனையனுரை கேட்டுளத்தில் புலந்து செல்லின்
அறிவுடைய நினக்கிதுதான் அழகோ? நாட்டை
முனைநுனியில் விடுப்பதுதான் முறையோ? உன்னை
முழுமையுடன் நம்புமெமைத் தவிக்கச் செய்தல்
தினையளவும் நலமாமோ? நீயே யன்றித்
தெறுபகையை எதிர்க்கவலார் யாரோ உள்ளார்?
எனையுணர வல்லாய்நீ! வீர ரெல்லாம்
இறந்தொழியக் கருதினையேல் செல்க இன்றே. 357

மன்னவன்பால் வெறுப்புற்ற ஒன்றால் வேழன்
மாற்றலர்க்குத் தாயகத்தை விட்டான் என்று
சொன்னமொழி கேட்பதற்கோ செவிகள் கொண்டேன்;
சூரனினும் உயிருடனே வாழும் போதோ
பன்னரிய புகழ்நாடு பணிதல் வேண்டும்?
பாரெல்லாம் வென்றவன்தான் வேழன் இன்று
முன்னமரில் போர்செய்ய வலிமை யின்றி
முதுமைநிலை எய்தினனென் றுலகம் சொல்லும். 358

தாயகத்துப் பற்றிருப்பின் நினது சீற்றம்
தணிந்தெழுந்து செருமுகத்துச் சீறிச் செல்க!
போயகத்து வாழ்வதொன்றே குறியாம் என்றால்
புலம்பிவரும் என்மொழியை மீறிச் செல்க!
காயமுற்ற எழில்முகத்து வேழன் சென்ற
களமெல்லாம் வென்றுவந்தான் இன்றோ எங்கள்
சீயமொத்த சிறுமகற்கே அஞ்சி விட்டான்
சென்றுவிட்டான் என்றுலகம் தூற்றும்' என்றார். 359

---

புலந்து—ஊடி. முனை—போர்முனை.

## இயல் 81

**மாவேழன் சினந்தணிந்தான் மன்னன் ருனும்**
**மனமகிழ்ந்தான் இனிதுரைத்தான் விருந்தும் தந்தான்.**

அஞ்சிவிட்டான் என்றமொழி கேட்ட வேழன்
ஆர்ப்பரித்தான் 'அறிவுடையீர்! யாருக் கச்சம்?
நெஞ்சுவிட்டுப் போகவிலை என்றன் வீரம்!
நெருப்பனைய வீரத்தைப் பழித்தல் வேண்டா!
தஞ்சமெட்டுத் திசைதேடிப் பகைவர் ஓடச்
சமர்செய்வேன் திறல்காட்டி வாகை கொள்வேன்;
விஞ்சிவிட்ட முதுமைஎன துடலுக் கன்றி
விளைந்துவரும் வீரத்துக் கில்லை' என்ருன். 360

மன்னவனும் வந்தவனைக் கெஞ்சி நின்று
மன்ருடி 'நாடுனக்குச் சொந்த மன்ரே?
சொன்னமொழி பொறுக்க'எனக் குழைந்து நின்ருன்;
சூரனுந்தன் மனமிளகி 'நாட்டிற் காக
முன்னமுறை இகழ்மொழியை மறந்து விட்டேன்;
மொழிகஉம தாணை'என, வேந்து வந்தே
'என்னுயிரின் அனையோய்நின் வீரம் வாழ்க!
இனியமருக் கெழுவதலால் வேறென் றில்லை. 361

---

தஞ்சம்—புகலிடம்.

பொழுதுபுலர்ந் தெழுந்திரோன் முகத்தைக் காட்டப்
போர்முரசம் நின்ரூர்க்கும்; படைகள் கூட்டி
விழுதுவிடும் பழுமரம்போல் நிற்கு முன்றன்
வீரமெலாம் பயன்படுத்தப் போர்மேற் செல்க!
தொழுதுவரும் தாயகத்தின் துயரம் போக்கத்
தோள்கொடுப்பாய்! பகைவர்க்குப் பாழ்கொ டுப்பாய்!
இழுதுபடும் விருந்துண்போம் வாவா இன்றே!'
எனமொழிந்து மறவனுடன் சென்ருன் மன்னன். 362

படையெழுச்சிப் படலம் முற்றும்

பழுமரம்—ஆலமரம். இழுது—கொழுப்பு.

மறமடுத்துத் தினவெடுத்து வலிமை கொண்டு
மாமடங்கல் இரண்டுடன்று பொருவ தென்னக்
குரலெழுப்பித் திறலெழுப்பிப் பொருதா ராங்கே
குழுமிவரும் வீரரெலாம் வியர்த்து நின்றார்.

—போர்ப்படலம் 401.

## இயல் 82

**மூவகத்தார் படையெடுத்து வரல றிந்து**
**முறுவலனும் கோளரிதான் முகம லர்ந்தான்.**

விளர்த்துவரும் வானத்தைச் செம்மை யாக்கி
   விரிகதிரோன் ஒளிப்பிழம்பாய் மேலெ ழுந்தான்;
வளர்த்துவரும் போர்த்திறமை மிக்க காளை
   மாவலியோ டுலவிவரும் பொழுது, வான
விளக்கினையும் மறைப்பதுபோல் தூசி வெள்ளம்
   வெளிவானிற் படரக்கண் டுசாவி நின்றான்;
தளத்துயரும் ஓரரங்கில் ஏறி நின்று
   தன்துணையாம் மாவலியன் நோக்கிச் சொல்வான். 363

'கரைபுரண்டு வருகின்ற வெள்ளம் போலக்
   கனன்றபெரும் படையொன்று நம்மை நோக்கித்
திரைபுரண்ட கடலொலிபோல் ஆர்ப்பெ ழுப்பிச்
   சீறியிவண் வருகின்ற' தென்று கூறத்
தரைவியந்த கோளரியும் ஏறி நின்று
   தாங்கரிய கடலொன்று வருதல் கண்டான்;
கரைகடந்த மகிழ்ச்சியினால் உரத்துக் கூவிக்
   கள்ளுண்டு களித்தான்போல் துள்ளிச் சென்றான். 364

---

உசாவி—வினவி. திரை—அலை. இவண்—இங்கே.

## இயல் 83

**பாசறைகள் இருபாலும் அமைந்த பின்னர்ப்**
**பகைப்புலத்துள் மாற்றுருவில் புகுந்தான் வேழன்.**

படையனைத்தும் திரட்டியணி வகுத்து நிற்கப்
பணித்துப்பின் தன்னாட்டுக் கொடியை நாட்டித்
தொடையுடுத்த மலர்மார்பன் அரிமா வன்ன
தோற்றத்தன் முறுவலன்போர்க் கொடிஎ டுத்தான்;
நடைதொடுத்த மூவகத்துப் படைஞ ரெல்லாம்
நாவலத்துப் படைக்கெதிரிற் சற்றே அப்பால்
படைதொகுக்கும் பாசறைகள் பலவ குத்துப்
பாராளும் மதலையனைச் சூழ்ந்து நின்றார். 365

இரவரசி நல்லாட்சி புரியுங் காலை
ஏறனைய மாவேழன் அணுகி வந்து,
'புரவலனே! முரசறைந்து செருக்க ளத்துப்
புகுமுன்னர்ப் பகைவலிகண் டறிதல் நன்றாம்;
உரமுடைய இளவலையும் நேரிற் காணல்
ஒருவகையிற் பயனுடைய செயலே யாகும்;
கரவுடையில் பகைமுனையிற் சென்று நானே
கண்டறிவல் விடைதருக' எனமொ ழிந்தான். 366

---

தொடை—மாலை. நடை—போர்ப்பயிற்சி. கரவுடை—மாற்றுடை.
அறிவல்—அறிவேன்.

திண்டோளன் திறலெல்லாம் மதலைக் கோமான்
  தெளிந்துணர்ந்தான் எனினுமவன் தனித்துச்செல்லின்
கண்டாரும் துயர்விளைக்க நேரும் என்று
  கலங்கினனாய்த் 'துணையின்றித் தனித்துச் செல்வோய்!
வண்டாரும் பூஞ்சோலை யன்று வீர!
  வட்கார்தம் உறைவிடத்துச் செல்லு கின்றாய்!
பண்டாளும் செருக்கின்றி விழிப்போ டேகிப்
  படைத்தலைவ! வருக'வெனப் பணித்தான் மன்னன். 367

மாற்றலர்தம் வீரன்போல் உடைய ணிந்து
  மாற்றுருவில் பகைப்புலத்துப் படைவெள் ளத்தில்
ஏற்றுடலன் பிறரறியா தொளிந்து சென்றான்;
  ஏந்தலுறை பாசறையை அறிந்து கொள்ள
ஆற்றகிலான் ஒவ்வொன்றும் உற்று நோக்கி
  அரியேற்றின் உறைவிடத்தைக் கண்டு கொண்டான்;
காற்றிலசை பாசறையின் திரையை நீக்கிக்
  கண்செலுத்திக் கூர்ந்ததனுள் நோக்கி நின்றான். 368

---

வட்கார்-பகைவர். ஏற்றுடலன்-ஏறுபோன்ற உடலுடையவேழன். ஏந்தல்—தோளரி. ஆற்றகிலான்—முடியாமல்.

## இயல் 84

**மறைந்துவரும் வேழனெனோர் வீரன் கண்டு
மனம்நோக உரைத்ததனால் கொன்று மீண்டான்.**

வலப்பக்கம் இளவேலன் மெய்காப் பாளன்
வருமுறவின் முறைபூண்டான் அமர்ந் திருக்க,
மலைப்புக்குத் துணைவந்த படைந டாத்தும்
மாவலியும் தடவலியும் இடத்தி ருக்க,
நலத்தக்க முறுவலனும் நடுவி ருக்க,
நயந்துபுல மொழிந்திருக்குங் காட்சி கண்டான்;
'குலத்துக்கண் தோன் றிவரும் தோன்ற லுக்குக்
கூறவரும் உவமையிலை' எனப்பு கழ்ந்தான். 369

பாசறையின் வெளிப்புறத்தில் மறைந்தொ துங்கிப்
பதுங்கிவரும் ஒருருவின் சாயல் மட்டும்
பேசலுறும் இளவேலன் விழியில் தோன்றிப்
பின்வாங்கக் கண்டுளத்தில் ஐய முற்று,
வாசலில்வந் தங்குமிங்கும் நோக்கி, எந்த
மாந்தனையும் காணாது மீள்வோன் சேணில்
வீசுமொளி விளக்கொன்றால் உருவின் சாயல்
விரைவதுகண் டுளவறிவோன் எனநி னைந்து, 370

---

மலைப்புக்கு—போருக்கு. சேணில்—தொலைவில், சாயல்—நிழல்.

‘மறைந்தஞ்சிப் பதுங்கிவரும் வீரன் யாவன்?
மறமிருப்பின் எதிர்நிற்க வெளியில் நீவா!
கரந்திருக்கும் கோழைஎனில் பேசா தின்னே
கடிதில்விரைந் தோடிவிடு! பேதாய்’ என்றான்;
நிறைந்தவலி வேழனுக்குக் கோழை என்ற
நெடுமொழிஓர் நெருப்பாகிச் சுடலும் தாவி
அறைந்தவனை மார்பகத்து மோதித் தாக்க
அப்பொழுதே இளவேலன் சாய்ந்து வீழ்ந்தான். 371

புறம்போந்த இளவேலன் இன்னும் இங்குப்
போதருதல் புரிகிலனே! என்னே! என்று
மறந்தோய்ந்த மாமல்லன் தேடு கென்று
வயவருக்குப் பணியிட்டான்; தேடிச் சென்றோர்
நிறம்பாய்ந்த பேரடியால் குருதி சிந்தி
நெடும்பிணமாய்க் கிடந்தானைத் தூக்கி வந்தார்;
‘அறந்தேய்ந்து போனதுவோ? இருளில் யாரும்
அறியாமற் கொலைசெய்த வஞ்சர் யாரோ? 372

பழிநாணச் செயல்செய்ய மூவ கத்துப்
பாராள்வோன் ஏவியுளான்; இதற்கு நாளை
வழிகாண தவனைவிடேன்; வஞ்ச நெஞ்சன்
வாய்விட்டுக் கதறும்வரை அடித்துக் கொல்வேன்;
இழிவான செயல்செய்யத் துணிந்தான் பாவி!’
எனமொழிந்தான் வெஞ்சினத்துக் காளை யன்னான்;
விழிகாண தொளிந்தங்கு வந்த வேழன்
விரைந்தேகித் தன்னரசன் பாடி சேர்ந்தான். 373

---

இன்னே—இப்பொழுதே. மாமல்லன்—மற்போர்வல்ல கோளரி. வயவர்—வீரர். நிறம்—மார்பு. குருதி—இரத்தம். பாடி—பாசறை.

## இயல் 85

**மன்னவன்பால் கோளரியை வியந்து வேழன்**
**மாற்றலனைப் புனைபெயரால் பொருவேன் என்றான்.**

மீண்டுவரும் மாவேழன் பகைப்புலத்தில்
  விளைந்தவெலாம் அரசனுக்கு விளம்பிப் பின்னர்,
'ஆண்டுவரும் மாமன்னா! வந்த ஏந்தல்
  அடலேறு படுநடையன், அழகன், வீரன்;
ஆண்டவனைப் பொருவதெனில் அரிய ஒன்றே!
  ஆயினும்நம் அணித்தலைவர் பொருத பின்னர்
வேண்டுமெனில் அமர்புரிய வருவேன் நானே;
  வேறுபுனை பெயரோடு பொருது வெல்வேன். 374

படைகொண்டு வந்தவனோர் இளைஞன்; அந்தப்
  பாலனொடு மாவேழன் பொருதல் நன்றோ?
விடைவென்ற தோற்றத்தன் என்பேர் கேட்பின்
  வெலவெலத்துப் போராண்மை காட்டா தேகும்;
நடைகொண்டான் அஞ்சுமெனில் அவனு ளத்தே
  நல்வீரம் அணுவளவும் தோன்றா தன்றோ?
தடையின்றி அவன்திறமை முழுதுங் காட்டிச்
  சமர்செய்ய வேண்டுமென எண்ணங்கொண்டேன். 375

---

ஆண்டவனை—ஆண்டு+அவனை; ஆண்டு—அங்கே. விடை—காளை,

சிறுவீரன் பெருவீரங் காட்டிக் காட்டிச்
  செயிர்த்தெழுந்து புரிகின்ற கோல மெல்லாம்
உறுபோரிற் கண்ணுரக் காணல் வேண்டும்;
  உள்ளமெலாங் களிகொண்டு பொங்க வேண்டும்;
கறுவோடு பொருதவன்தன் ஆண்மை எல்லாம்
  காட்டியபின் நான்வெல்லும் ஆசை யாலே
மறுபேரால் பொர நினைந்தேன்; மாற்ருன் வீரம்
  மதிக்கின்ற பெருங்குணமும் வேண்டும் அன்ருே?' 376

எனுமொழிக்கு மதலேக்கோன் தலேய சைத்தே
  இசைவளித்தான்; மறுத்துரைப்பின் புலந்து மீண்டும்
சினமெடுத்துச் சென்ருலும் செல்வ னென்றே
  செய்வதொன்றும் அறியாமல் எழுந்து சென்ருன்;
தினவெடுத்த திண்டோளர் தருக்கி நின்று
  செயும்போரை எதிர்நின்று காண்பான் போல
முனமடுத்த இருளென்னுந் திரையை நீக்கி
  முகங்காட்டிச் செங்கதிரோன் எழுந்து வந்தான். 377

---

செயிர்த்து—கோபித்து. கறு—கோபம்.

## இயல் 86

**மாவேழன் பாசறையை வினவி நின்ற**
**மகன்றனக்கு வெண்கோடன் மறைத்துச் சொன்னன்.**

சிறையிலுறும் கோடனைத்தன் னுடன்கொண் டேகிச்
சேணுயரும் அரங்கேறிச் செம்மல் நின்று,
நிறைகளிறு சூழவுயர் பாடி வீடும்,
நெருங்கியதன் வலப்பாலே நிமிர்ந்து நிற்கும்
திரைவளையும் பாசறையும், அப்பால் ஓர்பால்
செந்நிறத்த படைவீடும், சுட்டிக் காட்டிக்
'குறைவறவே எவ்வெவர்தங் கூட மென்று
குறித்தெனக்கு விளங்கவுரை வீர இன்றே! 378

விடுதலைநீ வேண்டுதியேல் இதனைக் கூறு!
விலங்ககற்றி உனைவிடுப்பேன்' என்ற ளுக,
'நெடுமுடியன் மதலைக்கோன் தங்கும் பாடி
நீள்மருப்புக் களிறுபல சூழ்ந்த தாகும்;
அடுதொழிலோன் பெருவீரன் வேங்கை என்பான்
அதன்வலப்பால் தங்கியுளான்; அமைச்சன்சான்ருேன்
கெடுதலையே அறியாதான் நம்பி என்போன்
கெழுமுவது செந்நிறத்த கூடம்' என்ருன். 379

---

கோடன்—வெண்கோடன். சேண் உயரும்—மிகவுயர்ந்த.
செம்மல்—கோளரி.

‘கொடியுயர்த்தி ஆங்குளதே பச்சை வண்ணக்
கொட்டிலங்கே வைகுபவன் யாவன்?’ என்ன,
‘அடிபிடித்துச் சீனத்தன் தந்து சென்ற
அரியதொரு கூடாரம் ஆகும்; அங்குக்
குடியிருக்கும் வீரன்பேர் நினைவி லில்லை;
கொடுங்கூற்றம் அனையனவன்’ என்று சொன்னான்;
படிறுரைக்க முனைகின்றான் இவனென் றையம்
படருவதால் பைப்பயநாம் அறிவம் என்று, 380

‘பசுமையுடன் பளபளக்கும் பாடி வீடு
பணிவரிய மாவேழற் குரிய தன்றோ?
அசதியுனக் கழகாமோ? மொழிக’ என்ன,
‘ஆமாம்அப் பாசறையும் இதுவே போலப்
பசியதுதான்’ எனமழுப்பி நின்றா னங்கே;
பதுங்குகின்றான் உண்மைசொல எனவு ணர்ந்தோன்,
‘உசவுமெனக் குண்மைநிலை யுரைத்து, வீரன்
உறைவிடமுங் காட்டுதியேல் நன்றாம்’ என்றான். 381

‘யானுமவன் பாடியைத்தான் தேடு கின்றேன்
யாண்டுமது தோன்றவிலை; தன்ன கர்க்குப்
போனஅவன் இன்னுமிவண் வந்தா னல்லன்
போலுமெனக் கருதுகின்றேன்; வேழன் நெஞ்சில்
ஆனதுனி தணவாத கார ணத்தால்
அவ்வுழைநின் றகலாமல் இருத்தல் கூடும்;
கோனவனோ டடுத்தடுத்துப் பிணங்கி நின்று
குழப்புவது வழக்கம்’எனக் கூறி நின்றான். 382

---

படிறு—பொய். அசதி—மறதி. உசவும்—வினவும். துனி—பகை.
தணவாத—நீங்காத. உழை—இடம். கோன்—அரசன்.

## இயல் 87

**வெண்கோடன் மறைக்கின்ற குறிப்பைக் கண்டு
விடலையவன் பரியேறிச் சென்றான் அங்கே.**

நம்பகிலாக் கோளரியன் சிறித தட்டி
'நயவஞ்சம் மொழிந்திடுவோய்! உண்மை கூறின்
வம்புபடும் கலன்பலவாய்ப் பரிசில் கிட்டும்;
வாய்மறைத்தால் நின்னுயிரே போகும்' என்றான்;
'அம்புவிடு இப்பொழுதே! நின்பாற் சிக்கி
அலமருமென் னுயிர்போக அஞ்ச கில்லேன்;
வெம்புலியன் மாவேழன் பிழைத்தாற் போதும்;
மேவலர்பால் தாயகத்தைக் காப்பேன்' என்றான். 383

தந்தைபெயர் சொலக்கேட்டு நின்ற மீளி
தனிப்பகைவெண் கோடனுக்கோர் தீங்கும் செய்யான்,
உந்திவரும் ஆர்வத்தால் கவசம் பூண்டோன்
ஒப்பரிய வில்லேந்தி வாளுந் தாங்கி,
முந்திவரும் நடைப்புரவி ஏறி, நண்ணார்
முனைப்புலத்துப் பசியநிறப் பாடி நோக்கும்
சிந்தையொடு மிகவிரைந்து சென்றான் நேரில்
சென்றங்கு மெய்ம்மையெலாம்தெரிவான்வேண்டி. 384

---

வம்பு—புதுமை. கலன்—நகை. மீளி—கோளரி.

## இயல் 88

**கோளரி மதலைக் கோவின் பாசறை**
**பாழுறச் செய்தனன் ; பதறினன் மன்னன்.**

செலும்வழியில் மதலையுறை கூடங் கண்டான்;
சேர்துணையாம் இளவேலை மாய்த்த தெண்ணிக்
கொலும்நினைவால் அதைநோக்கிப் பாய்ந்தான்; அந்தக்
கோளரியின் கூக்குரலைக் கேட்ட வீரர்
கலமிழந்து, வேங்கையினைக் கண்ட மான்கள்
கலைந்தோடும் நிலைபோலச் சிதறிச் சென்றார்;
எலும்பதிர நகைத்தவனாய் வேந்தனைக்கண்
டெதிர்பொருதத் திறமிருப்பின் வருக' என்றான். 385

மன்னவனோ மறுமொழியோ புறத்து வாயில்
வாராத காரணத்தால் சினந்து செம்மல்,
'மன்னவனே நீயுமொரு கோழை' என்று
வலிகொண்டு வல்லீட்டி வீசி விட்டான்;
சின்னபின்ன மாகியது கூடம்; மன்னன்
செயலொன்றும் அறியானாய் அஞ்சி யோடி
ஒன்னலனை ஓட்டுதற்கு வேழன் தன்னை
ஓடோடி அழைத்துவரப் பணித்து நின்றான். 386

---

மதலை—மதலைக்கோ. இளவேல்—இளவேலன். கலம்—படைக்கலம். ஒன்னலன்—பகைவன்.

## இயல் 89

அறைந்தனன் ஏவலன் அரசன் ஆணை
விரைந்தனன் பரிமேல் இவர்ந்திடும் வேழன்.

கடிதினுனை வரப்பணித்தான் மன்னன் என்று
காவலன்வந் துரைத்ததனைக் கேட்டு வேழன்,
'முடிபுனையும் ஒன்றன்றிச் சிந்தித் தாயும்
முன்னறிவு சற்றுமிலான்; செய்த பின்னர்த்
துடிதுடிப்பன், எனையழைப்பன், என்றும் ஈதே
தொழிலானுன்' எனமுனகிப் புறத்தே வந்தான்;
படைமறவர் வெருண்டோடித் தவிக்கக் கண்டு
பரிமாவைச் சீற்றமொடு துரத்தி வந்தான். 387

போராற்ற வல்லாரும் அவனைக் கண்டு
புறங்காட்டி ஓடுகின்ருர் நில்லார் என்ருல்
பேராற்றல் கொண்டானைத் தவம்பு ரிந்து
பெற்ருனே பெற்ருனென் றுண்ம கிழ்ந்து
பாராட்டி வருவேழன் றன்னை நோக்கிப்
பகருமொரு படைமறவன், 'ஆண்மைப் பண்பே
நேராற்ற வந்ததுபோல் ஒருவன் ஆங்கே
நிற்கின்ருன் விழிப்புடன்நீ செல்க' என்ருன். 388

## இயல் 90

**தனயனும் தந்தையும் தரியல ராகி**
**முனைந்து பொருதனர் முதல்நாட் போரில்.**

வாளெடுத்த நாள்முதலா வெற்றி யென்ற
வரலாறே கற்றுயர்ந்த வேழன் இன்று,
தாளெடுத்து வைக்கின்ற சிறுமகற்கோ
தளர்ந்தொதுங்கிப் பின்செல்வன்? எதிரில் வந்த
கேளெடுத்து மொழிந்ததைஓர் பொருட்டாக்கொள்ளான்
கிளந்தவனை நகைத்தெள்ளி விரைந்து சென்றான்;
வேளெடுத்த கோளரியும் தன்னை நோக்கி
விரைந்துவரும் வீரனைக்கண் டுவகைகொண்டான். 389

களிறென்று பிளிறுதல்போல் ஒருவன் ஆர்த்தான்;
கடுஞ்சீயம் உறுமுதல்போல் சிறுவன் ஆர்த்தான்;
ஒளிறுபெரும் வாளெடுத்துத் தனித்துச் செய்யும்
ஒருசமரே தொடக்குதற்கு முனைந்து நின்று
களிறனைய பெருமகனும் கடுங்கட் சீயம்
கடுக்கவரும் ஒருமகனும் பொருத வந்தார்;
நளிருடனே பொரவருவோர் தம்முட் கொண்ட
நல்லுறவு யாதென்றே அறியார் அந்தோ! 390

---

கேள்—உறவினனாகிய வீரன். வேள்-மன்மதன். ஒளிறு- விளங்குகின்ற சீயம்—சிங்கம். கடுக்க—ஒப்ப. நளிர்—பகை.

## இயல் 91

**ஒருவரை ஒருவர் உணரா தெதிர்ந்தவர்
உருவையும் பொலிவையும் உவப்புடன் வியந்தனர்.**

பொருதொழிலைத் தொடங்குமுனம் களத்து நின்று
புதுவதுபோல் ஒருவரைமற் றொருவர் பார்த்தார்;
ஒருபெரிய வடிவமொடு நிமிர்ந்து நிற்கும்
உருக்குடலும் துதிக்கையெனத் திரண்டு ருண்ட
இருபெரிய நெடுங்கையும், பரந்த மார்பும்,
எழுகதிர்கள் இரண்டனைய விழிகள் தாமும்
குருமருவு விரிநுதலும், ஒளிமுகத்தில்
குவிந்தடர்ந்த சுருளணலும் இளைஞன் நோக்கி, 391

கண்டாலும் நடுக்குறுத்தும் தோற்றங் கொண்ட
களிறனையான் இவனன்றோ வீரன் ஆவான்
திண்டோள்கள் கொண்டிவனைப் பொருது வென்ற
திறலன்றோ திறலாகும்; தோல்வி ஒன்று
கண்டாலும் குற்றமில்லை; என்பே ராற்றல்
காட்டுதற்குத் தக்கானும் இவனே யாகும்;
விண்டாலும் இவன்தோற்றப் பெருமை எல்லாம்
விரித்துரைக்க இயலாது விளைந்து நிற்கும்; 392

---

குரு—ஒளி. நுதல்—நெற்றி. அணல்—தாடி. விண்டால்—சொன்னால்.

எனவியந்த கோளரியன் மனத்த கத்தே
இவனொருகால் நன்தந்தை வேழன் தானோ?
என நினைந்தான்; அவன்அணியும் கவச மில்லை;
இவன்வேறு பிறன்போலும் எனத்தெ ளிந்தான்;
கனவகத்தும் இவனைப்போற் கண்ட தில்லை;
கற்பனைசெய் தாயினும்நான் பார்த்த தில்லை
இனையபல வியந்தெண்ணி, ஆவ தாக!
எனக்கரிய வாய்ப்பொன்று கிடைத்த தென்றான். 393

இளவலுக்கு வாய்த்தஒரு வீரப் பாங்கும்,
எதிர்பொருவார் மனங்கவரும் எழில்வ னப்பும்,
பளபளக்கும் அவன்முகத்தில் தவழ்ந கைப்பும்,
பாய்ந்துவரும் அரிபோலும் அஞ்சா நோக்கும்,
களமுனைக்கு மதர்த்துவரும் பெருமி டுக்கும்,
கண்குளிரக் கண்டுளத்தில் மகிழ்ச்சி பொங்கும்
அளவினுக்கோர் எல்லையில்லை; வலிய வேழன்
அகமுருகி அவன்வயமாய் மொழிய லுற்றான். 394

மதர்த்து—செருக்கி

## இயல் 92

எழில்முகத்துப் பாலகன்நீ போர்தொடுக்க
ஏன்வந்தாய்? பிழைத்துப்போ! என்ருன் வேழன்.

‘பால்வழியும் எழில்முகத்துப் பால! இங்குப்
பற்றியுனைப் பொருதுகொல மனமே யில்லை;
ஏல்வலியை நீயெனினும் சிறுவன் அன்ருே!
யான்முதிர்ந்த பெருமறவன்; குருதி வெள்ளம்
வேல்வழியிற் பாய்ந்தோடக் களங்கள் கண்டேன்
வெண்பூதன் மடிந்தொழியப் பொருது வென்றேன்
சால்புடைய மறவர்குல மகனே! ஈன்ற
தாய்க்குரிய மகனுகப் பிழைத்துப் போபோ! 395

நான்பெற்ற மகன்போல உனை நினைத்தே
நவில்கின்றேன் நயவுரைகள்; கேளென் சொல்லை;
ஏன்பெற்ருய் இந்நிலையை? நாவலத்தான்
ஏவலுக்கோர் ஆளாகி மடிதல் வேண்டா!
வான்பெற்ற பிறகளங்கள் புக்கு நின்றன்
வாள்வலிமை காட்டியங்கு வென்றி கொள்க!
தேன்பெற்ற மொழியுனக்கு மனமிரங்கிச்
செப்புகின்றேன் சென்றுபிழை! செல்வா’ என்ருன். 396

---

ஏல்—(போருக்கு)ஏற்ற. வெண்பூதன்—மாவேழனல்கொல்லப்பட்ட பெருவீரன்.

## இயல் 93

மாவேழன் யாவனென வினவி நின்ற
மகனிடமே உண்மைநிலை மறைத்தான் வேழன்.

'மனமிரங்கி இனியவுரை தந்தாய்! உண்மை
மறைப்பின்றி எனக்குணர்த்த வேண்டு கின்றேன்;
முனமிருந்தே உயர்ந்தமறக் குடியின் வந்த
மொய்ம்புடைய மாவேழன் யாவன்? தோளில்
தினவுயர்ந்த அப்பெருமான் உறைதல் யாங்கோ?
செய்தியிது தெரியுமவா மிகுதி கொண்டேன்;
எனதுமனம் மகிழவரும் அண்ணல்! சற்றே
இளகியருள் புரிகவெனக்' கெஞ்சி நின்றான். 397

கெஞ்சுமுரை கேட்டிருந்த வேழன் 'ஆம்ஆம்
கேட்டாரும் நடுநடுங்கும் வீரங் கொண்ட
நெஞ்சுடைய மாவேழன் ஒருவன் உள்ளான்;
நெடியவன்பாற் பயின்றவன் நான்; என்னை வென்று
விஞ்சியபின் நீஅவனைக் காண லாகும்;
விழைந்ததெது? நின்னுயிரா போரா?' என்றான்;
வெஞ்சமரன் வேழனிவன் என்ற எண்ணம்
வீணாகித் தளர்ந்திளவல் போரே என்றான். 398

---
தினவு உயர்ந்த—போர்ச் செருக்கு மிகுந்த

## இயல் 94

**போர்வேண்டா எனமீண்டும் சொன்னான் வேழன்**
**புலியனையான் இசைந்திலன்;போர் தொடங்கிற் றன்றே.**

'முகில்தழுவ நெடிதாக உயரக் கட்டி
முடிந்துநிற்கும் கோபுரம்நான்; என்னைக் கண்டு
திகில்தழுவ நிற்கின்றாய்! நீயோ கொட்டிக்
கிடக்கின்ற செங்கலடா; சிறியோய் உன்னை
உகிர்முனையால் வகிர்ந்தெனது விரல்க ளுக்கே
ஒருகளங்கம் விளைவிக்க விழைய வில்லை;
துகிரனைய உன்னுடலைத் துண்டம் செய்யத்
தோளுக்கும் வாளுக்கும் எண்ணம் இல்லை. 399

ஆதலினால் ஓடிவிடு வீடு நோக்கி
அருஞ்சமரம் விட்டொழிக' என்றான் வேழன்;
'மோதலினால் உயிர்விடுவோர் யாவர் என்று
முனைவதன்முன் முடிவுசெய விரைந்தாய் வீர!
சாதலினால் அஞ்சுமனம் உடைய வர்க்குச்
சமரகத்து வேலைஎன்ன? உண்மை ஒன்றை
ஓதினை நீ முடிந்துவிட்ட கோபு ரந்தான்;
உன்கதையும் முடிந்ததென உணர்வாய் இன்றே. 400

---

உகிர்—நகம். துகிர்—பவளம். சமர்—போர்.

உரமிருப்பின் வாய்வீசேல்; வாளை வீச
உருவிஎழு! பேச்செதற்'கென் றிளவல் சொன்னன்;
பொரநினைத்த மாவேழன் வாளெ டுத்தான்;
புதல்வனெனத் தந்தையென அறியா ராகி
மறமடுத்துத் தினவெடுத்து வலிமை கொண்டு
மாமடங்கல் இரண்டுடன்று பொருவ தென்னக்
குரலெழுப்பித் திறலெழுப்பிப் பொருதா ராங்கே
குழுமிவரும் வீரரெலாம் வியர்த்து நின்ருர். 401

மடங்கல்—சிங்கம். உடன்று—சினந்து.

## இயல் 95

புகுபோர் தனில் கொலைவாள் கொடு
பொருதார் பகை மிகவே.

வாள்சுழற்றும் வித்தகமும், பின்னும் முன்னும்
மாறிவந்தே ஒருவருடன் ஒருவர் மோதித்
தாள்பெயர்த்துச் சுழன்றுவரும் விரைவும், கட்கம்
தாக்கிஎழும் தீப்பொறியும், கேட யத்தால்
வாள்தடுத்துத் திரிகின்ற விறலும், கையை
வாய்வைத்து வியந்தங்கே கண்டு நின்றார்;
கோள்வளர்க்கும் பொருசமரில் வெற்றி தோல்வி
கொள்பவரார்? எனவறிய வல்லா ரில்லை! 402

வளர்ந்துவரும் பகைக்களத்தில் வலிமை கொண்டு
மற்றவர்க்குத் தந்திறமை காட்டும் வீரர்
தளர்ந்தறியா வாளிரண்டுஞ் சுழற்றி வீசித்
தாக்குவதால் வாய்மழுங்கிப் பற்கள் கொண்டு
விளைந்தபுலக் கருக்கரிவாள் போல மாறி
விட்டதனால் விட்டெறிந்து, வேல்கள் தாங்கிக்
களந்தனிலக் கடுமறவர் ஏற்றங் கொண்டு
கதக்களிறு பொருவதெனக் கலந்து நின்றார். 403

---

கட்கம்–வாள். விறல்—திறமை. கோள்—கொலை. கதம்–கோபம்,

## இயல் 96

தண்டும் வேலும் கொண்டுபோர் புரிந்தவர்
தண்புனல் வேட்டுத் தனித்தனி ஒதுங்கினர்.

ஈட்டியினைத் தாங்கியவர் புரவி ஏறி
இடப்பக்கம் வலப்பக்கம் மாறி மாறி
வேட்டமுறு வேங்கையெனப் பொருது வந்தார்;
வீரரெலாம் வியந்தஞ்சி ஒதுங்கி நின்றார்;
கோட்டைவிடும் இவனென்பர் ஒருசார் நின்றார்;
கொன்றுவிடும் அவனென்பார் மறுபால் நின்றார்;
காட்டலுறும் வலிமையெலாங் காட்டி நின்றார்
கையீட்டி வாய்பிளந்து நொறுங்கக் கண்டார். 404

தண்டெடுத்துக் கொண்டெழுந்தார் தாவித் தாவித்
தாங்கரிய திறலோடு மோதி மோதிப்
பண்டுரைத்த போர்முறைகள் அனைத்துங் காட்டிப்
பரந்துபடத் துகளெழுப்பிக் கவச மெல்லாம்
விண்டவற்றின் முகம்பிளக்க, உடல மெங்கும்
வியர்வையொடு செங்குருதி கலந்து பாயக்
கண்டதற்குந் தளராமல் உடன்று நின்றார்;
கடும்புரவி ஆற்றாமல் களைத்து நின்ற. 405

---

தண்டு—கதைஎன்னுங்கருவி. விண்டு—பிளந்து.
உடன்று—சினந்து. நின்ற—நின்றன.

இடையின்றிப் பொருதமையால் இருவர் நாவும்
ஈரமொரு சிறிதுமிலா துலர்ந்து போகப்
படைகொண்ட மறவர்புனல் வேட்கை கொண்டு
பரிவுடையர் ஆகினரால் வெய்து யிர்த்துத்
தொடைகொண்ட அகலங்கள் எழுந்தெழுந்தே
தோன்றுபெரு மூச்சினராய் வாய்மடித்து
நடையின்றித் தனித்தனியே ஒதுங்கி நின்ருர்;
நண்பகலில் பிறமறவர் பதைத்து நின்ருர். 406

புனல்—நீர். வெய்துயிர்த்து—பெருமூச்சுவிட்டு. அகலம்—மார்பு.

## இயல் 97

**கோளரியை மாவேழன் வியந்து நிற்கக்
கொடுவிற்போர் புரிகவென அழைத்தான் காளே.**

'பார்முழுதுங் களங்கண்டேன் வென்று வந்தேன்
பலரோடும் பொருதிருந்தேன்; அடஓ இந்தப்
போர்முனையில் நேர்பொருதும் முறுவற் காளே
போலொருவர் கண்டதில்லை இன்று காறும்;
வார்முரசம் அதிர்களத்தில் அஞ்சா வீரன்
வாள்வலியும் தோள்வலியும் சிறக்கக் கண்டேன்;
வேர்வையுறும் முகப்பொலிவும் என்னே!' என்று
வேழன்தன் மனத்தகத்துள் வியந்து நின்றான். 407

விரல்கொண்டு நுதல்வியர்வை துடைத்துக் காளே
வேறுபெயர் கொண்டுடன்ற அவனை நோக்கி,
'விறலுண்டோ மறுமுறையும் முறுக்கு தற்கு?
வீரவுளங் கொண்டனையேல் இனிநி கழ்த்தும்
உறங்கொண்ட பெரும்போரில் வில்லை ஏந்தி
உனதாண்மை காட்டுகநீ! இன்றேல் தோற்றுப்
புறந்தந்தாய் என்பதற்கோர் இசைவு காட்டு!
போர்மறவ! விரைந்தொன்று புகல்க' என்றான். 408

---

முறுவல்—புன்னகை. நுதல்—நெற்றி.

## இயல் 98

விற்போர் முடித்து வீரர் இருவரும்
மற்போர் விளைத்தனர்; மாலையில் களைத்தனர்.

சீற்றத்தால் ஆர்த்தெழுந்த வேழன் நீண்ட
 சிலையொன்றைக் கைக்கொண்டான்; சினந்தெழுந்த
தோற்றத்தான் கோளரியும் வில்லெடுத்தான்;
 சோவெனப்பெய் மாரியைப்போல் அம்பு பெய்தார்;
ஆற்றத்தாம் எய்தவெலாம் முறிந்து வீழ,
 அடற்புரவி விட்டிறங்கித் தமது தோளின்
ஏற்றத்தால் மற்போரைத் துவக்கி விட்டார்;
 இருபாலுங் குவிந்திருந்தோர் ஆர்ப்பரித்தார். 409

புலியேறு பொருவதெனப் பாய்ந்து தாவிப்
 போயிருவர் உடல்பற்றிப் பொருதுங் காலை
வலியோடு பொருபவர்தாம் மேலுங் கீழும்
 வருவதும்பின் போவதுமாய்ப் புரண்டிருந்தார்;
மலைவாருள் இவன்மேலா அவன்தான் மேலா
 மதிப்பிட்டுச் சொலமுடியா நிலையரேனும்
நிலையாக இவ்வமரில் இரண்டிலொன்று
 நிகழ்ந்துவிடும் எனநினைந்தார் சூழ்ந்த வீரர். 410

---

சிலை—வில். மலைவார்—போர்செய்வோர்.

தரைமுழுதும் வீழ்ந்ததிரப் புரண்டும்
தாளொடுதாள் பிணைந்துமிரு தோள்கள் பற்றி
விரைசெறியும் அகலத்தில் அறைந்தும் மோதி
வீறுகொடு பெருமுழக்கஞ் செய்து கூவிப்
பொருதகர்போல் பின்பெயர்ந்து பதுங்கி மீண்டும்
புலிபோலப் பாய்ந்துடன்று மாலைப் போழ்து
வரைபொருது நெடிதுயிர்த்துக் களைத்துச் சற்றே
மலைவின்றித் தனிமையினில் ஓய்வு கொண்டார். 411



---

அகலம்—மார்பு. தகர்—கடா. மலைவு—போர்.

## இயல் 99

எறிதண்டு தாக்குறவே நிலைத்தான் வேழன்;
இன்றுபோய் நாளைவா என்றான் காளை.

இனிமுடிவு காணுதலே இனிதென் றெண்ணி
எழுமுணர்விற் கோளரியன் தண்டெ டுத்துத்
தனிவலிவு கொண்டதனைச் சுழற்றி, அங்குத்
தருக்கிவரும் வேழன்றன் தலையை நோக்கி
முனிவுகொடு குறிதவறு தோங்கி வீச
முழுவலியன் தடுக்குமுனம் தாக்கிற் றங்கே
நனிவிழுந்த அடிதாங்க இயலா னாகி
நடுமரம்போல் நிலைத்துவிட்டான் தோலா வேழன். 412

'வெற்றிக்கே முழுவுரிமை பேசி வந்த
வீரத்தின் குலமகனே! நிலைத்து நின்ற
பெற்றிக்குக் காரணமென்? போது மென்ற
பெருமனமோ? அடிபட்ட நாணந் தானோ?
முற்றுற்ற கோபுரமே! செங்க லுக்கு
முன்னிற்க மனமிலையோ? வீர மெல்லாம்
வெற்றுக்குப் பயன்படுத்த வேண்டா என்று
விழைந்தனையோ? முதுமகனே எண்ண மென்ன? 413

முனிவு—கோபம். பெற்றி—நன்மை.

தேர்ந்தபெருங் களங்களெலாம் வென்று வந்த
திறலெங்கே? கொண்டுவந்த தோள்கள் எங்கே?
சேர்ந்தஉன தருஞ்செயல்கள் வலிமை எல்லாம்
செப்பியநல் வாயெங்கே? சிறுவன் என்பால்
நேர்ந்திளகிக் கசிந்துருகும் நெஞ்ச மெங்கே
நிலையாக நிலைத்தனவே அனைத்தும் ஒன்றாய்!
ஓர்ந்துனது நிலைமைஎனக் குரைத்தல் நன்றாம்
உரை நடையால் உயர்வீர!' என்றான் செல்வன். 414

கோளரியன் பொடிவைத்து மொழிந்த வெல்லாம்
கூர்விழியன் கேட்டிருந்து, 'வீரச் செல்வ!
நாளையினிப் பொரவருவோம்; மாலை வேளை
நண்ணியதால் சமர்நிறுத்திப் பிரிந்து செல்வோம்;
ஏளனமேன்? மறுநாளே முடிவு காண்போம்'
என்றுரைத்தான் மாவேழன்; 'இன்று சென்று
வாளொடுநீ வா நாளை' எனமொ ழிந்தான்
வாய்மைமிகு போர்முறைகள் தேர்ந்த செம்மல். 415

---

உரை நடையால்—பேச்சால்.

## இயல் 100

போர்த்திறங் கண்டோர் புகன்றனர் பலமொழி
வேர்த்துளம் தளர்ந்து வேழன் நடந்தனன்.

மலைந்தமுறை நிகழ்ந்தமொழி அனைத்தும் அங்கே
வளைந்திருந்து வியப்புடனே கண்டு கேட்டுக்
கலைந்துசெலும் வீரரினம், இளவ லின்று
காட்டியநல் லாண்மையையும், வேழன் போரில்
குலைந்ததையும் தனித்தனியே பேசிச் சென்றார்;
கொடுஞ்சமரில் நாளையிவர் கூடுங் காலை
மிலைந்துகொளும் வாகையினை இளைஞன் தானே
மேவுவது திண்ணமெனச் சொன்னார் ஓர்பால். 416

'திசையனைத்தும் வென்றியொன்றே கண்டு வந்த
திறலனுக்கோ இந்தநிலை வந்த திந்த
வசையினைத்தான் கேட்பதற்கோ இன்று வந்தேன்;
வாடியவன் செல்கின்றான் அந்தோ!' என்று
மிசையனைத்தும் கண்டிருந்த கதிரோன் துன்பம்
மிடைந்துவரும் நெஞ்சினனாய் மறைந்து சென்றான்;
குசைமடுத்த புரவிமிசை ஏறிச் செல்லான்
குனிந்ததலை நிமிர்ந்திலனாய் நடந்தான் வேழன் 417

---

மிலைந்து—சூடி. வாகை—வெற்றி மாலை. மிசை—மேலிருந்து.
குசை—கடிவாளம்.

## இயல் 101

**வாட்டமுடன் வரும்வேழன் வேந்தற் கண்டு
வலிமைமிகு கோளரியின் திறம்வி யந்தான்.**

திரும்பிவரும் மாவேழன் வேந்தற் கண்டு
தெறுசமரில் நடந்தவெலாம் விளங்கச் சொல்வோன்
'இரும்பனைய இளவலைப்போல் இந்நாள் மட்டும்
எக்களத்தும் கண்டதிலை; அஞ்சா வேங்கைப்
பெரும்புலியின் வீரமொடு வலியும் யாண்டுப்
பெற்றனனோ? குன்றினையும் அசைக்கும் என்றன்
அரும்புயங்கள் அம்மகனை அசைக்க கில்லா
தயர்ந்தனவே! வீரனென்றால் அவனே வீரன். 418

ஈர்த்திழுத்துப் புரவியினின் றவனைத் தள்ள
எத்தனையோ முறைமுயன்றும் இயல வில்லை;
பேர்த்துமொரு போர்விளைக்கக் குறித்து வந்தேன்
பிள்ளையுடன் பொருதுவரச் செல்வேன் நாளை;
ஆர்த்துவரும் அவன்பிள்ளைப் பருவ மேனும்
அடலரியின் திறமுடையான்; வெற்றி தோல்வி
யார்க்குவரும் என்றுணர இயல வில்லை;
எனினும்போர் புரிந்திடுவேன் மன்ன'என்றான். 419

---

தெறு—அழிக்கின்ற. அடல்அரி—வலியசிங்கம்.

புகுகின்ற களமெல்லாம் வாகை கொண்டேன்
  புகழ்நிறுவ அவைதாமே சாலும் சாலும்;
மிகுகின்ற வலியுடைய வீர னேனும்
  மேலொருநாள் இவ்வுலகில் மாய்தல் திண்ணம்;
நகுகின்ற சாவினைத்தான் தடுக்க வல்லார்
  நானிலத்தில் எவருமிலர்; என்னை விஞ்சிப்
புகுகின்ற அன்புணர்வோ ஏதோ ஒன்று
  புரியாமல் என்னுளத்தை அலைக்கக் கண்டேன். 420

என்றுழலும் நெஞ்சினனாய் வேழன், தன்னோ
  டிணைந்துவரும் ஒருமறவற் கூவி 'நாளை
நின்றுபுரி சமர்தன்னில் படையைக் கூட்டி
  நிரல்நிறுத்து! நான்வெற்றி கொள்வே னாயின்
துன்றிவரும் மகிழ்ச்சியினால் இன்பக் கண்ணீர்
  துளிக்கட்டும்; வீழ்ந்துபட நேரு மாயின்
கன்றிவரும் புனல்விழியர் நிற்போர் தம்மைக்
  கடுகிஅழைத் தேகுகநம் நாட்டுக்' கென்றான். 421

நிரல்—வரிசைப்பட. புனல்—(கண்)நீர்.

## இயல் 102

**என்னுடன்போர் புரிந்தவனு வேழன் என்ற**
**இளவலுக்கு மாவலியன் மறைத்து ரைத்தான்.**

படைவீடு புகுந்தடைந்த இளவல் போரில்
 பாய்ந்துபொரும் மாவீரன் வலிபு கழ்ந்து,
விடைபோலும் மாவலியை விளித்துத் தன்பால்
 'வெஞ்சமரம் புரிந்தோன்அவ் வேழன் தானே?
மிடையாத முனமவனைச் சொல்லக் கேட்ட
 மேன்மைஎலாம் இவனிடத்தும் விளங்கக் கண்டேன்;
அடையாளம் நீயறிவை அறிந்தி ருப்பின்
 அன்பஎனக் கறிவிப்பாய் இன்றே' என்ருன். 422

பெருங்கனகன் சூழ்மதியால் துணைபோ லிங்குப்
 பின்வந்த மாவலியன் உண்மைச் செய்தி
தருங்கருத்தொன் றிலனுகி மறைத்துச் சொல்வோன்
 'தருக்கொடுநின் னுடன்பொருதோன்வேழன் அல்லன்;
மருங்கிருந்து கண்டுள்ளேன் அவனைப் பல்கால்;
 மலையுமிவன் சிலகுறியால் அவன்போ லுள்ளான்;
பெருங்களிற்றின் அனையானுக் கின்று வந்த
 பெரியவன்ருன் இணையாமோ?' எனப்ப கர்ந்தான். 423

---

விடை—காளை. மிடையாத—போர்செய்யாத.

## இயல் 103

**மறுநாள் போர்செய வந்தமா வேழனை
உரவோய்நீ யாரென உசாவினன் கோளரி.**

இன்றேனும் மாவேழன் வலிமை காண்போம்
என நினைவான் போலெழுந்தான் கதிரோன் வானில்;
என்றேனும் களரிதனில் தளர்வு காணு
ஏற்றமுறு மாவேழன் வந்து நின்ருன்;
நின்ருனைக் கண்டாற்கு முன்னுள் போல
நெகிழ்ந்துள்ளம் பரிவுகொள அருகிற் சென்று
'குன்றேறு போல்நிற்கும் முதியோய்! உண்மை
கூறிவிடு! போர்வேண்டா; யார்நீ வீர! 424

எனைமீறி உன்பாலோர் அன்பு கொள்ள
எழுமுணர்வை மனத்துடிப்பை அறியாய் ஐய!
முனைவேழன் எனப்படுவோன் நீயோ? இன்றேல்
முதுமையுறும் நின்பெயர்தான் யாதோ? வீணில்
புனைபேரால் ஏமாற்ற முனையேல்! உண்மை
புகலுதியேல் வீண்போரே நமக்குள் இல்லை;
தினையேனும் பகையின்றி நண்ப ஞவேன்;
செப்புதிநீ யாவ'னென வணங்கிக் கேட்டான். 425

---

களரி—போர்க்களம். புகலுதியேல்—சொல்வாயானல்.

## இயல் 104

யாவன் நீயெனக் கோளரி வினவக்
கூவினன் போர்செயக் கூறிலன் மெய்யே

இளமகனை மாவேழன் மேலுங் கீழும்
ஏறிட்டு நோக்கியிவன் யாவ னேவென்
றுளம்நினைந்து, நெருநலொரு தண்டால் தாக்கி
உரைத்ததையே நினைத்ததனல் கறுவு கொண்டு,
களமதனில் பழிவாங்கும் நினைவால் உண்மை
கழறமனம் இலனுகிப் புனைபேர் கொண்டே
களரிபுக நினைந்தனன்;தான் பெற்ற பிள்ளை
கண்டறியான்; பெண்ணெனவே நினைவுகொண்டான்.

'விளையாட்டுப் பருவத்தோய்! பொருவ தற்கு
வேழன்தான் வேண்டுதியோ? என்னை வெல்லின்
உளையாட்டி வரும்புரவி ஏறி நின்முன்
உலவிவரும் வீரனை நீ காண லாகும்;
பிளைநேற்றுப் பொருள்செறித்து நவின்ற பேச்சுப்
பின்னளில் மாறியதேன்? என்னல் நேரும்
விளைவேற்க அஞ்சினையோ? நயந்து பேசும்
வேளையன்று போர்விளைக்கும் நேரம்' என்ருன். 427

கறுவு—நீங்காக் கோபம். கழற—சொல்ல. உளை—பிடர்மயிர். பிளை—பிள்ளை.

## இயல் 105

மற்போரில் பாவேழன் தோற்ருனுக
மனமறிந்த பொய்சொல்லித் தப்பிச் சென்ருன்.

'தோற்றத்தால் களிறனையோய்! இளகி நின்று
தொழுதுன்னைக் கேட்டவெலாம் உண்மை; ஆனுல்
மாற்றித்தான் பொருளுணர்ந்தாய்! அஞ்சிச் சாகும்
மரபன்றே என்மரபு! வீர மூட்டும்
சோற்றைத்தான் பாலைத்தான் எனக்குத் தந்தார்;
சொற்றவணம் போர்தொடங்கும் வேளை, யிங்கு
மாற்றத்தாற் பயனில்லை; எழுக வீர!
மற்போரில் ஒருமுடிவு காண்போம்' என்ருன். 428

இருவருந்தம் புரவியினின் றிறங்கிப் பற்றி
இருநிலத்தின் மிசையெங்கும் புரண்டு ருண்டு
செருமிடைந்தார்; வியர்வைஎலாம் நிலத்தில் வீழச்
செம்புழுதி உடலெங்குந் தோயக் கண்டோர்
வெருவுறவே மேல்கீழாய் மலைந்தி ருந்தார்;
மிகுபொழுது பொருதிருந்தும் முடிவே யில்லை;
முறுவலனவ் வேழனிடைக் கச்சை பற்றி
முழுவலியோ டிழுத்தவனைச் சுழற்றித் தள்ள, 429

---

மாற்றம்—பேச்சு. மலைந்து—போர் செய்து.

பொத்தெனவே மணற்பரப்பில் வீழ்ந்தான் வேழன்;
புலிப்போத்துப் போலிளவல் பாய்ந்து சென்று
கத்துகுரல் யானையின்மேற் சிங்கம் என்னக்
கடுங்கண்ணன் அகலத்தில் அமர்ந்து கொண்டு
குத்துடைவாள் தனை எடுத்துக் கையை ஓச்சக்
'கொலைபுரியேல்! பொறுமகனே! ஒருகால் தோற்பின்
எய்த்தவனை விடுவதன்றிக் கொன்றொழித்தல்
எம்நாட்டின் விதியன்று; தெரிந்தா யல்லை! 430

மறுமுறையும் தோற்பவரே இறத்தல் வேண்டும்
மதித்திதனை எனைவிடுப்பாய் மகனே' என்றான்;
உருகுமுளங் கொளுமிளைஞன் முதியன் சொல்லை
உண்மைஎன நம்பியதாற் கொலைவி டுத்தான்;
கருணைமறங் கொண்டவர்க்குக் கடமை யீதாம்;
காளையிவன் தோற்றவனைச் செலவி டுத்தான்;
'மருவியுள முதுமைக்கும் சொற்கும் இன்றே
மதிப்பளித்தேன் போநாளை வா'வென் றானல். 431

---

அகலம்—மார்பு.

## இயல் 106

பொய்த்தவன் தலையைப் போரில் நாளைப்
பிய்த்தெறி வேனெனப் பேசினன் காளை

பொருதுவரும் மாமல்லன் தனது பாடி
புக்குறைந்து நடந்தவெலாங் கூறக் கேட்ட
வருமுதவித் தடவலியன் பதறி நின்று,
'வலைவீழ்ந்த புலியினையோ அவிழ்த்து விட்டாய்
கறுவிவரும் மாவீரற் கொல்லா திங்குக்
கருணைசொலித் திரும்புதியால் முறையோ மைந்த!
வெருவியவன் உரைத்தவிதி யாண்டும் இல்லை;
வீழ்ந்தனை நீ அவன்மொழிந்த வஞ்சப் பேச்சில். 432

கையகத்துக் கிட்டியதை வாய்க்குக் கிட்டக்
கருதாமல் ஏமாறி வந்தாய்! வஞ்சப்
பொய்யகத்தன் தப்பினனல்' எனப்பு கன்றான்;
'போயினென்ன போகட்டும்; வீரன் நாளைச்
செய்யமர்க்கு வரும்பொழுது யானுங் காண்பல்;
சிறிதளவுங் கவலற்க; தலையைப் போரில்
கொய்தகற்றிப் பழிதீர்ப்பல் விரைவில்; நாளைக்
கொடும்போர்க்கு முடிவொன்று செய்வல்' என்றான். 433

பாடி—பாசறை.

## இயல் 107

**தோல்வியினுல் மனமுடைந்து வேழன் மீண்டான்;**
**தோற்றவன்றன் நிலைக்கிரங்கி மறைந்தான் வெய்யோன்.**

நடித்துரைத்த பொய்ம்மொழியால் தப்பி வந்த
நாடறிந்த மாவேழன் மனமுடைந்து,
'வடித்தெடுத்த படைக்கலங்கள் பெற்றிருந்தும்
வட்கார்முன் சிறுவனுக்குத் தோற்று விட்டேன்
படித்தலத்தில் வாழ்வதினும் இறத்தல் மேலாம்;
பாருலக வீரனெனப் பேர்பெற் றென்ன?
வடிப்புடுத்த அவன்முகத்தைக் காணுங் காலை
வலிமைஎலாங் குறைந்துபடக் காண்கின் றேனே! 434

சாய்ந்துபடும் கதிரவனே! இந்நாள் மட்டும்
சமர்முனையில் என்றேனும் சாய்ந்த துண்டோ?
காய்ந்திடினும் சாய்ந்திடினும் யாரும் நின்னைக்
கடிவதிலை வணங்குகின்ருர்; சிறுமகற்குச்
சாய்ந்தவெனை யார்புகழ்வர்? இகழ்வ ரன்ருே?
தாங்ககிலேன் இவ்வீழ்ச்சி' எனநினைந்து
பாய்ந்துவரும் புனல்மூழ்கித் தனது மெய்யிற்
படிந்ததுகள் கழுவியபின் பாடி புக்கான். 435

---

வட்கார்—பகைவர். வடிப்புடுத்த—அழகுபொருந்திய. துகள்—தூசி.

வாடிவரும் வீரனுரை கேட்ட வெய்யோன்
'மாவேழன் தனதுடலில் படிந்த மாசை
ஓடிவரும் புனலகத்துக் கழுவிக் கொண்டான்;
ஒப்பரிய வீரத்திற் படிந்த மாசை
ஓடிவிடச் செய்வானே? அந்தோ! நாமே
உலகறிய வொண்ணுமற் செய்வோம்' என்று
மூடிவரும் இருளென்னும் திரையை யிட்டு
மூழ்கினன்போய் மேற்புறத்துக் கடற்ப ரப்பில். 436

## இயல 108

மூன்றும் நாளும் முழுவலி யோடவர்
என்றுடன் பொருதனர் எதிரெதிர் நின்றே.

கதிரோனும் மாவேழன் தானும் ஒன்றாய்க்
கண்விழித்தார் புதுப்பொலிவு கொண்டு நின்றார்;
எதிராக வருவோர்தம் கண்கள் கூச
என்றுமிலா எழிலோடு விளங்க நின்றார்;
முதிராத இளையோனும் முதியன் றானும்
மோதுபுலம் வந்தடைந்தார்; தன்னை முன்னாள்
அதிராமல் பொய்ம்மைசொலி ஏய்த்த தெண்ணி
அடலேறு மிகக்கனன்று நோக்கி நின்று, 437

'அணல்சுருளும் கதுப்புடையோய்! முதல்நாள் நின்றன்
ஆற்றலிற்றான் தளர்வுகண்டேன்; நெருநல் என்றுந்
தணவரிய வாய்மையிலும் தளர்வு கண்டேன்;
தகுமுறையில் புளுகஇனி என்கொ ணர்ந்தாய்?
குணமிலையால் உனையின்று கொல்வ தன்றிக்
கொடுபோக உன்னுயிரை விடுதற் கொவ்வேன்;
மணல்விழுந்த இருமுறையும் கொல்லா துன்பால்
மறக்கருணை காட்டியது போதும்' என்றான். 438

அதிராமல்—நடுங்காமல். அணல்—தாடி. கதுப்பு—கன்னம். நெருநல்—நேற்று. தணவரிய—நீங்காத.

இளங்காளை முகங்கண்டு முன்போல் நெஞ்சம்
இளகாமல் மும்மடங்கு வலிமை கொண்டு,
'களங்காண வந்தோய்நின் இளமை தன்னால்
கடுகளவும் அஞ்சாது, நிலைமை யொன்றும்
விளங்காது முழங்குகிறாய்! கிழவன் என்று
விளம்புகிறாய்! உனையழிக்கும் கிழவன் நானே;
துளங்காதே! இன்றுனது வலியும் வாழ்வும்
தொலைப்பதற்கே வந்துள்ளேன் வாவா' என்றான். 439

முன்னையிரு நாளையினும் காணாப் போரின்
முறையெல்லாம் மொய்ம்புகொடு பொருது நின்றார்;
தன்னையொரு சிறுமகனே வெல்வ தென்று
தாங்ககிலா ஆற்றலொடு மலைந்தான் வேழன்;
பன்னரிய நெஞ்சுரத்துப் பாலன் இன்று
பழையவனை விடுவதில்லை என்று டன்றான்;
கன்னமொடு கைசேர்த்துக் கண்வி ழித்துக்
கலக்கமுடன் சூழ்மறவர் கண்டு நின்றார். 440

பெருமறவன் சிறுமகனை மார்பில் தாக்கிப்
பிறழ்ந்துவிழச் செய்துவிட்டான்; எழுந்த காளை
உறுவலியால் அவனிருதோள் பற்றிக் கொண்டான்;
உந்திஎழும் மாவீரன் உதறித் தூக்கி
மறுமுறையும் எறிந்துவிட்டான்; மீண்டும் நின்ற
மனவலியன் இருதோளும் ஓச்சி வந்தான்;
உறழ்புலிபோல் பாய்ந்தோடி அவனைப் பற்ற
உருண்டுருண்டு பொருதிருந்தார் சிங்கம் அன்னார். 441

பழையவனை—முதியனாகிய வேழனை. ஓச்சி—ஓங்கி.
உறழ்—பகைகொண்ட.

## இயல் 109

**தந்தைபெயர் கேட்டவுடன் மலைத்து நின்ற**
**தனிமகனை மாவேழன் தாக்கி விட்டான்.**

இருவரும்பின் தனியெழுந்து கூர்ந்து நோக்கி
இருமருங்கும் கையுயர்த்திச் சுற்றிச் சுற்றி
வருபொழுது மாவீரன் சீற்றம் பொங்கி
வழக்கம்போல் மாவேழா என்று கூவப்
பொருவமரில் தந்தைபெயர் கேட்ட காளை
பூரித்து மலைத்தங்கு நின்று விட்டான்;
பெருங்களிறன் வலிகொண்டு பாய்ந்து தள்ளிப்
பிள்ளையிளம் மார்பகத்தே ஏறி நின்ருன். 442

நொடிப்பொழுதும் தாழ்த்தவிலை உடைவாள் கொண்டு
நுடங்கரிய மருமத்தே பாய்ச்சி விட்டான்;
வெடிப்புடைய இளங்காளை அவனை நேற்று
வீழ்த்தியபோழ் தவனுரைத்த விதிம றந்தான்;
கடுப்புடைய மாவேழன் மைந்தன் என்று
காணுமல் உறவுமுறை அறுத்தெ றிந்தான்;
துடிப்புடையன் மார்பிலது பாய்ந்த தாலே
சோர்ந்துதரை வீழ்ந்துபல கதறு கின்ருன். 443

---

மருமம்—மார்பு.

## இயல் 110

**எனைப்பெற்ற மாவேழன் அறிந்தால் நின்னை**
**ஈர்ந்தெறிவன் தப்பிவிடு என்றான் காளை.**

'நயவஞ்சப் பேருருவே! பொய்ம்மை ஒன்றே
  நாடுகின்ற கிழப்புலியே! நேற்று ரைத்துப்
பயனடைந்த விதிஎங்கே? ஓடி யின்று
  பதுங்கியதோ? தனக்கொன்றும் மற்றோர்க் கொன்றும்
செயவந்த விதிமுறையோ உனது நாட்டில்?
  செய்யாத செயல்செய்தாய்! வீரம் ஈதோ?
கயமுவந்து பழிபுரிந்தாய்! தந்தை பேரைக்
  கழறினை நீ! நான்மலைத்தேன் வீழ்த்தி விட்டாய்! 444

எனைப்பெற்ற தந்தையைநான் தேடித் தேடி
  இளைத்திருந்தும் உயிர்விட்டுங் காண கில்லேன்;
முனைப்புற்ற மாவீர! என்னைக் கொன்ற
  மொழிகேட்பின் மாவேழன் எனக்குத் தந்தை
நினைச்செற்றுத் தொலைத்தழித்தே அமைவன்; இன்றே
  நிற்கின்ற களம்விட்டுத் தப்பி ஓடு!
சினப்புற்றான் முனைந்தெழுமேல் பாத லத்துச்
  சென்றுறினும் விட்டுவிடான் வந்தே கொல்லும். 445

---

கயம்—கீழ்மை. சினப்பு—கோபம்.

## இயல் 111

**நினைப்பெற்றோன் மாவேழன் என்ப தற்கு**
**நிகழ்த்துமொரு சான்றுண்டா? என்றான் வேழன்.**

ஏந்தலுரை கேட்டிருந்த வேழன், 'நிற்கு
யார்தந்தை? யார்தந்தை? மொழிக' என்ன,
'வேந்தரெலாம் பேர்கேட்டு நடுங்க நின்ற
வீரமகன் மாவேழன், தந்தை' என்றான்;
'சாந்துணையில் வருமகனே! வேழன் பெற்ற
தனிமகவு பெண்மகளே' என்றான் வேழன்;
'ஏந்தெழிலி எனையீன்றாள் வேல்விழிக்கோர்
இளவலன்றிப் பிறிதொருபெண் இல்லை' என்றான். 446

என்றமொழி ஈட்டியென நெஞ்சில் தைக்க,
'என்செய்தேன் ஐயாவோ! பாவி நானே
கொன்றுவிட வாளெடுத்துப் பாய்ச்சி விட்டேன்;
கொடுமையிது! கொடுமையிது!' என்றரற்றி,
நின்றஇரு கால்கள்தடு மாறக் கண்கள்
நிலைசுழல உலகனைத்தும் சுழலல் போலக்
குன்றனைய மாவேழன் மயக்கமுற்றுக்
குமுறிவரும் விழிப்புனலைத் துடைத்து நின்று, 447

'பெறலரிய பெருஞ்செல்வா! நின்னைப் பெற்ருேன்
பெருந்தவத்தன் மாவேழன் ருனே? உண்மை
பெறஒருசொல் மொழிந்திடுவாய்! பிறந்த தெற்குப்
பெண்மகவே எனவிருந்தேன்; வேல்வி ழிக்கு
நறுமலரின் தொடைசூட்டி மணந்து கொண்ட
நாயகன் நான்; மாவேழன் என்பான் நானே;
முறுவலனே! நீயவற்கு மகனே என்று
மொழிவதற்கோர் அறிகுறிதான் உண்டோ?'என்ருன்.

## இயல் 112

**பொன்னணி கண்டபின் புதல்வன் அவனென**
**உண்மை யறிந்ததும் உடைந்தனன் மனமே.**

தந்தையிவன் எனவுணர்ந்த காலே, நெஞ்சில்
  தாங்கரிய துயரடைந்து, மிகவி யந்து,
சிந்தையுடன் கண்கலங்கி, 'அந்தோ! எந்தாய்!
  சேர்த்தணைத்துக் கொஞ்சுகின்ற கைகள் கொண்டோ
இந்தவிதம் செயத்துணிந்தாய்! நின்னைக் காணின்
  என்மனந்தான் இளகுவதால் உண்மை காண
முந்திவரும் ஆர்வத்தால் கெஞ்சி நின்று
  முறையிட்டேன் மொழிந்தனையோ? மறுத்து விட்டாய்!

பெற்றெடுத்த அன்புணர்ச்சி பெற்று யென்னில்
  பிறரறியாப் புனைபெயராற் பொருவாய் கொல்லோ?
உற்றிளைத்த இருநாளும் உன்னைக் கொல்லா
  தொழிந்ததுமோர் நல்வேளை; ஈன்ற அன்னை
பெற்றுவக்கும் மங்கலநாண் காத்தேன் ஐயா!
  பெருமகனைப் பிரித்தேகி விடுவை என்றே
பெற்றவளும் பொய்ம்மொழிந்தாள்; நீயும் இன்று
  பெரும்பொய்யை மொழிந்தென்னைப் பிரித்தே விட்டாய்!

மகன்பிறப்பான் இதனையவன் கையிற் கட்டு!
மதித்தென்றும் கழற்ருமல் காக்க! என்று
புகன்றளித்த பொன்னணிபார்! அதன கத்தில்
பொறித்திருக்கும் நின்பெயரும் பார்பார்' என்றே
மகன்கொடுத்த பொன்னணியைப் பெற்ருேன் உற்ற
மனத்துயரை எடுத்துரைக்க வல்லார் யாரே?
அகலகலத் துடைவாள்பட் டொழுகும் செந்நீர்
அவன்சிந்தும் கண்ணீர்க்கு நிகரோ? இல்லை. 451

---

அகல் அகலம்—அகன்ற மார்பு.

## இயல் 113

**துடித்தே புலம்பித் தொடுவாள் கொண்டுயிர்**
**மடித்திட முனைந்தனன் மாழ்குறும் வேழன்.**

நின்னனைதான் கருவுற்றுத் திகழும் ஞான்றே
நிகர்வரிய வீரமகன் பிறப்பன் என்றேன்;
சொன்னவணம் அரியேற்றைப் பெற்றெடுத்தாள்;
சூரனென உரையாது பொய்ம்மை கூறி,
அன்னையவள் செய்பிழையால் உனையிழந்தாள்;
அறிவிலனாய்ப் புனைந்துரைத்த பொய்யால் நானும்
உன்னையிழந் துறுதுயரங் கொண்டேன்; அந்தோ!
ஒருபொய்க்கு விளைபயன்தான் இத்துணைத்தோ! 452

பெருவலியில் எனைநிகர்வாய் எனுங்கருத்தில்
பெற்றளனக் கெதிராவாய் எனப்பகர்ந்தேன்;
பொருவமரில் எதிரானாய் அந்தோ! இந்தப்
போர்க்களத்து மண்ணுக்கே கொணர்வேன் என்றேன்;
உறுமொழியின் படியுன்னைக் கொண்டு வந்தே
ஊர்மண்ணிற் கிடத்திவிட்டேன்; களத்து மண்ணே
மறவனுக்கு வாழ்வென்றேன்; சொன்ன வண்ணம்
வாழ்வதுவும் மண்ணானாய்! அந்தோ! அந்தோ! 453

---

453 ஆம் பாடலொடு 185, 189 ஆம் பாடல்களை ஒப்புநோக்குக.

வாரியுனை அணைத்தெடுத்து மார்பிற் சேர்த்து
மகிழ்கின்ற வாய்ப்பொன்றும் இல்லேன்; முத்த
மாரியுனக் களித்துவக்கும் பேறும் இல்லேன்;
மனந்துணிந்து செருமுனையில் உனது காலை
வாரிவிட, இருவிழியும் மாரி கொட்ட,
மண்மாரி பொழிகின்ற பேறு பெற்றேன்;
பாரிலெனைப் போலஒரு பேறு பெற்ற
பாவியைநான் கண்டதில்லை ஐயோ! ஐயோ! 454

சொலற்கரிய வீரன்தான் எனக்கு மைந்தன்
சூரன்தான் சிங்கந்தான் குறைவே யில்லை;
வெலற்கரிய போர்முனையில் திறமை காட்டி
வேறொருவன் மலையுங்கால் மாய்ந்தி ருப்பின்
குலக்கொழுந்தை மறக்குருத்தை வாழ்த்தி நிற்பேன்
கூறவொணு மகிழ்ச்சியினுல் சிரித்து நிற்பேன்;
புலைக்குரிய என்செயலால் பழிக்க நின்றேன்
பூமிஎலாம் எனைக்கண்டு சிரிக்க நின்றேன். 455

முடித்தலையில் அடித்தவற்றைப் பிய்த்துக் கொண்டு
முகத்தகத்தும் மார்பகத்தும் அறைந்து கொண்டே
'படித்தலத்தில் எனக்கினிமேல் வாழ்வெ தற்குப்
பாலகனைப் பின்தொடர்வேன்' என்று கூறி,
வடித்தெடுத்த கூர்வாளைக் கையிற் பற்றி
மாவேழன் கடிதோச்சக் கண்ட மைந்தன்
பிடித்திழுத்து 'வீரவுன துயிர்வி டுப்பின்
பிழைப்பனென எண்ணினையோ? பிழையேன் ஐய! 456

---

புலைக்குரிய—இழிந்த.

## இயல் 114

தற்கொலைக்கு முயன்றானைத் தடுத்துக் காத்துத்
தன்னினைவு பலித்திலதே எனக்க வன்றான்.

எனையிழந்த துயர்தாங்கித் துடிக்கும் அன்னை
இடர்துடைத்தல் நின்கடமை யன்றோ? ஐய!
எனையிழந்தாற் பெறலாகும்; நினையி ழப்பின்
என்அன்னை நிலைஎன்ன? அடஓ அம்ம!
முனையகந்தான் வீரனுக்குச் சொந்த மாகும்;
மொய்ம்புடையோய்! நிற்காணும் ஆர்வம் உந்தி
இனையவந்தேன்; கண்டுகொண்டேன்; மாற்றான்வாளால்
இறக்கவிலை; கவலற்க எந்தாய்! எந்தாய்! 457

வென்றிகொளும் பெருவீர! உடலி னின்று
விலகாமல் உயிரின்னும் நிலைத்த தைய!
துன்றிவரும் நாவலத்துப் படைஞர் எல்லாம்
துயரின்றித் திரும்பவழி விடுதல் வேண்டும்;
ஒன்றுபிழை செய்திலரால் ஒறுத்தல் வேண்டா;
உடன்பிறவா விடினுமவர் உறவாக் கொண்டேன்;
கன்றனையேன் எந்தையைத்தான் காண வந்தேன்,
கண்டுவந்தேன்; நினைவொன்று பலிக்க வில்லை. 458

---

முனையகம்—போர்க்களம். இனைய—வருந்த.

மூவகத்து வேந்தனென நின்னை யாக்கி,
முடிசூட்டிக் கோல்தந்தே அணையில் ஏற்றி,
நாவலத்தை வென்றதனை வயப்ப டுத்தி
நலஞ்சான்ற அரசிருக்கை நானும் பெற்றுக்
காவலர்க்கு நிகரில்லை என்னும் பாங்கில்
காத்தளித்து மகிழ்ந்திருக்க நினைவு கொண்டேன்
சாவகற்றிப் போரகற்றி இரண்டு நாடும்
தழைக்குமெனும் நினைவுகன வாயிற்' றென்றான். 459

## இயல் 115

**கரைந்துருகும் மாவேழன் கண்ணீர் சிந்திக்**
**காவலர்காள் இனிப்போரே யில்லை என்றான்.**

கரைந்துருகி அவனுரைத்த மாற்ற மெல்லாம்
 களிறனையான் கேட்டழுது விம்மி நின்றான்;
நிறைந்துவரும் மறக்குலத்து மைந்தர் தாமும்
 நெஞ்சுருகி உளைந்துமிக அரற்றி நின்றார்;
இரைந்தழுது புரண்டாலும் விளைவ தென்ன?
 இளமைந்தன் எழுந்துவரப் போவ தில்லை;
கரைந்தழுது முகம்விளர்த்த வேழன் அங்குக்
 கண்கலங்கும் காவலர்பால் ஒன்று கூறும். 460

'துணைவருவீர்! முடிந்ததுபோர்; இனிமே லென்றும்
 சொல்லரிய துயர்ப்படுத்தும் போரே இல்லை;
இணையொருவர் இல்லையென வந்த வீரன்
 இன்னுயிரும் வல்லமரும் விட்டான் என்று
துணைபுரியும் மாவலிக்குச் சொல்லி, வேழன்
 தொடுதல்செயான் படையினிமேல் என்றுங் கூறிக்
கணையுடைய மறவரெலாம் தம்நா டேகக்
 கண்காணித் தனுப்புக'வென் றாணை யிட்டான். 461

## இயல் 116

அருமருந்து பெற்றுவர வேழன் தூதோன்
றனுப்பினன்அம் மதலேக்கோன் மறுத்து விட்டான்.

படைக்கலங்கள் துளேத்தபெருங் காய மெல்லாம்
பட்டளவில் ஆற்றிவிடும் அரும ருந்து
குடைக்குரியன் மதலேக்கோன் பெற்றி ருத்தல்
குன்றனைய வேழற்கு நினைவில் தோன்ற,
நடைக்குயர் ந்த பரிவீரன் ஒருவற் கூவி
நாடாளும் மன்னவன்பாற் செலுத்தி நின்றான்;
விடைத்திறலன் நொடிப்பொழுதில் புரவி ஏறி
விரைந்தேகி வேந்தன்பால்அனைத்தும்சொன்னான். 462

'பாசறைமுன் நின்றென்னை இகழ்ந்து ரைத்த
பகைவனுக்கோ அருள்புரியப் போந்தான் வேழன்?
மூசுவலேப் படும்புலியைக் கொல்வ தன்றி
முனைந்தெழுக எனவிடுப்பார் உலகில் உண்டோ?
வீசிளனைக் கொன்றொழித்து நாடு பற்ற
விழைந்திங்கு வந்தவற்கோ கருணை செய்வல்?
தேசரவின் வாயகத்துப் பாலே வார்க்கத்
தெளிந்தமதி யுடையவர்யார் இசைவர்?' என்றான். 463

தேச—ஒளி.

## இயல் 117

கண்ணெதிரில் மகனிறக்கக் கண்டான் வேழன்
கதறினன் பதறினன் சாய்ந்தே விட்டான்.

மன்னவன்றன் பகைவனுக்கு மருந்த ளிக்க
மறுத்துரைத்தான் எனமொழிந்தான் வந்த தூதன்;
பன்னரிய பெருஞ்சினமோர் புறத்துப் பொங்கப்
படர்ந்துவரும் அருந்துயரம் அடுத்துத் தாக்கப்
பன்னெரியக் கடித்தடக்கித் தாழ்த்த லின்றிப்
பரியேறித் தான்செல்ல நினைத்தெ ழுந்தோன்
ஒன்னலரும் விழையுமுகன், உருவச் செம்மல்,
ஒப்பரியன் மலர்விழிகள் மூடக் கண்டான். 464

வெடித்துவிடும் மனமுடையான் துயரம் ஆற்றான்
வீறிட்டான் உடையனைத்துங் கிழித்தெ றிந்தான்;
பிடித்திழுத்துத் தலைமுடியைப் பிய்த்துக் கொண்டான்;
பெரும்பழியை எனக்கிழைத்த கொடுங்கை வாளே
ஒடித்தெறிவேன் எதற்கினிநீ? என்று கூறி
ஒள்வாளைத் தகர்த்தெறிந்தான்; வாய்ம டித்துக்
கடித்தெழுந்து பித்தனைப்போல் கதறி நின்றான்;
கண்ணெதிரிற் படுமகனைப் பார்த்து நின்றான். 465

---

பன்னெரிய—பல்நெரிய, ஒன்னலர்—பகைவர்.

'பெற்றவள்பால் நில்லாமல் இங்கேன் வந்தாய்?
பேதைமனங் கொண்டவனே! பகைக்கு லத்தைச்
செற்றஎன்வாள் கறைபடியச் செய்வ தற்கோ?
தீராத பழிஎனக்குத் தருவ தற்கோ?
உற்றவண் நீ உறைந்தனையேல் வாழ்ந்தி ருப்பை;
ஒருநாளில் என்றேனும் உன்னைக் காண்பல்;
பெற்றவளும் உண்மையினை மறைத்தாள்; அந்தோ!
பெரும்பகைபோல் எனக்கவளும் ஆகி விட்டாள். 466

ஒருமுறைதான் உன்முகத்தைக் கண்டேன்; ஆனால்
உறுதுயரைத் தாங்ககிலேன் அரற்று கின்றேன்;
கருவறையில் ஈரைந்து திங்கள் தாங்கிக்
கடுந்துயரால் உயிர்த்தெடுத்துப் பாலும் ஊட்டிச்
சிறுதுயிலும் கொள்ளாமல் பேணிக் காத்துச்
செய்யமுகங் கண்டுளத்துக் களித்த தாய்தான்
மறுகவரும் இக்கொடுமை எப்ப டித்தான்
மங்கையவள் ஆற்றுவளோ? ஐயோ பாவம்! 467

உண்டுடுத்து விளையாடிக் களைத்த யர்ந்தே
ஊசல்தனில் கண்வளர்தல் காணாப் பாவி
மண்தொடுத்த வெறும்புலத்தில் களைத்துச் சாய்ந்து
வளர்துயிலிற் கிடக்கின்றாய் கண்டு நின்றேன்;
கண்டெடுத்த நன்மணியைத் தோற்று விட்டேன்;
கன்றதனைப் பிரிந்தலறும் ஆவி னைப்போல்
வண்டுடுத்த குழலாளை வாடச் செய்தேன்;
மடந்தையவள் படுந்துயரம் எற்றோ? எற்றோ? 468

வீரத்தின் விளைநிலமே! கருணை கொள்ளும்
விறல்மகனே! கற்பகமே! செல்வக் கோவே!
தீரத்தின் வைப்பகமே! குணத்தின் குன்றே!
தெய்வமணிக் குலக்கொழுந்தே! ஆண்மை என்னும்
பேருக்கு வடிவளித்த உருவே! கண்ணே!
பெறற்கரிய மாமணியே! எனைப்பி ரிந்த
பாரத்தைச் சுமந்தினிநான் வாழ்தல் நன்றோ?
பழுவதனால் பயனென்ன? என்ற ரற்றி, 469

அணிந்திருந்த வீரவுடை படைக்க லங்கள்
அத்தனையும் எரியிட்டுத் தீய்த்தொ ழித்தான்;
தணிந்திருந்த பாசறையைப் பிடித்து வீழ்த்தித்
தலைப்பறந்த கொடியெடுத்துக் கிழித்தெ றிந்தான்;
அணிந்தொளிர்ந்த இருக்கைதனைச் சுக்கு நூறு
அடித்தொடித்தான்; வீரத்தின் சின்ன மெல்லாம்
திணிந்திருந்த கவசத்தை பின்னம் செய்தான்
திகில்கொண்டோன் அமர்க்களமே ஆக்கி விட்டான்.

தினவடங்கு மாவேழன், பெற்ற மைந்தன்
திருமுகத்தை மறுமுறையும் கூர்ந்து நோக்க,
மனமடங்கிச் சினமடங்கி ஆற்றல் சான்ற
மறமடங்கிச் செயலடங்கிப் பொருது வெல்லும்
நினைவடங்கி உடலடங்கிச் சுழன்று பாயும்
நிலையடங்கிக் கொலையடங்கி நாட்டை யாளும்
கனவடங்கிச் சினமடங்கல் மதிமு கந்தான்
கலைமலிந்து மும்மடங்கு பொலியக் கண்டான். 471

---

மடங்கல்—சிங்கம்.

முகங்கண்டு மனமுடைந்து, ‘குலக்கொழுந்தை
  முளைத்துவரும் பொழுதத்தே கிள்ளி விட்டேன்;
அகங்கொண்ட என்மைந்தன் விழித்தலின்றி
  அமரகத்துத் துயில்கின்ருன்; குலம்விளக்கும்
முகங்கொண்ட மணிவிளக்கை அணைத்து விட்டேன்;
  மூடிவரும் இருளொன்றே பரவக் கண்டேன்;
இகழ்வுண்ட வாழ்வினிமேல் எனக்கெதற்கோ?
  என்றலறி வீழ்ந்தவன்தான் எழவேயில்லை. 472

## இயல் 118

மகனும் கணவனும் மடிந்ததால் வேல்விழி
நகையிழந் தழுதே நலிந்துயிர் துறந்தனள்.

பெற்றெடுத்த மகன்மடிந்தான் மாலை யீந்த
பெருங்கிழவன் தான்மடிந்தான் என்ற செய்தி
விற்ருெடுத்த புருவத்தாள் வயந்தம் வாழும்
வேல்விழியாள் செவிப்படலும் ஆற்ரு ளாகி
முற்றெரிக்கும் அனல்மூட்டி அதனுட் பாய்ந்து
மூழ்குதற்கு முயன்ருளைத் தடுத்தா ராக,
உற்றிருக்கும் வாழ்வெதற்கோ? நாளும் மாயும்
உயிரெதற்கோ? எனமொழிந்து மனமு டைந்தாள். 473

உருமாறித் துயில்மாறி நினைவும் மாறி
உணவுகொளும் மனம்மாறித் துயரம் ஏறிக்
கருவூறிக் கிடந்தானை அனுப்பி வைத்த
கதைமாறிப் போனதையே நினைந்து நைந்தாள்;
பரியேறிப் போனவன்கைப் படைகள் கண்டு,
பாலனவன் அணிந்திருந்த உடைகள் கண்டு,
வெறிஏறி அழுதிடுவாள் உருகி நின்று
விழுந்திடுவாள் எழுந்திடுவாள் தொழுவாள் அன்னை.

'திரைசூழ்ந்த இவ்வுலகில் நிகரே யில்லாத்
  தீரனைத்தான் கணவனெனப் பெற்றிருந்தேன்;
அரிநேர்ந்த மகனைத்தான் பெற்றிருந்தேன்;
  ஆயினுமப் பேறனைத்தும் நிலைக்க வில்லை;
புரைதீர்ந்த நன்மைதரும் என நினைந்தே
  பொய்ம்மொழிந்தேன் அம்மொழியால் என்றன் வாழ்வு
கறைசேர்ந்து போனதம்மா! இன்பம் என்னும்
  கரைதூர்ந்து வீழ்ந்ததம்மா!' என்று நோவாள். 475

கொழுநனுக்கே அழுவாளோ? சுமந்து பெற்ற
  கொழுந்தினுக்கே அழுவாளோ? தனக்கு நேர்ந்த
பழுதினுக்கே அழுவாளோ? மகன்பாற் கொண்ட
  பரிவினுக்கே அழுவாளோ? தந்தை கொன்ற
இழிவினுக்கே அழுவாளோ? அந்தோ! அந்தோ!
  இரவினுக்கும் பகலினுக்கும் அழுதே தீர்ந்தாள்;
அழிவினுக்கே ஆளாகார் யாரே உள்ளார்?
  அழுதழுது கரைந்துருகித் தீர்ந்தே போனாள்! 476

போர்ப் படலம் முற்றும்.

படலம் 5. பாடல் 476.

: கவிஞரின் படைப்புக்கள் :

1 *முடியரசன் கவிதைகள்
2 காவியப் பாவை
3 கவியரங்கில் முடியரசன்
4 பூங்கொடி
5 வீரகாவியம்
6 பாடும் பறவை

* 1966 இல் தமிழக அரசின் பரிசில் பெற்றது

தி சௌத் இந்தியா பிரஸ், காரைக்குடி–1. போன் : 300